# கல்கி

## பொருளடக்கம்



சரியானது எது என்று உணர்ந்த பின்னரும், அதைச் செய்யாதிருத்தல் கோழைத் தனமாகும்.

—கன்பூஷியஸ்

**விசுவாவசு ஆவணி 20 — செப்டம்பர் 5**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 25 ★ இதழ் 6

# ஸ்ரீபிரகாசாவின் வருத்தம்

**ப**ழைய நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்து, ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் சுதந்திர தினத்தன்று ஒரு கட்டுரை எழுதியுள்ளார். 'வெள்ளையனே வெளியேறு' என்று 1942ம் ஆண்டு ஆகஸ்டு 8ந் தேதி காங்கிரஸ் மகாசபை வெளியிட்ட தீர்மானத்தின் புனிதமான ஆணைக்கு நேர்மாறாக இப்போது அக்கட்சி செயல்பட்டு வருவதை வருத்தத்துடன் சுட்டிக்காட்டியுள்ளார். 'தேசத்தின் எல்லா முக்கியமான கட்சிகளும், கோஷ்டிகளும் ஒன்று சேர்ந்து கூட்டுறவு சர்க்கார் நிறுவ வேண்டும்; அதிகாரத்தை யெல்லாம் ஒரு மைய ஸ்தானத்தில் குவிக்கும் மத்திய சர்க்கார் அமையக் கூடாது; ராஜ்ய சர்க்கார்களுக்கே சுய நிர்ணயப் பொறுப்பும் முக்கியமான அதிகாரங்களும் இருக்க வேண்டும்' - இவ்வாறெல்லாம் கூறிய மேற்படி தீர்மானம், ''இவையே சுதந்திர இந்தியாவின் ஆட்சி பற்றி காங்கிரஸ் கொண்டுள்ள கருத்துக்கள். எனினும், காங்கிரஸுக்குத் தானே அதிகாரத்துக்கு வரவேண்டுமென்ற நோக்கம் இல்லை'' என்றும் கூறிற்று. இதை எடுத்துக் காட்டியுள்ள ஸ்ரீ ஸ்ரீபிரகாசா, ''இன்று காங்கிரஸ் தலைவர்களுக்கு ஆட்சி அதிகாரப் பொறுப்பு தங்கள் கைகளை விட்டுப் போகக் கூடாது என்பதொன்றே அல்லவா நோக்கமாக உள்ளது?'' என்று வினவுகிறார்.

பழைய தீர்மானத்தின் கருத்துக்களை இப்போது நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டும்; டில்லியிலும் ராஜ்யங்களிலும் கட்சி அரசாங்கங்களுக்குப் பதில் தேசிய அரசாங்கங்கள் அமைய வேண்டும் என்பது ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்களின் கருத்து. ராஜ்ய சர்க்கார்கள் அதிக சக்தியைப் பெற்றிருக்க வேண்டும் என்றும், முதன்மந்திரிகள் ஒவ்வொரு விஷயத்துக்கும் டில்லிக்கு ஓடி அபிப்பிராயம் கேட்கும் மானக்கேடான நிலை மறைய வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். ''தேச விவகாரம் முழுவதையும் கவனமாக அலசிப் பார்த்துப் புது முடிவுகள் எடுக்கத் தருணம் வந்து விட்டது. நமக்கு வழிகாட்டியாக இருந்த அன்றைய பெரியோர்கள் வகுத்த பாதையில் நமது வாழ்க்கையைச் செலுத்த வேண்டும். இல்லாவிடில் தேசத்தை ஆபத்தான நிலைக்கு ஆளாக்கி விடுவோம்!'' என்கிறார் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா.

ஸ்ரீ ஸ்ரீபிரகாசாவின் ஆட்சேபத்துக்குச் சுலபமாகப் பதில் சொல்லி விடுவார்கள். ''அரசியல் சாஸனத்தின் படி இப்போது ஆட்சி முறை அமைந்துள்ளது. இது சுதந்திரமான அரசியல் நிர்ணய சபை தனக்குத் தானே தந்து கொண்ட சாஸனம். இதன்படிதான் நிர்வாகம் நடக்க வேண்டுமேயன்றிப் பழைய காங்கிரஸ் தீர்மானத்தின்படி அல்ல'' என்று கூறி விடுவார்கள். இது வெறும் சட்டபூர்வமான வாதம்தான். காந்திஜி எத்தகைய சுதந்திர ஆட்சிக்கு வாக்குறுதி அளித்தாரோ அதனுடைய உயிரை இன்று காண முடியவில்லை. காந்திஜி கூறிய ஆட்சி முறைக்காகத்தான் மக்கள் போராட்டம் நடத்தினார்கள். எனவே அவரது வாக்குறுதியை மதித்து அதன்படி நடக்க வேண்டியது காங்கிரஸின் கடமை.

ஆனால் இன்று காங்கிரஸ் கெட்டுப் போய் விட்டதே என்று ஸ்ரீ ஸ்ரீபிரகாசா வருந்துகிறார். அதைத்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

திருத்த வேண்டும் என்று ஆசைப்படுகிறார். இது முடியாத காரியம். மனித ரத்தத்தின் சுவை கண்ட நர மாமிசபட்சிணிபோல் அதிகாரத்தின் சுவையைக் காங்கிரஸ் நன்றாக அநுபவித்து விட்டது. நர மாமிசபட்சிணியைச் 'சைவ'மாக்குவது இயலாத காரியம். ஒரு வித்தியாசம்: நரமாமிச பட்சிணியும் சாமானிய மனிதனே ஆனபடியால் காலக்கிரமத்தில் இறந்து போவான்; ஆனால் அரசியல் கட்சி வயது முதிர்வதால் இறப்பதில்லை; வயது ஏற ஏற மேன்மேலும் கேவலமான அங்கத்தினர்களால் அதிக பலம் பெற்று வரும். 'பெர்மிட் — லைசென்ஸ் சோஷலிஸம்' என்கிற மோகனாஸ்திரம் உள்ள வரையில் காங்கிரஸின் வளர்ச்சிக்குக் குறைவு இல்லை. அதோடு, மக்கள் அடிமைத்தனத்துக்குப் பழக்கப்பட்டுப் போய், உயர் வர்க்கத்தினரும் தீரமோ தியாகமோ இன்றி வெற்று வாழ்க்கை வாழ்ந்தால் ஆளும் கட்சி சிரஞ்சீவியாக அக்கிரம ஆட்சி புரியும்.

# இரண்டு மாய வாதங்கள்

'ஒவ்வொரு ராஜ்ய சட்டசபையும் சாதகமாக 'வோட்' செய்தாலன்றி ஆட்சி மொழி ஷரத்துக்கள் அமுலுக்கு வராது' என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. எல்லா சட்டசபைகளும் ஒப்புக் கொண்டால்தான் புதிய மாற்றம் செய்யப்படும் என்கிறார்கள். இதனால் எந்தச் சட்டசபைக்கும் புதிய மாறுதல் நிகழாமல் தடுக்கும் சக்தி இருப்பதாகக் கூறப் படுகிறது. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், இந்தச் சக்தியைக் கொண்டு சட்டசபை ராஜ்ய நலன்களைக் காப்பாற்ற முடியும் என்று தோன்றும்.

ஆனால் உண்மையில் இப்படி நடக்குமா? எல்லாச் சட்டசபையிலும் மெஜாரிட்டியாக உள்ள காங்கிரஸ்காரர்களுக்குத் தில்லியின் ஏற்பாட்டை மறுக்கும் துணிவு இருக்குமா? சட்டசபைகளில் மெஜாரிட்டியாக உள்ளவர்கள் யாவரும் அகில இந்திய காங்கிரஸின் கைப்பாவையாகவே உள்ளபோது சுதந்திரமான முடிவுகளை எப்படி எதிர்பார்ப்பது? சட்டசபையில் உள்ள காங்கிரஸ் கோஷ்டியினர் ராஜ்ய மக்கள் கருத்தைப் பிரதிபலிப்பார்கள் என்றோ, காங்கிரஸின் கருத்துக்குத் தாளம் போடமாட்டார்கள் என்றோ எதிர்பார்க்க இடம் ஏது? 'மொழி விஷயத்தில் கொறடாப் பிரயோகம் இல்லை' என்றே விலக்களித்தாலும் கூட; நடைமுறையில் மத்திய ஆணைக் குழுவுக்கு மாறாக ராஜ்ய சட்டசபை அங்கத்தினர் நடப்பார்கள் என்று நினைப்பதற்கில்லை.

காங்கிரஸ் கட்சிக்குள் எத்தனை உட்பூசல்கள் இருந்தாலும் அனைவரும் ஏகோபித்து வாழ்ந்தால்தான் ஊழல் ஆட்சியின் லாபங்களை எல்லாரும் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்ற உணர்வு அக்கட்சியினரை ஒன்றாக்கியுள்ளது. இந்த வாய்ப்பை இழக்க யாரும் மனம் கொள்ள மாட்டார்கள்.

'சட்டசபை மெஜாரிட்டி' என்ற மாய வாதத்தைப் போன்ற இன்னொன்று, 'நிர்ப் பந்தமில்லை; சிறுகச் சிறுகத்தான் ஹிந்தியைப் புகுத்துவோம்' என்பது. 'சிறுகச் சிறுக' என்றாலும் இப்போதே வேலை தொடங்கத் தான் வேண்டும். 'இன்றில்லை; பத்துப் பதினைந்தாண்டுகளுக்குப் பின்பே ஹிந்தி பூரண அதிகாரம் பெறும்' என்று சொன்னாலும் அதற்கு இன்றிலிருந்தே அடிப்படை அமைத்துத்தானாக வேண்டும். இப்போதிருந்தே நாம் விட்டுக் கொடுத்து அடிபணிந்து தானாக வேண்டும். ஹிந்தி மொழிக்குப் பரிந்து 'ஜனநாயக' முறையை மேற்கோள் காட்டுவது அபத்தம். ஜனநாயகத்தின் மீது காங்கிரஸ் நிகழ்த்திய கத்திக் குத்துக்களில் மிக ஆழமானது ஹிந்தித் திட்டமேயாகும்.

அனைவருக்கும் பொதுச் சொத்தாக உள்ள ஆங்கிலத்தை நீக்கி, ஹிந்தி முதலாளிகளின் ஆதிக்கத்தை ஏற்படுத்தும் ஆட்சி மொழித் திட்டம் காங்கிரஸின் சமதரும சோஷலிஸத்துக்கு நேர் விரோதமானது.



## கிரிக்கெட்டுக்குப் புதிய காரியதரிசி

சில மாதங்களாகக் கிரிக்கெட் ரசிகர்கள் பலத்த வாக்குவாதத்தில் ஈடுபட்டிருந்தனர். மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் கோஷ்டியினர் நம் நாட்டுக்கு வந்து ஆடப் போகிறார்களா இல்லையா என்பதைப் பற்றித்தான். இந்திய சர்க்கார் கடைசியில் அவர்கள் வந்து விளையாட அனுமதி வழங்கி விட்டனர். இந்த சந்தோஷமான செய்தி கிடைத்த சூட்டோடு இப்போது சென்னை கிரிக்கெட் ரசிகர்களுக்கு மற்றொரு மகிழ்ச்சிகரமான செய்தியும் கிட்டியுள்ளது. சென்னையில் நடக்கும் டெஸ்ட் பந்தயங்களைச் சிறப்பாக நிர்வகித்து அனுபவம் பெற்ற சென்னை ராஜ்ய கிரிக்கெட் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ ஸ்ரீராமன் இந்திய கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டின் கௌரவ காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இது சென்னைக்குப் பெருமை. அவருக்கு நம் நல் வாழ்த்துக்கள்.

# துணை பட்ஜெட்

பிரிட்டன் முதலிய நாடுகள் பற்றுக்குறை பட்ஜெட் தயாரிக்காமல் தடுப்பதற்காக அவற்றின் இறக்குமதி வரிகளை உயர்த்துமாறு உலக பாங்கு யோசனை கூறுவதுண்டு. தொழி லுற்பத்திக்கு அவசியமான உருக்கு முதலிய கச்சாப் பொருள்களும், மூல இயந்திர வசதியும் படைத்த பிரிட்டன் போன்ற நாடுகள் தங்களது இறக்குமதிப் பண்டங்களின் வரியை உயர்த்துவதால் அவர்களது உள் நாட்டு உற்பத்தி பாதிக்கப்படாது. ஆனால் இந்தியாவின் விஷயம் வேறு. உற்பத்திக்கு அவசியமான இயந்திரங்களையும், உருக்கு முதலிய கச்சாப் பொருள்களையும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம். எனவே இறக்குமதி வரிகளை உயர்த்துவதால், நம்முடைய உற்பத்தி விலையும் அதிகமாகும். அடக்க விலை அதிகமானால் இறுதியில் அந்த விலை உயர்வு எப்படியேனும் மக்களின் மீதே மாற்றப்படும் என்பது நாம் கண்கூடாக அநுபவித்து வரும் உண்மை. எனவே உலக பாங்கிடம் நல்ல பெயர் வாங்க வேண்டு மென்பதற்காக ஸ்ரீ டி. டி. கே. அவர்கள் ஒரு துணை பட்ஜெட்டை வெளியிட்டு நாட்டின் தொழில் உற்பத்திக்கு மேலும் ஊக்கம் விளைவித்திருப்பது மன்னிக்க முடியாத கொடுமையாகும். பற்றுக்குறை பட்ஜெட்டும் போடாமல், வரிகளையும் உயர்த்தாமல், திட்டச் செலவுகளைக் கணிசமாகக் குறைக்க வேண்டிய தொன்றே முறை. உலக பாங்கின் ஆதரவைப் பெறவில்லை என்றே நம் பப்படும் பிரம்மாண்டமான திட்டத்தை அப்படியே மாற்றாமல் வைத்துக் கொண்டு, அதற்காகப் புது வரிகள் விதிப்பது முறை கேடானதாகும்.

துணை பட்ஜெட்டினால் பொது மக்கள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று பேசி என்ன பயன்? பட்ஜெட் வெளியான மறுதினமே பொது மக்கள் உபயோகிக்கும் சிரஸினின் விலை லிட்டர் ஒன்றுக்கு ஆறு பைசா உயர்ந்துவிட்டது.. பெட்ரோல், உயர் ரக டீஸல் எண்ணெய் இவற்றின் மீது வரி அதிகமாக்கப்பட்டிருப்பதால், பஸ் கட்டணங்களும் அதிகமாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதுவும் பொதுமக்கள் மீது விழும் சுமைதான்.

173 கோடி ரூபாய் வருமானத்துக்குத் துணை பட்ஜெட் போட்டும், பொதுமக்களுக்கு அநுகூலமாகப் பழைய வரிகள் எதையும் குறைக்காதது வருத்தத் தக்கது. பெருமளவில் இறக்குமதி வரி விதிக்கப்பட்டுள்ள பொருள்களில் முக்கியமானவை மருந்துகள், குழந்தைகளுக்கான பால் உணவு. இவை பொதுமக்களும் உபயோகிப்பவை. வயிற்றுக்குப் போதிய உணவு கிடைக்காத ஏழை மக்கள் பசி தீருவதற்காக வெற்றிலைப் பாக்கு போட்டுக் கொள்ளுவது நம் நாட்டில் ஆழமாக நிலைப் பட்டுவிட்ட வழக்கம். ஆனால் பாக்குக்கோ அதன் அடக்க விலையை விட அதிகமாகச் சுங்க வரி விதிக்கப்பட்டிருக்கிறது.

பொதுமக்களுக்கும் தீமை செய்து, உற்பத்தியாளரின் உற்சாகத்துக்கும் நல்ல சமயத்தில் உலை வைக்கும் கைங்கரியத்தை நிதி மந்திரி சாதித்திருக்கிறார். எனினும் துணை பட்ஜெட்டைப் பற்றி ஆச்சரியப்படுவதற்கேதுவுமில்லை. 'சோஷலிஸ ஜாதி' ஏற்பட இடமளித்த பின் அதற்கே உரிய ஜாதிக் கொடுமைகளையும் அநுபவித்துத்தான் ஆக வேண்டும். காங்கிரஸின் ஐந்தாண்டுத் திட்டங்களை ஒப்புக் கொண்டால் அதன் வரித் திட்டங்களையும் ஏற்க வேண்டியதுதான். மாய சித்தாந்தங்களைப் பின்பற்றுவோர் மனித உணர்ச்சிகளுக்கு மதிப்புத் தராமல் வெறும் பள்ளிக்கூடக் கணக்குப் போல்தான் பட்ஜெட் தயாரிப்பார்கள்.

**செப்டம்பர் 5-ம் தேதி ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களின் 78வது பிறந்த நாள். பல்லாண்டு வாழ்க!**





S. Radhakrishnan

# ராஜாஜியின் கருத்துக்கள்

கருத்தடைத் திட்டம் தருமத்துக்கும் பண்புக்கும் ஊறு விளைவிக்கும் என்பதோடு, தற்போதைய ராணுவத் தேவைக்கும் விரோதமாகும் என்று நான் எழுதியிருந்தேன். இந்தக் கடைசிக் காரணத்தை ஒரு சமாதானப் பிரியர் கண்டனம் செய்திருக்கிறார். காந்தி மகான் நம்முடன் எத்தனையோ நாட்கள் வாழ்ந்து, நமது லட்சிய வாழ்வைப் பல வழிகளில் நடத்திக் காட்டியும் நமது தேசிய வாழ்வில் இன்னும் ராணுவமின்றி இருக்க முடியவில்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அசட்டு இலட்சியவாதத்தால் பிரத்தியட்ச ஆபத்தைத் தவிர்க்க முடியாது. நாம் பெருத்த சைன்யம் வைத்திருப்பதோடு ஸப்மெரீன் வாங்கக் கூடத் திட்டமிட்டு வருகிறோம். ஆக்கிரமிப்பில் நமது பகைவர்கள் முனைந்துள்ளபோது நாம் பெருத்த உயிர்த் தியாகங்களுக்குத் தேசத்தைத் தயார்ப்படுத்தத்தான் வேண்டும். சீனா தற்போது எப்படி யுத்த முஸ்தீபில் தீவிரமாக இருக்கிறது என்பதை அனைவரும் அறிவர். ஆயுதங்களாலும் தளவாடங்களாலும் மட்டும் இந்தப் போரை முடித்துவிட முடியாது.

ஜனத்தொகை என்பது கொள்ளை நோயும் பஞ்சமும் போல் திடீரென்று விசுவரூபம் எடுக்கும் பிரச்னையல்ல. சிறுகச் சிறுகத்தான் ஜனத் தொகை உயரும். எனவே பெரும் போரைப் போன்ற எதிர்பாராத நிகழ்ச்சிகளால் இந்த உயர்வு வெகுவாகப் பாதிக்கப் படக்கூடும். இச்சமயத்தில் மக்கட் தொகையைக் கட்டுப்படுத்துவது பற்றிப் பேசுவது விவேகமல்ல.

ஃஃஃ

காச்மீரத்தை இன்னொரு வியட்நாமாக ஆக்க வேண்டுமென்பதே பாகிஸ்தானின் திட்டம் எனத் தோன்றுகிறது. நம் தரப்பில் முதலடியைப் பலமாகத் தரவேண்டியது அவசியம். எதிராளி பயங்கொண்டு, புது ஊடுருவல் நிகழ்த்தாதவாறு செம்மையாகத் தாக்க வேண்டியதே நாம் எடுத்த எடுப்பில் செய்ய வேண்டியது.

ஆனால் ராணுவ பலத்தைத் தொடர்ந்து ராஜநீதி செயல்பட வேண்டும். ராணுவ நடவடிக்கையோடு விவேகமான கொள்கை வகுப்பதிலும் கவனம் செலுத்த வேண்டும். காச்மீரம் இந்தியாவின் ஓர் அங்கமே என்கிற சர்க்கார் கருத்துக்கு உலக நாடுகள் பலவற்றின் ஆதரவு இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். காச்மீர விவகாரத்தை பாகிஸ்தான் — இந்தியா இவற்றுக்கிடையேயுள்ள ஒரு நஞ்சை — புஞ்சை வியாஜ்யமாக மட்டும் நினைக்காமல், உயிருள்ள காச்மீர மக்களின் பிரச்னையாகக் கருத வேண்டும். காச்மீரம் இந்தியாவுடன் சேருவதா, பாகிஸ்தானுடன் சேருவதா, அல்லது தனித்து இருப்பதா என்பதில் காச்மீர மக்களின் கருத்து வெளிப்பட வழி செய்ய வேண்டும். இல்லாவிடில் காச்மீர மக்களின் சுதந்திரத்துக்காக அவர்களின் சார்பில் பாகிஸ்தான் போராடுவதாகக் கூடப் பிரமை ஏற்படுத்தி விட முடியும்!

ஃஃஃ

நான்காவது திட்டத்தின் விளைவாகப் பண வீக்கமும் விலைவாசி உயர்வும் ஏற்படுவது நிச்சயம். பணத்தின் மதிப்புக் குறைந்து விடுவதால் தொழிலாளரின் ஊதியத்தை உயர்த்தினாலும் அவர்கள் நடைமுறையில் எந்த நல்ல பலனையும் காண முடியாமல் போகும். சோஷலிஸத்துக்கும் இந்த ஏற்பாட்டுக்கும் தொலைதூரமாகும். தேசத்தின் நல்ல பிரஜைகளும், பொருளாதார அறிஞர்களும் இவ்வுண்மையைத் தொழிலாளர்களுக்கு உணர்த்துவதை விடச் சிறந்த சேவை எதுவுமில்லை.

ஃஃஃ

ஆள்கிற கட்சி பிரத்யட்சக் கண்ணோட்டமின்றிச் செயலாற்றி வருவதாக ஆசாரிய விநோபா பவே பேசியிருக்கிறார். 'உணவுக் கொள்முதல் ரேஷன் முறை முதலிய திட்டங்களை எவ்வளவு நல்லெண்ணத்துடன் அமுல் செய்தாலும் அவற்றால் மக்களின் பிரச்னை தீராது. காந்திஜி கூறியதுபோல் சுதந்திரம் வந்தவுடன் காங்கிரஸ் மக்களுக்குச் சேவை செய்கிற ஒரு சங்கமாக மாறியிருந்தால் தேசம் பல தீமைகளிலிருந்து காப்பாற்றப்பட்டிருக்கும்' என்கிறார் அவர். முக்கியமாக காங்கிரஸ் ஆட்சி என்ற தீமையிலிருந்து காப்பாற்றப் பட்டிருக்கும் என்று நான் கருதுகிறேன்.

ஃஃஃ

நோபல் பரிசு பெற்ற பேராசிரியர் லினஸ் கார்ல் பாலிங் அணு ஆயுத சோதனைகளை எதிர்த்துப் போராட்டம் நடத்திக் கொண்டிருந்தபோதே அவருக்கு கென்னடியிடமிருந்து வெள்ளை மாளிகைக்கு அழைப்பு வந்தது. மனச்சாட்சிக்கும், மரியாதைப் பண்புக்கும் மோதல் ஏற்படாமல் அவர் இவ்வாறு செய்தாராம்: பகலில் வெள்ளை மாளிகையின் முன்பு மறியல் செய்தார். மாலையில் அதே மாளிகைக்குச் சென்று ஜனாதிபதியின் விருந்தில் கலந்துகொண்டார்.

ஃஃஃ

வியட்நாமில் அமெரிக்கா நேரடியாகப் பயங்கர முறையில் தாக்குதல் நிகழ்த்துவதைப் பலர் ஆட்சேபிக்கிறார்கள். ஆனால் எதிராளி கெரில்லாப் போர் முறையையும், வேறு சம்பிரதாய விரோதமான நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும்போது மறு தரப்பினரும் அதற்கு ஈடு கொடுக்கத்தானே வேண்டும்? இதைத்தான் அமெரிக்க அறிஞர் ஸ்க்லேஸிங்கர் எடுத்துக் காட்டியிருக்கிறார். 'வெறும் சூத்திரங்களே பிரச்னைகளைத் தீர்த்து விட்டால் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் உண்மையில் வார்த்தை மந்திரங்களுக்குப் பிரச்னைகள் பணிவதில்லை. வியட்காங் படையினர் தங்களுக்கே வெற்றி என்று எண்ணும் வரையில் நாம் அவர்களுக்கு ஈடாகப் போர் செய்துதானாக வேண்டும். இல்லாவிடில்—ஒரு வழியாக வியட்நாமிலிருந்து பின்வாங்க வேண்டும்' என்கிறார் அவர்.

பொதுவாகச் சட்டசபையாளர்களைப் பற்றிய சில கசப்பான உண்மைகளை எடுத்துக் காட்டிய ஜெனரல் கரியப்பா அவர்களைத் தண்டிக்க வேண்டும் என்று ஆந்திர சட்டசபையாளர் முயற்சி எடுத்தபோது வால்ட் விட்மனின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் திமிருக்கு எல்லையே இல்லை' என்று அவர் கூறினார். 'நான் மிருகங்களோடு ஒற்றுமையாக வாழ முடியுமென நம்புகிறேன். அவை அவ்வளவு அமைதியாகவும் தன்னடக்கத்துடனும் இருக்கின்றன. மனித உலகம் முழுவதிலும் யாருமே மதிப்புக்குரியவராகவோ, தொழிலுக்குமுள்ளவராகவோ காணப்படவில்லை' என்று கூறியவரும் இதே வால்ட் விட்மன்தான்!

ஃஃஃ

இஸ்ரேல் மக்களில் லட்சக் கணக்கானவர் ஹிட்லர் காலத்து ஜெர்மானியரால் கொடுமைக்கு ஆளானவர்கள். அவர்களின் உடம்பிலேயே இந்தக் கொடுமைச் சின்னம் பச்சை குத்தப்பட்டிருக்கிறது. அவ்வாறிருந்தும், இன்று ஜெர்மனி தன் ராஜாங்கத் தூதரை இஸ்ரேலுக்கு அனுப்பியிருக்கிறது. இஸ்ரேலும் தனது தூதரை ஜெர்மனிக்கு அனுப்புகிறது. இரு நாடுகளிடையே நல்ல ராஜரீக உறவு நிலைப்பட்டிருக்கிறது.

இஸ்ரேலில் ஜெர்மனத் தூதரை எதிர்த்து இங்குமங்குமாகச் சிலர் கிளர்ச்சி செய்திருக்கிறார்கள். இது குறித்து ஒரு பத்திரிகை எழுதுவதாவது: 'ஆரம்ப காலத்து விரோதங்களையும் சிக்கல்களையும் தீர்க்க வேண்டுமாயின் நம் நாட்டு அரசியல்வாதிகளுக்குச் சகிப்புத் தன்மையும், அநுதாப உணர்ச்சியும் அத்தியாவசியமாகும்.'

இதிலெல்லாம் நமக்கும் உயர்ந்த படிப்பினையும் உதாரணமும் உள்ளன.

ஃஃஃ

தேசிய இலட்சியங்களை நிறைவேற்றுவதில் மக்களின் நடத்தை, மனப் போக்கு இவற்றுக்கு மட்டுமின்றி, ஆட்சியாளர் பின்பற்றும் பொருளாதார முறைக்கும் முக்கியமான இடமுண்டு. சுதந்திரப் பொருளாதாரத்தைப் பின்பற்றிய மேற்கு ஜெர்மனியில் இன்று வேலையில்லைமைப் பிரச்னை தீர்ந்து விட்டது. இந்த ஆண்டின் முதல் ஆறு மாதங்களில் மட்டும் மேற்கு ஜெர்மனி மூன்று லட்சம் அந்நிய நாட்டினருக்கும் உத்தியோகம் அளித்திருக்கிறது. ஏழு லட்சம் வேலைகள் இன்னும் காலியாக உள்ளன. 'சர்க்கார் நிர்வகிக்கும் பொருளாதாரம் வேண்டுமா? சுதந்திரப் பொருளாதாரம் வேண்டுமா?' என்பதற்கு இதைக் காட்டிலும் விடை வேண்டாம்.

ஃஃஃ

ஆகஸ்ட் 22ந் தேதி வெளியான 'ஸ்டேட்ஸ்மனி'ன் இரண்டு செய்திகள், தாமறியாமலே ஹாஸ்ய மணிகளாக ஜொலிக்கின்றன. 'பாகிஸ்தான் சமாதானத்தை விரும்பும் நாடு' என்று பூட்டோ அவர்கள் சொல்லியிருப்பது. மற்றது: 'ஹிந்தியை ஆட்சிமொழியாக்கினால், என்ஜினீயர்களும், டாக்டர்களும் பெருகுவர்' என்று ஸ்ரீ மொரார்ஜி தேசாய் பேசியிருப்பது.

ஃஃஃ

பார்லிமென்ட் அங்கத்தினர் ஒருவர் இந்தியப் பிரதமரிடம் தனித்துப் பேசும்போது கீழ்க்கண்ட மூன்று கேள்விகளை ஒளிவு மறைவின்றிக் கேட்டாராம்:

"(1) தெற்கு வியட்நாம் சர்க்கார் அமெரிக்காவின் கைப்பாவை என்பது போலவேதான் காச்மீரத்திலுள்ள ஸாதிக் சர்க்காரும் டில்லியின் கைப்பாவையா?

(2) அநுபவத்தின் மூலமன்றி, ராஜரீகமாகவே பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும் என்று நாம் அமெரிக்காவுக்கு உபதேசிக்கிறோம். இது காச்மீரத்துக்குப் பொருந்தாதா?

(3) வியட்நாமின் சுதந்திரப் படையாகக் கருதப்படும் வியட்காங்குடன் உடன்பாடு செய்துகொள்ளாவிடில் வியட்காங் பிரச்னைக்கு முடிவு காண முடியாது என்று நாம் அமெரிக்காவுக்கு மீண்டும் மீண்டும் எடுத்துக் காட்டுகிறோம். ஷேக் அப்துல்லாவுக்கும் அவரது சகாக்களுக்கும் இது பொருந்தவில்லையா?"



கல்யாணிக்குத்
தெரியும்
அவள் பணம்
சென்றடைந்த
இடம்



ராதாவோ
தன் பணம்
போன இடம்
புரியாமல் என்றுமே
திகைப்பவள்

வரவுக்கேற்ற செலவு செய்வதிலே கண்ணும் கருத்துமாக இருந்தாள் கல்யாணி. வீட்டிலே வைத்துக்கொள்ளாமல் சிறிது பணத்தை ஒவ்வொரு மாதத் துவக்கத்திலும் ஸிண்டிகேட் பாங்கிலே போட்டுவரலானாள். ஆனால் ராதையோ கட்டுப்பாடின்றிச் செலவழித்தாள். சில ஆண்டுகள் உருண்டோடின. மேற்படிப்புக்காக தன் மகனை வெளிநாட்டுக்கு அனுப்பிவிட்டாள் கல்யாணி. ராதையின் மகனோ ஏதோ 'சுமாராகப்' படித்துவிட்டு வேலையில் அமரவேண்டியிருந்தது. கல்யாணி காட்டிய வழியைப் பின்பற்றி நீங்களும் ஸிண்டிகேட் பாங்கிலே பணம் சேமிக்கத் தொடங்கலாமே. மாதர் மட்டுமே நிர்வகிக்கும் கிளையினை இந்தியாவிலே முதன்முதலாகத் துவக்கிய பெருமையுடைய ஸிண்டிகேட் பாங்க், பெண்குலத்திற்கெனத் தனிப்பட்ட சேவையினை செய்து வருகின்றது

உங்கள் பாங்குப் பொறுப்பை எங்களிடம் ஒப்படைத்தால் உரித்தான இடத்தில் ஒப்படைத்ததுபோல.

# ஸிண்டிகேட் பாங்க் லிமிட்டெட்

ரிஜிஸ்டர்டு அலுவலகம் : மணிபால், மைசூர் மாநிலம்.

300 க்கு மேற்பட்ட கிளைகள்.

நிதிவளம் : ரு. 70 கோடிக்கு மேல்.

# குடும்பக் கட்டுப்பாடு பற்றிக் காந்திஜி

குடும்பக் கட்டுப்பாடு அவசியந்தான் என்பதைப் பற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் இருக்கவே முடியாது. ஆனால் அதைக் கடைப் பிடிக்க ஆதிநாளிலிருந்து நமக்குக் கைவந்த ஒரே வழி புலனடக்கம்; அல்லது பிரம்மச்சரியம்.

செயற்கை முறைகள் கெட்ட நடத்தைக்கு உதவுவதாகும். அவை ஆண் பெண்களைத் தறி கெட்டவர்களாக்கி விடுகின்றன. செயற்கை முறைகளைக் கையாண்டால், உடனே கடுமையான நரம்புத் தளர்ச்சியை ஏற்படுத்தும். ஆக வைத்தியம் நோயை விடக் கடுமையாகிவிடும்.

இந்தச் செயற்கை முறைகள் அவசியம் என்று வற்புறுத்துவதற்குக் காரணம் சபல சித்தனாக இருப்பது வாழ்க்கையில் தவிர்க்க முடியாத ஒன்று என்ற எண்ணம்தான்.

அதோடு பெண்களிடம் அநுதாபம் காட்டுகிறோம் என்பதாகச் சொல்லிக் கொண்டு செயற்கை முறைகளுக்குப் பரிந்து பேசுவது மிகப் பரிதாபம். இப்படிக் கூறுவது பெண்ணினத்தையே அவமானப்படுத்துவதாகும்.

ஏற்கனவே மனிதன் தனது காமாதுரத்துக்காகப் பெண்ணை மிகத் தாழ்த்திவிட்டான். போதாக் குறைக்கு நல்லெண்ணத்தோடுதான் செயற்கை முறைகளைக் கையாள்வதாக எவ்வளவுதான் கூறியபோதிலும் அவை பெண்களை இழிவுபடுத்துவதிலேதான் முடியும். ஆடவன் பெண்ணுக்கு நல்லதைச் செய்ய விரும்புகிறான் எனில் தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்ளட்டும். அவள் அல்ல மோக வலை வீசுபவள். உண்மையில் ஆடவன்தான் ஆக்கிரமிப்பவனாயிருத்தலால், அவன்தான் குற்றவாளி. அவன்தான் மோக வலை வீசுபவன்.

லட்சோப லட்சம் ஆண்டுகளாக இருந்து வரும் இந்த உலகம், என்றுமே ஜனத்தொகை தாங்க முடியாமல் பெருகிப் போய் அவதிப்பட்டதில்லை. அப்படியிருக்க ஜனத்தொகையைக் கட்டுப்படுத்தவில்லையென்றால் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டு உலகம் அழிந்துவிடும் என்றும், ஆகவே ஜனத்தொகையைச் செயற்கை முறைகளால் கட்டுப்படுத்தவேண்டும் என்றும் ஓர் உண்மையை எப்படித்தான் கண்டுபிடித்தார்களோ!

செயற்கைக் கட்டுப்பாடுகளையோ, மேனாட்டினர் சிபாரிசு செய்யும் இன்றையக் குடும்பக் கட்டுப்பாடு முறைகளையோ கையாள்வது தற்கொலையேயாகும் என்று நான் நினைக்கிறேன். 'தற்கொலை' என்ற சொல்லை மிக உயர்ந்த விரிவான பொருளில் சொல்கிறேன். அதாவது இம்முறைகள் மனிதனை மிருகத்தை விடக் கீழ் மட்டத்தில் தள்ளிவிடும். அவற்றைக் கையாள்வது அதர்மம்.

செயற்கை முறைகளைச் சிபாரிசு செய்பவர்களிடம் என் சண்டை என்னவென்றால், சாதாரண மக்கள் புலனடக்கம் செய்யச் சக்தியற்றவர்கள் என்று இவர்கள் எப்படித் தீர்மானிக்கலாம் என்பதுதான். இவர்கள் சுய கட்டுப்பாடு, புலனடக்கம் இவை என்னென்ன சாதிக்க முடியும் என்பதைப் பற்றி அநுபவமின்றிப் பேசுகிறார்கள் என்பதை மிக உறுதியாக ஆனால் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். மனிதனின் ஆத்ம பலத்தைக் குறைத்துப் பேச இவர்களுக்கு யாதொரு உரிமையும் கிடையாது.

ஆண் பெண் இருவரும் மிருக இச்சையால் விளையக்கூடிய பயனை ஏற்க விருப்பமின்றி, வேகத்தை மட்டும் தணித்துக்கொள்ள முயன்றால் அது காதல் அல்ல; காமம். கணவன் "நமக்குக் குழந்தைகள் வேண்டாம்; தொடர்பு மட்டும் கொள்வோம்" என்றால் அது மிருகப் பிராயமான இச்சையைத் தவிர வேறென்ன? மிருகப் பிராயமான இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளக் காதலை உபயோகித்துக் கொண்டால் அக்கணமே காதல் காமமாகிவிடுகிறது.

இதற்குப் பரிகாரம் பெண்கள் வசமே இருக்கிறது. ஆண், பெண்ணை ஒரு கருவியாகத்தான் கருதுகிறான். இதனை எதிர்த்துத் தடுக்கப் பெண்ணுக்கு உரிமையுண்டு என்பதைப் பெண்மணிகள் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஏற்கனவே பல்வேறு காரணங்களால் பலவீனம் அடைந்துள்ள சமுதாயம் இந்தச் செயற்கை முறைகளால் இன்னும் பலவீனமுற்றுப் போகும்.

இச் செயற்கை முறைகளை ஆமோதிக்கும் குரல்களுக்கு ஆதரவாக, ஒருவனது சொந்த இன்ப நுகர்ச்சி அநுபவம், வேண்டாத குழந்தைகள் தோன்றித் தாய்மார் படும் கஷ்டங்களுக்கு அநுதாபம் ஆகியவை சொல்லப் படுகின்றன. குடிகாரன் தன் சொந்த இன்பத்தைப் பற்றிச் சொன்னால், என்ன மதிப்பு அளிப்போமோ, அவ்வளவுதான் இந்தச் சொந்த இன்ப உணர்ச்சியை ஆதரித்துப் பேசுபவர்கள் வார்த்தைக்கும் அளிக்க வேண்டும். தாய்மாரின் பரிதாப நிலை பற்றிப் பேசுகின்ற பேச்சு கபடமான படுகுழி. அதில் சிக்கிக்கொள்வது பேராபத்து. ஒழுக்க நெறியையும் புலனடக்கத்தையும் அலட்சியப்படுத்துவது தற்கொலையேயாகும்.

— காந்திஜி





# சேவைக்கு ஒரு

சிறுமி சுப்புலக்ஷ்மி விழிப்படைந்து நிமிர்ந்து பார்த்தாள். ஏழெட்டுப் பெரியபெண்கள் இரண்டு வயதுக்கு மேற்படாத ஒரு சிறு குழந்தையைச் சுற்றி வளைவாக நின்றிருந்தனர். இடுப்பில் பாவாடை கூடக் கட்டாத அந்தச் சிறு குழந்தை விக்கி விக்கி அழுது கொண்டிருந்தது. மற்றக் குழந்தைகள் அவளை 'விதவை' என்று சுட்டிக் காட்டிச் சிரித்துக் கேலி செய்தனர். அவ்விதம் பரிகசித்த பெண்களில் அநேகர் தங்கள் கழுத்தைச் சுற்றித் தங்கக் கொடிகளில் தொங்கும் தாலி அணிந்து கொண்டிருந்தது சுப்புலக்ஷ்மிக்குத் தெரிந்தது.

''ஹா ஹா ஹா!'' என்று அப்பெரிய பெண்கள் கூவிக் கொண்டிருந்தனர். ''ஜானகிக்குத் தாலியே இல்லே!'' அவர்கள் அவளைச் சுற்றி நர்த்தனம் ஆடினர். ''தாலி இல்லே. துக்கிரி, துக்கிரி!'' என்று கூறி அவர்கள் சிரிப்பதைப் பார்த்தாள் சுப்புலக்ஷ்மி. நல்லவர்கள் அத்தகைய வார்த்தைகளை யெல்லாம் பேசக்கூடாது என்பது சுப்புலக்ஷ்மிக்குத் தெரியும்.

குழந்தை அவர்களிடமிருந்து தப்பியோடப் பார்த்துத் தவித்து அழுது அழுது தீர்த்தது. மற்றப் பெண்களோ சொன்னதையே சொல்லிக் கத்திக் கொண்டு அந்தக் குழந்தையைச் சூழ்ந்து இன்னும் வேகமாகச் சுற்றவும் ஆடவும் ஆரம்பித்தனர். கடைசியில் எப்படியோ குழந்தை ஜானகி, பெரிய பெண்கள் இருவருக்கு இடையில் புகுந்து நழுவி எதிர் வீட்டுக்குள் ஓடினாள்.



சுப்புலக்ஷ்மி இருந்த இடத்திலிருந்து எதிர் வீட்டு ஜன்னலின் ஊடே பார்த்தபொழுது அந்தக் குழந்தையின் தாயார் பாய்ந்து வந்து, மகளை இடுப்பில் எடுத்து ஆசுவாசப் படுத்துவதைப் பார்த்தாள். தன் கழுத்துச் சங்கிலியை எடுத்து அந்தக் குழந்தையின் கழுத்தில் போட்டாள் தாய்.

உடனே ஜானகி தாயின் மடியிலிருந்து இறங்கித் தெருவுக்கு மீண்டும் ஓடினாள்.

பெரிய பெண்கள் தெருவில் காத்துக் கொண்டேயிருந்தனர். அந்தக் குழந்தையை அவர்கள் முரட்டுத்தனமாகத் தாக்கி, சங்கிலியை அணிவதற்கு உரிமையற்றவள் என்று கத்திக்கொண்டு, அதனைக் குழந்தையின் கழுத்திலிருந்து பிடுங்கப் பார்த்தார்கள். ஜானகியின் தாயார் சமையலறைக்குச் சென்று விட்டாள்



# சகோதரி

மோனிகாஃபெல்டன்
– அநுத்தமா

போதும். இந்த அரவம் அவள் காதில் விழவில்லை. சுப்புலக்ஷ்மி பீதியில் ஸ்தம்பித்துச் செய்வதறியாது பார்த்துக்கொண்டே யிருந்தாள். குழந்தை கழுத்தில் சங்கிலியுடன் மீண்டும் ஒருமுறை தப்பித் தன் வீட்டுக்குள் ஓடி மறைந்தாள்.

சுப்புலக்ஷ்மி குழந்தை ஜானகியை மறுபடியும் பார்க்கவில்லை. அன்று தான் பார்த்ததை யாரிடமும் சொல்லவுமில்லை. அந்த நிகழ்ச்சியை அவள் தன் மனத்தை விட்டு அகற்றப் பார்த்தாள். ஆனால் அது திரும்பத் திரும்ப உள்ளத் திரையில் தோன்றிக் கொண்டிருந்தது. சில சமயங்களில் இரவில் திடீரென்று அவளுக்கு விழிப்பு ஏற்படும். அந்தக் குழந்தை உதவிக்காக அரற்றுவது போலவும், அதற்குத் தான் உதவி செய்ய முடியாத நிலையில் இருப்பதுபோலவும் தோன்றும்.

இதற்குப் பிறகு அந்தக் கிராமமே அவளுக்கு வெறுப்புத் தந்தது. திடீரென்று ஒரு நாள் தந்தையின் மாமா வீட்டுக்கு அவளும் அவள் சகோதரிகளும் மட்டும் அழைத்துச் செல்லப்பட்டபோது அவளுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. பெற்றோர்கள் உடன் வரவில்லை.

அதைப்பற்றி ஸிஸ்டர் பேசும்போது அவர் வதனம் வெறுப்பும் வேடிக்கையுமானதொரு கலவையில் சுருங்கியது. ''ரொம்பவும் மகிழ்ச்சியோடு போனோம். ஆனால் நாங்கள் அங்கு போய்ச் சேர்ந்தவுடனே எங்கள் கொள்ளுத் தாத்தா எங்களுக்குப் பேதிக்குக் கொடுக்க வேண்டும் என்றார்.''

''ஏன் நீங்கள் கல்யாணத்தில் நிறையச் சாப்பிட்டு விட்டீர்களா ?'' என்று நான் கேட்டேன்.

''இல்லை, இல்லை. அதுவே இல்லை. அவருக்குத் தாம் வளர்த்த ஆமணக்குச் செடிகளைப் பற்றி அவ்வளவு பெருமை. அப்பொழுதுதான் எண்ணெய் ஆட்டி இருந்தார்கள். எங்கள் கொள்ளுத் தாத்தா, எங்கள் வயிறும் குடலும் கெட்டுப் போயிருந்தனவோ இல்லையோ, இந்த விளக்கெண்ணெய் உடம்புக்கு நல்லது என்று சொன்னார்!'' — ஸிஸ்டர் பளிச்சென்று சிரித்தார். ''அது ஒரு பயங்கரமான அநுபவம்!''

''என்னது, ஒரு சிறு கரண்டி விளக்கெண்ணெயை விழுங்குவதா சிரமம் ?''

''ஐயோ, அதில்லை. அவ்வளவு சுலபமா அது! நாங்கள் மீண்டும் சந்தோஷமாக நடமாட ஆரம்பிப்பதற்கு முன் விளக்கெண்ணெய் அருந்துவது என்கிற ஒரு பெரிய சம்பிரதாயச் சடங்கே நடக்க வேண்டியிருந்ததே !

''முதலில் விடியுமுன் இருட்டிலேயே சமையல்காரி மிளகு, சீரகம் இதர மருந்துச் சாமான்களைக்கொண்டு கஷாயம் தயாரித்து விடுவாள். இதில் விளக்கெண்ணெயைக் கலப்பார்கள். பிறகு சூரியோதயத்துக்குச் சற்று முன்பே கஷாயம் சூட்டோடு இருக்கும் போதே மூன்று பெண்களையும், தலைக்கு ஒரு கிண்ணம் குடிக்கும்படி செய்து விடுவார்கள். சில மணி நேரத்துக்குப் பிறகு, மருந்து வேலை செய்யத் தொடங்கியதும் குழந்தைகளுக்கு மிளகு ரசம் சாதம் கொடுப்பார்கள். பிற்பகலுக்கு மேல், ஐந்தாறு முறை வயிறு கழிந்த பிறகு, தயிர் சாதம் கொடுப்பார்கள்.''

ஸிஸ்டர் மேலும் விளக்கினார்:, ''தயிர் வயிற்றுப் போக்கை நிறுத்தி விடும். சாயங்காலம்வரை வேறு ஒன்றும் கிடையாது. மாலையில் மீண்டும் ஒரு முறை மிளகு கஷாயம். இவையெல்லாம் போதாவென்று, இதை விடக் கஷ்டம் மறு நாள் காலை காத்திருக்கும்! எல்லோருக்கும் வேப்பங்கொழுந்து அரைத்துத் தயிரில் கலக்கிக் கொடுப்பார்கள். வாயைத் திறக்க வைத்து, அந்த உருண்டைகளைத் தொண்டைக்குள் போடுவார்கள். அப்பொழுதுகூட அந்தக் கசப்பை விழுங்குவது கஷ்டமாக இருக்கும்.'' இந்த அநுபவத்தைக் கூறி முடிப்பதற்கு முன் மீண்டும் ஒரு முறை சிரித்தார் ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி. ''நான்தான் சொல்கிறேனே, எங்கள் விடுமுறையில் எங்களுக்குக் கொஞ்சமும் பிடிக்காத கட்டம் இது.''

ஆனால் இந்த நாட்கள் சீக்கிரமே ஓடி மறைந்து விட்டன. இன்னும் சில தினங்கள் வேறு ஓர் உறவினர் வீட்டில் தங்கினார்கள். அங்கே சிறு பெண்களை நடத்தும் முறையைப் பற்றி முற்றிலும் மாறுபட்ட கருத்து நிலவியது. குழந்தைகளுக்குச் செல்லம் கொடுத்தார்கள். வெல்லத்தில் வேக வைத்த வள்ளிக் கிழங்கு, இன்னும் அவர்கள் இதுவரை சாப்பிட்டு அறியாத ருசியான பல தின்பண்டங்கள் செய்துதந்தார்கள். அதன் பிறகு அவர்கள் பெற்றோர்கள் கும்பகோணத்திலுள்ள அவர்களுடைய மாமா வீட்டுக்கு அவர்களை அழைத்துச் சென்றார்கள். விடுமுறை இன்னும் இன்பகரமாயிற்று.

சுப்புலக்ஷ்மியின் மாமாவுக்கு ஐந்து குழந்தைகள், மூன்று பிள்ளைகள், இரண்டு பெண்கள். அவர்களில் ஒரு பெண் ஏறக்குறைய சுப்புலக்ஷ்மியின் வயதே இருந்தாள். அவள் சுப்புலக்ஷ்மிக்கும் அவள் தங்கைகளுக்கும் சுவாரசியமான பல விளையாட்டுக்களைச் சொல்லித் தந்தாள். தென்னிந்தியக் குழந்தைகள் பரம்பரை பரம்பரையாகத் தொன்று தொட்டு விளையாடி வருபவை தான். சோழி வைத்து விளையாடுவது, கும்மி, கோலாட்டம் போன்றவை. இவையெல்லாம் ஆடுவதற்குத் தமாஷாகவும், பார்ப்பதற்கு அழகாகவும் இருந்தன. தினமும் குழந்தைகளை ஆற்றங்கரைக்குக் குளிக்க அழைத்துச் செல்வார்கள். சுப்பிரமணிய ஐயர் தம் குழந்தைகளுக்கு நீச்சல் கற்றுக் கொடுக்கத் தீர்மானித்தார். சுப்புலக்ஷ்மி சீக்கிரமே கற்றுக் கொண்டு விட்டாள். தண்ணீரில் துளாவுவதில் இருந்த ஆசை காரணமாக இந்த விடுமுறையே முடியக் கூடாது என்று சில சமயங்களில் அவள் எண்ணுவாள்.

சில வாரங்கள் கடந்தன. ஏழு வயது பாலம் பெரிய பையன் ஒருவனுடன் ஒவ்வொரு நாளும் நீண்ட பொழுதைக் கழிக்க ஆரம்பித்தாள். பதினாறு வயது ஆன அந்தப் பையனுக்கு 'ஸாண்டி' (Sandy) என்று பெயர் வைத்திருந்தார்கள். ஒரு கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்ததனால் அவ்வாறு அவனுக்கு வேடிக்கையாகப் பெயர் வைத்து அழைத்தார்கள். அவன் குடும்பத்தினரும் அவனைக் கிறிஸ்தவன் என்றே கேலி செய்வார்கள். அவன் அப்பொழுது ஆறாம் படிவத்தில் படித்துக் கொண்டிருந்தான். சிறுமி பாலத்திடம் பேசிக் கொண்டிருப்பதை அவனும் மிகவும் விரும்பியதாகத் தெரிந்தது. அவனுக்-

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## கார் சவாரியில்
## ஒரு புது அனுபவம்



## கீழ்க்கண்ட போற்றத்தக்க வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்பிரிங்கினுலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- எஃகு கர்டரினுலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## உறுதியான, *எழில் மிகுந்த* கார்




*தயாரிப்பாளர்கள் ,*

ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்
சென்னை-2

*வினியோகஸ்தர்கள் -*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை உதகை
யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்




கனவான்கள் தேர்ந்தெடுப்பது

# மபத்லால் க்ரூப்

பாப்லின்கள் மற்றும் ஷர்ட்டிங்குகள்

2x2 காட்டன்/'டெரீன்', டெரிவீன்ட்,
மெரினெட் அண்டு ஸ்ட்ரெச் வகைகளிலும்

நியு ஷோரக் (ஷோரக்) அஹமதாபாத். நியு ஷோரக், நடியாத். ஸ்டேண்டர்ட் பம்பாய். ஸ்டேண்டர்ட் (நியு சைனா) பம்பாய். ஸ்டேண்டர்ட் தேவாஸ் ஸாஸூன் பம்பாய். ஸாஸூன், (நியு யூனியன்) பம்பாய். ஸூரத் காட்டன் ஸூரத். மபத்லால் பைன், நவ்ஸாரி

கும் அவனுடன் இருப்பதில் விருப்பம் இருந்தது.

அவர்கள் ஊருக்குக் கிளம்புவதற்கு முன் ஒரு நாள் ஸாண்டி பாலத்தை மாடியில் தன் அறைக்கு அழைத்துச் சென்று, ''உன்னிடம் ஒரு முக்கிய மான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும்'' என்றான். சின்னஞ்சிறு பாலம் தன் முக்கோண வடிவமான முகத்தின் பெரிய கண்களை அகல விரித்துச் சிரத்தையோடு அவனைப் பார்த்து, ''என்ன அது?'' என்று கேட்டாள்.

''நான் உன்னை நேசிக்கிறேன். உனக்கும் என்னிடம் அன்பிருக்கு மானால் நீ இன்னும் கொஞ்சம் பெரியவளான பிறகு உன்னை 'நான் கல்யாணம் செய்து கொள்கிறேன். நீ என்ன சொல்கிறாய்?''

''நான் சரி என்கிறேன்'' என்றாள் பாலம்.

இதைப் பற்றிப் பெற்றோர்கள் கேள்விப்பட்ட பொழுது, ''கூடவே கூடாது'' என்றார்கள். குழந்தைகள் தங்கள் திருமணத்தைத் தாங்களே நிச்சயித்துக் கொள்வதாவது? குழந்தை களுக்கு எது நன்மை என்பது பெற்றோருக்குத்தான் தெரியும். பாலத்துக்கும் ஸாண்டிக்கும் கல்யாணம் சரிப்படாது என்று பெரியவர்கள் தீர்மானித்து விட்டிருந்தனர்.

''அதைப் பற்றிக் கவலைப்படாதே. பொறுமையாக இரு. கடைசியில் அவர்கள் ஒத்துக் கொண்டுதான் ஆக வேண்டும்'' என்று பாலத்திடம் ஸாண்டி சொன்னான்.

சில நாட்கள் கழிந்து அவர்கள் விடைபெற்றனர்.

அந்த மறக்க முடியாத விடுமுறை நாட்களின் கடைசிக் கட்டமான ராமேசுவர யாத்திரை தொடங்க விருந்தது.

ரயில் மதுரை வரைதான் சென்றது. சுப்புலக்ஷ்மியும், அவள் பெற்றோர்களும், தங்கைகளும் அங்கு போய் இறங்கிய போது, முன்னேற்பாட்டின் படி மூன்று இரட்டை மாட்டு வண்டிகள் ரயிலடிக்கு வெளியே காத்துக்கொண்டிருந்தன. இவர்கள் குடும்பம் ஒன்றில் ஏறிற்று. மற்ற இரண்டில் படுக்கைகள் துணிமணி அடங்கிய பெட்டிகள் — மற்றும் இரண்டு மூன்று வாரங்களுக்குத் தேவையான அரிசி, தானிய மூட்டைகள் இதர சாமக்கிரியைகள் யாவும் இருந்தன. அவர்கள் கிளம்பினார்கள்.

இந்தியாவில் எல்லா யாத்திரா மார்க்கங்களிலும் இருப்பது போலவே, மதுரையிலிருந்து ராமேசுவரம் போகும் வழியிலும் சில மைல்களுக்கு ஒரு முறை மகாராஜாக்களாலும், பணக்கார ஜமீந்தார்களாலும் கட்டப்பட்ட சத்திரங்கள் இருந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு பூஜை அறை இருந்தது. அதைத் தவிர யாத்திரிகர்கள் குளிக்கவும், துணி துவைக்கவும், உண்ணவும், உறங்கவும், சமையல் செய்யவும் அறைகள் இருந்தன.

குளித்துச் சுத்தமான ஆடை அணியாமல் போஜனத்துக்கு உட்காரக் கூடாது என்று சுப்புலக்ஷ்மிக்கும் அவள் தங்கைகளுக்கும் கற்பிக்கப்பட்டிருந்தது. ஆகையால் இரவு நேரங்களில் சாமான்களை இறக்கியவுடன், மறு நாள் காலைக்குள் துவைக்க வேண்டிய பெரிய துணி மூட்டை காத்திருக்கும். காலை எழுந்ததும் ஒரு நாளைக்கு வேண்டிய-போதிய உணவு சமைக்கப்படும். மீண்டும் மாட்டு வண்டிகள் கிளம்புமுன், எல்லாரும் வயிரார உண்பார்கள். ஊர்வலம் கிளம்பும்.

வழி நெடுகக் காண்பதற்கு அருமையான காட்சிகள் இருந்தன. இருபுறமும் மரங்கள் அடர்ந்த சாலையின் மத்தியில் நிழலும் ஒளியும் செய்யும் கோலத்தைச் சுப்புலக்ஷ்மி ஆசையோடு கண்டு களித்தாள். ஒவ்வொரு மரமும் ஒருவித அழகு. ஆனால் ஒன்றுபோல் ஒன்று இல்லை. அடர்ந்த ஆலவிருட்சங்கள் கருத்த விதானங்களை விரித்தன. கிளைகளிலிருந்து கீழ்நோக்கி இறங்கிய விழுதுகள் வாரிப் பின்னிவிடக் காத்திருக்கும் தலைமுடி போல் காணப்பட்டன. இங்குமங்கும் குரங்குகள், சில சமயம் பாதைக்குக் குறுக்கே ஓடுவதும் சில சமயம், யோசனையில் ஆழ்ந்து நிழலில் உட்கார்ந்திருப்பதுமாக இருந்தன. அவ்வப்போது இவர்கள் வண்டி, நடந்து செல்லும் பிரயாணிகளைத் தாண்டிச் செல்லும்... காவியணிந்த சுவாமிகள், மூட்டை தூக்கும் பாதசாரிகள்-இப்படிப் பலதரப்பட்டவர்களைக் கண்டாள். ஒரு கிராமம் வந்ததும், சுப்புலக்ஷ்மி எட்டிப் பார்ப்பாள். குயவர்களின் உலைக்களத்தையும், நெசவாளர்களின் தறிகளையும், தேங்காய் நாரிலிருந்து கயிறு திரிப்பவர்களையும் காண்பாள். ஒவ்வொரு கிராமத்திலும் சின்னக் கோவில்கள் இருந்தன. பெரிய ஆலயங்களும் அவ்வப்போது தென்பட்டன. கோவில்களுக்குமுன் விளங்கிய அழகான தடாகங்களில், பெண்கள் தங்கள் புடவைகளைத் துவைத்துக் கொண்டும், குளித்துக் கொண்டுமிருந்தார்கள். குளத்தங்கரையோரம் முதியவர்கள் அமர்ந்து, அமைதியாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சில மணி நேரப் பிரயாணத்துக்குப் பின் மாட்டு வண்டிகள் ஒரு நிழலில் நிறுத்தப்படும். எல்லோரும் கீழே இறங்குவார்கள். சிறுமியர் இப்படியும் அப்படியும் ஓடுவார்கள். தன் தலை வலிக்கு அருமருந்து காப்பிதான் என்று சமீபத்தில் அறிந்து கொண்டிருந்த சுப்புலக்ஷ்மியின் தாயார், சின்ன மண்ணெண்ணெய் ஸ்டவ்வைப் பற்ற வைப்பாள். நல்ல மணமுள்ள பேஷான காப்பியாகத் தயாரிப்பாள்.

சுப்புலக்ஷ்மி இவ்வளவு சந்தோஷமாக எப்பொழுதுமே இருந்ததில்லை. ஒரு வாரத்துக்குப்பின் அவர்கள் ராமேசுவரம் சேர்ந்த பொழுது அந்தக் கோவிலைக் கண்டு அவள் மெய்ம் மறந்து விட்டாள். அந்தப் புளகாங்கிதத்தில் கடவுளின் அவதாரமேயான ஸ்ரீ ராமனைப் பற்றியும், அவரது அழகான மனைவி சீதையைப் பற்றியும், அவளைக் கடத்திச் சென்ற துஷ்ட அரசன் ராவணனைப் பற்றியும்,— இலங்கையைப் பற்றியும், அனுமானைப் பற்றியும் கதைகளை இதற்குமுன் பல முறை வீட்டில் கேட்டிருந்த போதிலும் மறுபடியும் மறுபடியும் கேட்க அவள் அவாக் கொண்டாள். இங்கு ராமேசுவரத்தில், அந்தக் கதையெல்லாம் இன்று நேற்றுத்தான் நடந்ததுபோல் தோன்றியது. தன் தாயோடு சமுத்திரக் கரையோரம் நடக்கும்போது லட்சிய இல்வாளான சீதையைக் கண்கூடாகக் காண்பதுபோல் சுப்புலக்ஷ்மிக்குத் தோன்றும்.

**ரா**மேசுவர யாத்திரை ஒரு கண நேரத்தில் முடிந்து விட்டதுபோலிருந்தது. இதன் பிறகு, அவர்கள் மீண்டும் மதுரையில் உள்ள உறவினர் வீட்டுக்கு வந்து விட்டார்கள்.

அங்கு பெரியோர்களெல்லாம் கூடிக் கூடி வெகுநேரம் பேசினார்கள். அவர்கள் பேச்சைக் கேட்கச் சுப்புலக்ஷ்மி யத்தனிக்கவில்லை. ஆனால் ஆறு மாதகாலம் கோயமுத்தூரில் இன்னொரு மாமா மாமியுடன் இருந்து, உயர்நிலைப்பள்ளிக்குச் சென்று கல்வி பயில வேண்டும் என்று அவள் தாயார் கூறியபொழுது அவளுக்கு மிக ஆனந்தமாக இருந்தது.

ஆனால், அந்தப் பள்ளிக்கூடம் ஒரு ஏமாற்றமாகி விட்டது. ''அரிசி கிறிஸ்தவர்கள்'' என்று அந்நாளில் அழைக்கப்பட்ட கிறிஸ்துவப் பெண்கள் அங்கு உபாத்தியாயினிகளாக இருந்தனர். தாழ்த்தப்பட்ட வகுப்பினராய்—ஹரிஜனங்களாய் இருந்து மதம் மாறியவர்கள் இவர்கள். மாணவிகளிடத் தங்களுக்கு ஒன்றும் தெரியாத காரணமாகவோ என்னவோ அவர்கள், மாணவிகளின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவே விரும்பவில்லை. சுத்தமாக இருக்கவும் அவர்கள் இன்னும் கற்கவில்லை. எனினும், சுப்புலக்ஷ்மிக்குத் தன் பள்ளித் தோழிகளைப் பிடித்திருந்தது; அவர்களுக்கும் அவளைப் பிடித்திருந்தது. ஆறு மாத காலத்துக்குப் பிறகு தன் வீடு செல்ல அவளுக்கு சந்தோஷமாக இருப்பினும், பள்ளி வாழ்க்கை இத்துடன் முடிந்தது கண்டு கொஞ்சம் வருத்தமாகவும் இருந்தது.

சைதாப்பேட்டைக்குத் திரும்பியதும், சென்னையில் ஒரு கல்யாணத்துக்குப் போக வேண்டியிருந்தது. நூற்றுக்கணக்கான விருந்தினர்கள் வந்து குழுமிய பெரிய, விமரிசையான கல்யாணம். பெண்களுடன் கலந்து பழகியதில் முன்னைவிட உலகத்தையும் அதில் தனக்கு நேரக் கூடியவற்றையும் ஒருவாறு அறிந்திருந்த சுப்புலக்ஷ்மி, கல்யாணச் சடங்குகளாலும், அங்கு வந்திருந்த பெண்களின் உயர்ந்த பட்டாடைகளாலும் வெகுவாகக் கவரப்பட்டாள். சென்னையில் பெரிய பிரமுகரும், பெயர் பெற்ற வக்கீலுமான, சதாசிவ ஐயர் மனைவி லேடி சதாசிவ ஐயர் உடுத்தியிருந்த புடவைதான் மற்ற எல்லாரும் உடுத்தியிருந்தனவற்றைவிட வெகுவாக அவளைக் கவர்ந்தது. ஜரிகை இழையிலேயே நெய்யப்பட்ட அந்தப் புடவையை மட்டுமே விறைப்பாக நிற்க வைத்தால் அது மடியாமல் அப்படியே நிற்கும் போலத் தோன்றியது. சர் சதாசிவ ஐயர் ஆண்களின் மத்தியில் அமர்ந்திருந்தார். அவர் மனைவி பெண்கள் மத்தியில் இருந்தாள். வந்திருந்தவர்கள் எல்லோருமே அந்த அம்மாளையே உற்றுப் பார்ப்பதிலோ அல்லது மரியாதை சங்கோசத்துடன் தாங்கள் பார்ப்பதை மறைத்துக் கொள்வதிலேயோ முனைந்திருந்தனர்.

சுப்புலக்ஷ்மிக்குப் பட்டுப் புடவையே உடுத்தாதவளும் கல்யாணங்களுக்கே போகாதவளுமான தன் சித்தியின் நினைவு வந்தது. அன்று மாலை அவர்கள் வீடு திரும்பியவுடன் அவள் தன் தாயாரிடம் நீண்ட நாட்களாகத் தன் உள்ளத்தில் குடைந்து கொண்டிருந்த கேள்வியைக் கேட்டே விட்டாள். ''சித்திக்கு ஏன் தலை மயிர் இல்லே?''

கேட்டு முடித்தாளோ இல்லையோ, அவளுக்கு ஏன் அந்தப் பேச்செடுத்தோம் என்றாகிவிட்டது. என்றுமே அழாத அவள் தாயார், கண்ணீர் மடை திறந்தாற் போல் அழுது விட்டாள். அவளால் பதில் சொல்லக்கூட முடியவில்லை.

(தொடரும்)

## தென்னிந்தியர்களின் சுவைக்கேற்றபடி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது






# ஜி.பி பெருங்காயம்

**உயர்தர மிஸ்கி கலவை**

*கோபால்ஜீ அண்டு கம்பெனி, 318, சாமுவல் ஸ்ட்ரீட், பம்பாய் 3*

**ஏஜெண்ட்: தென் இந்தியா**

*கோபால்ஜீ அண்டு கம்பெனி, 203, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, தபால் பெட்டி எண் 1255, மதராஸ்-1*

**ஏஜெண்டுகள் தேவை—**

எல்லா முக்கிய பலசரக்கு கடைகளிலும் கிடைக்கும்.



## அருணகிரி விலாஸ் சீயக்காய் பவுடர்




## 44. தானவன் மீனமாயினான்!

**மா**தவன் கூர்ம அவதாரம் எடுத்து அமுதம்பெற உதவிய பின்னரும் தம்மை விடச் சிறந்தோர் ஒருவரும் இல்லை என்று செருக்குற்று ஏழு கடல்களையும் ஒன்றுகூட்டி அவனியை அழிக்கும்படி அதன் வெள்ளத்தைக் கலக்கினார். ஆயிரம் கரங்களாலும் ஆழியை வற்றச் செய்தார். கடலில் இருந்த திமிங்கிலங்கள், மீன் முதலிய எல்லாவற்றையும் உண்டும் பசி தணியாமல் கடல் நீர் முழுதும் குடித்து விட்டுத் தரைமட்டும் தெரியும்படி சேற்றையும் நக்கியது திவ்விய கூர்மம். அப்போது பிரமாதி தேவர்கள் கைலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட்டுக் கொண்டனர். கறைமிடற் றண்ணல் கருணை பூத்து, ''அஞ்ச வேண்டாம்'' என்று அபயம் தந்து, தமது மடித் தலத்தில் எழுந்தருளியிருந்த கந்தப் பெருமானை அனுப்பினார். குமாரக் கடவுள் திருப் பாற்கடலை அணுகி ஒரு ஹுங்காரம் செய்தார். அதனைக் கேட்ட அளவிலேயே ஆமை மூர்ச்சித்தது. முருகப் பெருமானுடன் வந்த ஐயனார் ஆமையைப் பிடித்து இழுத்து வெளியே கொண்டு வந்தார். கந்தவேள் தம் திருவடியினால் அதனை எற்றினார். நிலம் பிளக்க, திக்கு செவிடுபட ஆமை மல்லாந்து விழுந்தது. கந்தப் பெருமான் எஃகுத் தண்டால் அந்த

ஆமையை ஓங்கியடிக்க எண்ணினார்.. அப்போது இலட்சுமி தேவி வந்து கண்ணீர் உகுத்து வடிவேற் பரமனை வணங்கினாள்.

மருவார் செழுங்கூந்தல்
வாணிகலன் பூண்டிருப்பத்
தருநீழல் மேவிச்
சசிவாழ்வி னேடிருப்பத்
திருவோ திருவிழப்பாள்
தேவர்நா ளாமணியே!
மருகோய்! உயிரளித்தென்
மங்கலநாண் காப்பாயே
மங்காத காமர்பிடி
மான்மருங்கு வைத்தருளும்
எங்கள் பெருமானே!
யேத்துவார் கண்மணியே!
கங்கை குமரா!என்
காதலனை யுய்வித்து
மங்கல நாண்பிச்சை
வழங்காய் வழங்காயே
மூவரென வோதும்
முதல்தே வரிலொருவன்
ஆவி யழிந்தால்
அவுணர்நின வேசாரோ?
தேவரிடர் தீர்ப்போய்
சிற்றடிச்சி மங்கலநாண்
காவல் புரியாயேல்
என்னுங் கனகண்ணே

இவ்வாறு இலட்சுமி தேவி பல வாறுகத் துதித்து முந்தானையை நீட்டி மாங்கல்யப் பிச்சை கேட்டாள். முருகப் பெருமான் மனம் இரங்கினார். ஆமையைக் கொல்லாது அதன் ஓட்டினை மட்டும் பெயர்த்துக் கொண்டு போய்ச் சிவபெருமான் முன் வைத்தார். சிவபெருமான் கந்தவேளை யணைத்து ஆமையின் ஓட்டைப் பிரம்ம விஷ்ணுக்களின் சிரமாலைக்கு நடுநாயகமாகத் தரித்துக் கொண்டார்.

''அப்பா! இவ்வாறு செயற்கரிய செய்த முருகப் பெருமான் தன்னந் தனியனாக எதையும் செய்வான். இன்னொருவரின் சகாயம் அவருக்குத் தேவையில்லை. அசகாயசூரர் என்று அவருக்குப் பேர் இதனால்தான். அவரைச் சிறுவன் என்று இகழாதே'' என்று கூறினான் இரணியன். பின்னைப் பிராயத்தில் குமாரக் கடவுள் புரிந்த அற்புதங்களையும் எடுத்துக் கூறினான்.

வாசவன் குறையும் அந்தண்
மறையவன் குறையும் மற்றைக்
கேசவன் குறையும் நீக்கிக்
கேடிலா வெறுக்கை நல்க
ஆதிலோர் குழவி போலாய்
அறுமுகன் கொண்டான் என்றோர்
ஈசனே என்பதல்லால்
பிறிதொன்றை இசைக்கலாமோ?

இரணியன் சூரபன்மனுக்கு முருகப் பெருமானின் பேராற்றலை எவ்வளவோ எடுத்துச் சொன்னான்.

தாய் குழந்தையை வாரியணைத்து முத்தமிட்டு, ''என்னைப் பெற்ற செல்வமே!'' என்று கொஞ்சுவாள். அந்தக் குழந்தையா அந்த அம்மாவைப் பெற்றது? இல்லை. அகிலாண்ட கோடியையும் படைத்த குழந்தை முருகனையொட்டித்தான் இப்படி அன்னை மகனை அருமைக்கிடும் வழக்கு பிறந்தது.

''கங்கைதன் புதல்வன் என்றும்
கார்த்திகை மைந்தன் என்றும்
செங்கண்மால் மருகன் என்றும்
சேயின் செல்வன் என்றும்
பங்கயன் முதலோர் தேறும்
பரஞ்சுடர் முதல்வன் தன்னை
இங்கிவை பலவுஞ் சொல்லல்
ஏழைமைப் பாலதன்றோ?''

''அப்பா! மூவர்க்கும் தேவர்க்கும் எட்டாத முழு முதற்கடவுளைக் கங்கையின் புதல்வன் என்றும், கார்த்திகை மைந்தன் என்றும், திருமால் மருகன் என்றும் சொல்வது ஏழைமை (முட்டாள்தனம்) அல்லவா? அவர் அகில லோக ஏகநாயகன்'' என்கிறான், இரணியன்.

'ஏழை' என்ற சொல்லுக்கு வறியவன் என்று நாம் பொருள் கொள்கிறோம். அறிவு இல்லாதவன்தான்



ஏழை என்று நூல்களிலே பொருள். ஐந்து கோடி சொத்துள்ளவனுக்கும் அறிவு இல்லையென்றால் அவன் ஏழை தான்.

மரணம் கிட்டியவனுக்கு மருந்து பிடிக்காது. இரணியன் கூறிய அறவுரையைச் சூரபன்மன் கேட்கவில்லை.

பிடிவாதக்காரர்கள் யார் எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் கேட்க மாட்டார்கள். சம்புகுத்தன், மாருத்தன் என்ற இரு பெரும் கல்விமான்களின் கதை இதற்கு உதாரணம். சம்புகுத்தன் சிவபக்தன்; மாருத்தன் அம்பாள் பக்தன். இருவருக்கும் வாதம் நடந்தது. 'சக்திதான் பெரியது' என்றான் மாருத்தன். 'சிவனே பெரியவர்' என்றான் சம்புகுத்தன்.

கடவுளுக்கு இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று உஷ்ணம்; மற்றொன்று குளிர்ச்சி. உஷ்ணம் சிவம்; குளிர்ச்சி பார்வதி. குளிர்ச்சி பச்சையாக இருக்கும். உஷ்ணம் சிவப்பாயிருக்கும். அதனால்தான் அம்பாளுக்கு மரகத மேனி; எம்பெருமானுக்குப் பவள மேனி.

இதனை உணராது வாதம் செய்து கொண்டிருந்தனர் சம்புகுத்தனும் மாருத்தனும். படித்தவர்கள் சண்டை இலேசில் தீராது.

தங்களுடைய வாதத்துக்குத் தீர்ப்பை ஆண்டவனிடமே சென்று கேட்கலாம் என்று இருவரும் வேதாசலம் என்ற இடத்துக்குச் சென்றார்கள். வேதமே மலையான இடம் அது; அங்கே சென்று ஆண்டவனிடம் "சிவம் பெரிதா? சக்தி பெரிதா?" என்று கேட்டார்கள்.

"சிவமும் சக்தியும் ஒன்றுதான்; பொன்னும் அணிகலனும் போல் தாதான்மியம்; பேதமில்லை" என்றார் ஆண்டவன்.

இருவரும் சந்நிதியிலிருந்து வெளியே வந்தார்கள். வந்ததுமே, "என்ன இருந்தாலும் சிவமே பெரிது" என்றான் சம்புகுத்தன் மீண்டும். "சக்தியே பெரிது" என்றான் மாருத்தன் விடாமல். இவர்களது வாதத்தையும் பிடிவாதத்தையும் கண்ட சுவாமி, "இருவரும் கழுகுகளாகப் போகக் கடவது" என்று சாபம் கொடுத்தார். கழுகுகளாக மாறிய அவர்கள், "எத்தனை காலம் இப்படி இருப்பது?" என்று கேட்டார்கள். "கலியுகம் முடியும் வரையில் கழுகுகளாய் இருங்கள்" என்றார் ஆண்டவன். இந்தக் கழுகுகள் தான் திருக்கழுக்குன்றத்தில் இன்னமும் வருகின்றன.

பிடிவாதக்காரர்களான சம்புகுத்தனும் மாருத்தனும் சாட்சாத் சிவபெருமானே சொல்லியும் கேட்கவில்லை. சூரபன்மனும் அப்படிப்பட்ட பிடிவாதக்காரன்தான்.

இரணியனுடைய அறவுரையைக் கேட்ட சூரபன்மன் ஆலகாலம் போல் கொதித்தான். அவனது உடல் வியர்த்தது; இதழ்கள் துடித்தன; கண்கள் சிவந்தன. கைகொட்டிச் சிரித்தான். இரணியனைப் பார்த்து, "அறிவிலியே! நீ ஒரு சிறுவனின் ஆற்றலைப் பற்றியும், தூதனின் வீரத்தைப் பற்றியும், நான் செய்ய வேண்டுவது என்ன என்பதுபற்றியும் சொன்னாய். இவற்றையெல்லாம் உனக்குச் சொல்லிக் கொடுத்தது யார்? சொல். அவனை இப்பொழுதே கொல்கிறேன். அவனை மட்டுமல்ல; அவனது குலத்தையே வேரறுக்கின்றேன். அது மட்டுமல்ல. இன்னொரு முறை இப்படி ஏதேனும் பேசினால் உன்னையே இயமபுரத்துக்கு அனுப்பவும் தயங்க மாட்டேன்" என்று வெகுண்டுரைத்தான்.

இரணியன், 'விதியை யாரால் வெல்ல முடியும்? தந்தைக்கு அழிவு காலம் வந்து விட்டது. அவர் இறப்பதற்குமுன் நாம் இறந்து விடுவது நலம்' என்று எண்ணினான். சூரபன்மனை வணங்கி, "அப்பா! சிறுவனாகிய , நான் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள். நான் போருக்குச் செல்கிறேன். விடை கொடுங்கள்" என்று வேண்டிக் கொண்டான். இரணியனின் சொல் சூரபன்மனின் சினத்தைத் தணித்தது. மகனைத் தழுவி மகிழ்ந்து விடை கொடுத்து அனுப்பினான்.

இரணியன் போர்க்கோலம் புனைந்து ஆயிரம் சிங்கங்கள் பூட்டப் பெற்ற தேரில் ஏறிப் போர்க்களம் சென்றான். ஆயிரம் தோழர்களும், ஆயிரம் சேனாதிபதிகளும், நாலாயிரம் வெள்ளம் சேனைகளும் அவனுடன் சென்றன.

இரணியன் போருக்கு வந்தபோது நாரதர் வீரவாகுதேவரிடம் தோன்றி, "இவன் சூரபன்மனின் மகன். பெரிய மாயாவி. இவனை வெல்ல உம்மையன்றி வேறு யாராலும் முடியாது" என்று கூறி மறைந்தார்.

முதலில் இரணியனுக்கும் நீலன் என்ற பூத சேனைத் தலைவனுக்கும் போர் நடந்தது.

நீலன் இரணியனை உதைத்து உருட்டி மிதித்தான். அதனால் இரணியனின் தலையும் மார்பும் பிளந்தன. அவன் வாயிலிருந்து உதிரம் கொட்டியது.

அந்த நிலையில் அவன் ஒரு மாயா மந்திரத்தை உச்சரித்தான். இரணியனைப் போல் இன்னோர் உருவம் உண்டாயிற்று. அதனுடன் நீலன் பலவாறு திரிந்து போர் செய்தான். அம்மாய வடிவத்தின் தலையில் தண்டத்தால் அடித்தான் நீலன். அவ்வடிவம் ஆகாயத்துக்குச் சென்றது. நீலன் அதனைப் பின் தொடர்ந்து சென்றான். அந்த உருவம் மறைந்தது. இப்படியாக, அந்த உருவம் விண்ணில் செல்லும்; மண்ணில் வரும்; சேய்மையதாகும்; அண்மையதாகும்; முன்னே வரும்; பின்னே வரும். பலவுருவாகும். நீலன் சற்றுத் திகைத்தான். கடைசியில் 'இது மாயமே' என்று உணர்ந்தான். இதற்குள் பூமியில் விழுந்து கிடந்த இரணியன் அயர்வு நீங்கி எழுந்தான். நீலன் மீது திக்கணைகளை விடுத்து உடம்பைத் தொளைத்தான். நீலன் சலித்துத் திகைத்து வருந்தினான்.

இரணியனின் மாயத்தைக் கண்ட வீரவாகுதேவர் சினங் கொண்டார். முருகப் பெருமானைத் தியானித்துத் தேரைச் செலுத்திக் கொண்டு இரணியன் முன்பு வந்து ஞானப் படையை விடுத்தார். அதனால் இரணியனின் மாயை அழிந்தது. இருவருக்கும் உக்கிரமான போர் நடந்தது.

இரணியனின் வில், தேர், வச்சிர கவசம், சேனைகள் எல்லாம் அழிந்தன.

இந்நிலையில் அறிவாளியான இரணியன் யோசித்தான்: 'சிற்றப்பா சிங்கமுகாசுரன் அழிந்து விட்டார்; தந்தையான சூரபன்மனும் அழியப் போகிறார். எல்லோரும் இறந்து விட்டால் பிதுர்க்களுக்குச் செய்ய வேண்டிய திக்கடனும், நீர்க் கடனும் செய்வது யார்? அதற்கு ஓர் ஆள் இருக்க வேண்டாமா?' என்று எண்ணினான்.

''தென்புலத்தார் தெய்வம் விருந்து
ஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை''

என்கிறார் திருவள்ளுவர். ஒரு கிருகஸ்தன் பிதிரர்கள், தெய்வம், உறவினர், விருந்து ஆகியோரைக் காக்க வேண்டும். இது வீட்டுத் தலைவனின் கடமை.

'' மைந்தனைப் பெறு
தின்றதும் மாசிலாப்
புந்தி அன்பொடு
போற்றி வளர்ப்பதும்
தந்தை மாண்டுழித்
தம்முறைக் கேற்றிட
அந்தமில் கடன்
ஆற்றுதற் கேயன்றோ?''

''அப்பா அம்மா நம்மைப் பெற்று வளர்த்ததெல்லாம் கடைசிக் காலத்தில் கடன் ஆற்றுவதற்காக அல்லவா? ஆயிரத்தெட்டு யுகங்கள் வாழ்ந்த அப்பா இறந்து விட்டால் என்னும் தண்ணீரும் இறைப்பது யார்?'' என்று எண்ணிய இரணியன் இடிரென்று மறைந்து கடலில் மீனாகப் போய் விட்டான்.

வீரவாகுதேவர் வெற்றிச் சங்கை ஊதினார். அவர் நினைத்தால் கடலை வற்றச் செய்து பாணம் விட்டு இரணியனைக் கொன்றிருக்கலாம். ஆனால் உயிருக்குப் பயந்து மீனாகப் போனவனைக் கொல்லுவது ஆண்மையல்ல என்று விட்டு விட்டார்.

இரணியன்தான் கடைசிக் காலத்தில் சூராதி அவுணர்களுக்குப் பிதுர்க் காரியம் செய்தான். இது போலவே தான் இராவணனுக்கு விபீஷணர் பிதுர்க்காரியம் செய்தார்; துரியோதனனுக்கு அவனை வென்ற தருமராஜரே செய்தார். (தொடரும்)





● உயர்தரமான விக்கிரகங்கள் நமது கோயில்களிலிருந்து களவாடப்பட்டு மேல்நாடுகளில் விற்கப்படுகின்றன. இதுவரை இவ் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் சுமார் பதினைந்து கோடி ரூபாய் லாபம் கண்டிருக்கிறார்கள்!

# களவு போகும் கலைச் செல்வங்கள்

**கே. ஆர். என். சுவாமி**

நம் நாட்டில் போதிய விழிப்பில்லை. நமது விலைமதிக்கவொண்ணா அருங்கலைச் செல்வங்கள் வெளிநாடுகளில் சட்டவிரோதமாகக் கொண்டு போகப்பட்டு விற்கப்படுகின்றன. இது குறித்து ஓர் அதிர்ச்சியோ, கிளர்ச்சியோ நம் மக்கள் மனத்தில் இல்லாதது மிகவும் வருந்தத் தக்கது.

போனால் மீண்டும் பெற முடியாத உயர்தரமான விக்கிரகங்கள் நமது கோவில்களிலிருந்து களவாடப்பட்டு, மேல்நாடுகளில் விற்கப்படுகின்றன. இவ்வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் சுமார் பதினைந்து கோடி ரூபாய் லாபம் சம்பாதித்திருக்கிறார்கள்.

பழம் கலைப் பொருள்களை வியாபாரம் செய்வது எங்குமே உண்டு. ஆனாலும் சிறிதும் தேசபக்தியற்ற ஆறு வியாபாரக் கம்பெனிகள் அகில உலகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு இந்த அநீதியான வியாபாரத்தை நடத்தி வருகிறார்கள் என்று நம்பகமாகத் தெரிய வந்திருக்கிறது.

இந்த வியாபாரக் கம்பெனிகள் கல்கத்தாவில் மூன்றும், பம்பாய், சென்னை, டெல்லி ஆகிய மூன்று இடங்களிலும் முறையே மூன்று கம்பெனிகள் ஆக ஆறு கம்பெனிகள் இருக்கின்றன என்று நம்பகமாகத் தெரிய வருகின்றது. இந்தத் திருட்டில் திடீரென்று ஒரு புதிய வேகம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் மேல்நாட்டினருக்கு நமது கலைச் செல்வங்கள் மேல் ஏற்பட்டிருக்கும் மோகம்தான். முக்கியமாக மேல்நாட்டுப் பொருட்காட்சி சாலைகளும், கலைச் செல்வ சேகரிப்பாளர்களும் மிக ஆர்வத்துடன் வாங்குகிறார்கள். கலைச் செல்வங்களை வாங்குவது வியாபார முறையில் பார்த்தாலும் நல்ல முதலீடு செய்வதாகும். கலைச்செல்வங்களுக்கு இறக்குமதிக்க வரி கிடையாது.

மற்றொரு முக்கியமான காரணம் சட்டவிரோதமாகவாவது மேனாட்டுச் செலாவணியைச் சம்பாதிக்க வழி இவ்வியாபாரத்திலிருப்பதால், மும்முரமாக நடைபெறுகிறது. மேலும் கிழக்கு ஆசிய கலைச் செல்வங்கள் கிடைப்பது அரிதாகி வருகிறது. கம்யூனிஸ்ட் சீனாவிலிருந்து ஒன்றுமே வெளி வராது. ஜப்பானோ தனது கலைச் செல்வங்கள் வெளியில் போக விடாமல் பாதுகாத்து வருகிறது. ஆகவே, ஆசிய கலைச்செல்வங்கள் என்றால், இந்திய நாட்டுச் செல்வங்கள்தான் கிடைப்பதால், அவற்றையாவது வாங்குவோம் என்று மேனாட்டினர் துரிதமாக வாங்குகின்றனர்.

இந்தக் களவு மிக சாமர்த்தியமாகத் திட்டமிட்டு நடத்தப்படுகிறது. எந்த ஜில்லாவில் அதிகமாகக் கோவில்கள் இருக்கின்றனவோ, எங்கு புராதனப் பொருட்களைச் சேமித்து வைக்கும் பொருட்காட்சிச் சாலை இருக்கிறதோ, அந்தப் பிரதேசம் இந்தத் திருட்டுக்கு நல்ல நிலைக்களனாகிறது. சென்னை இராஜ்யத்தில் தஞ்சையும், மேற்கு வங்கத்தில் பர்துவானும், உத்தரப் பிரதேசத்தில் மதுரா நகரமும் — மதுரா மாவட்டமும், ஒரிஸ்ஸாவில் புரி, கோனார்க், கட்டாக் ஆகிய ஊர்களும் மத்தியப் பிரதேசத்தில் காஜுராஹோ ஆலயமும், பட்னா, லக்னோ, சித்தூர், கல்கத்தா ஆகிய நகரங்களில் உள்ள பொருட்காட்சிச் சாலைகளும் இந்த அக்கிரமமான திருட்டுப் புரட்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடங்கள் ஆகும்.

மிகவும் துணிகரமான கொள்ளை மத்தியப் பிரதேசத்திலிருக்கும் புகழ்பெற்ற பாக் குகைகளில் நடைபெற்றிருக்கிறது.

அங்கு குகையின் உத்தரத்தில் வரையப்பட்டிருக்கும் வண்ண ஓவியத்தை மிக சாமர்த்தியமாக வெட்டி எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். வெட்டி எடுக்கப்பட்ட பகுதி சிறிதும் பழுது அடையாமல் எடுத்திருக்கிறார்கள். ஒருகால், அப்பகுதியை மேனாட்டுக் 'கலைப் பொருள் சேகரிப்பாளர்கள்' தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். இதுவரை திரும்பப் பெற்றபாடில்லை. இந்தச் சாமர்த்தியமான வேலையைப் பார்த்து, 'எல்லா வசதிகளையும் பெற்ற இந்திய சர்க்காரின் புதைபொருள் இலாக்காவினர்களால்கூட இவ்வளவு திறம்பட எடுத்திருக்க முடியாது' என்று ஹாஸ்யமாகக் கூறுவது உண்டு.

சில மாதங்களுக்கு முன்பு காஜுராஹோ ஆலயத்திலிருந்தும் பொருட்காட்சிச் சாலைகளிலிருந்தும் இருபத்தொரு சிற்பங்கள் களவு போயிருக்கின்றன. இரண்டரை அடி உயரமுள்ள பிரசித்தி பெற்ற சூரியநாராயண உருவம் தியோகர் என்ற ஊரில் உள்ள வைத்தியநாத தாம் கோவிலிலிருந்து சில

நாட்களுக்கு முன்பு களவு போயிருக்கிறது. இது ஒரு பேரதிர்ச்சியாகும். ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தில் பாலசுந்தரையுடன் அமர்ந்திருக்கும் இந்த சூரிய நாராயண உருவம் ஆயிரம் ஆண்டு பழமையானது. இதை இழந்தது ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.

ஆந்திரப் பிரதேச ஆலயங்களிலிருந்து விலைமதிக்கவொண்ணா ஐம்பத்தாறு சிற்பங்கள் களவுபோயின என்று 1963ல் போலீசுக்குத் தெரிவிக்கப்பட்டது. போலீஸார் அதே ஆண்டில் பம்பாயில் பழம் பொருள் விற்பனையாளர் சிலரின் கிடங்குகளைச் சோதனையிட்டதில் களவாடிக் கொண்டு வரப்பட்ட சிற்பங்களும், செப்பு விக்கிரகங்களும் மரத்தில் செய்யப்பட்ட கலைப் பொருட்களுமாக எண்பத்தைந்து சிறந்த கலைச் செல்வங்கள் ஏற்றுமதிக்குத் தயாராக இருப்பது தெரிய வந்தது. நாளாந்தாப் பொருட்காட்சிச் சாலை மிக அபூர்வமான புத்த விக்கிரகங்களும் புத்த சமயத்தைச் சேர்ந்த பெரியோர்களின் உருவங்களுமாக 188 செப்பு விக்கிரகங்களை இழந்து விட்டிருக்கிறது. கல்கத்தா பொருட்காட்சிச்சாலை, குப்த முகலாயர்கள் காலத்து விலைமதிக்க வொண்ணாத புராதன நாணயங்கள் முப்பது திருட்டுப் போய் விட்டதாக அறிவித்திருக்கிறது. சமீபத்தில் சென்னை முதல் மந்திரி திரு பக்தவத்சலம் அவர்கள் தஞ்சாவூர் கோவில்களில் இத்தகைய தீய செயல்கள் நடைபெறுவதைப் பற்றிக் கவலை தெரிவித்தார். 1963ல் மதுரை மீனாட்சி அம்மன் ஆலயம் புனருத்தாரணம் செய்யப்பட்டபோது பல பழம் சிற்பங்களை யெல்லாம் அர்த்தமற்ற வேகத்தோடு விற்றதைத் தவிர்த்திருக்கலாம்.

இவ்விதம் நம் நாட்டிலிருந்து கலைச் செல்வங்கள் மறைவதைத் தடுக்க அரசாங்கம் முயன்று வருகிறது. சட்ட மூலமாகத் தடுக்கப் பல திட்டங்கள் காகிதத்தில் எழுதி வைத்திருக்கிறது. ஆனால் பொதுமக்களிடம் கலையார்வமும் பற்றுதலும் ஏற்படாத வரை என்ன முயற்சி எடுத்தாலும் பயனில்லைதான்.

ஆனால் இப்பிரச்னை இந்தியாவில் மட்டும்தான் என்றில்லை. ஐரோப்பிய நாகரிகத்துக்கும், கலைக்கும் உறைவிடமான இத்தாலி நாட்டில் இத்தகைய அட்டூழியம் ஆண்டுதோறும் மூன்று கோடி ரூபாய்க்கு நடைபெறுகிறதாம். சையாம் அரசாங்கம், தனது தலைநகர் பாங்காக் அருகில் நந்தபுரி ஜில்லாவில் சமீபத்தில் கண்டெடுத்த புத்த சின்னங்களைக் காப்பாற்றுவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது என்று குறைப்படுகிறது. சில நாட்களுக்கு முன்தான் எகிப்தில் ஓர் அதிசயத்தை அதிகாரிகள் கண்டார்கள். அதாவது தலைநகர் கெய்ரோ பொருட்காட்சிச் சாலையில் இருப்பதாகக் கருதப்பட்ட விலையுயர்ந்த கலைப் பொருட்களெல்லாம் அட்டவணையில் மட்டும்தான் இருந்தன!

சமீபத்தில் காணாமற்போன ஓர் அற்புதக் கலைப் பொருள் ஆச்சரியமான முறையில் மீட்கப்பட்டது. ஸ்விட்ஜர்லாந்து தேசத்தில் ஒரு தனி மனிதர் வீட்டில், ஓர் அடி உயரமுள்ள புத்தர் தலை சிற்பத்தை இந்தியத் தூதுவர் பார்த்தார். அவருக்கு இது மதுரா பொருட்காசிச் சாலையிலிருந்த அரிய சிற்பமல்லவா என்பது நினைவுக்கு வந்தது. உடனே அதை மீட்க முயற்சி எடுத்துக் கொண்டார்.

கல்கத்தாவில் ஒரு கிடங்கில் ஏழாவது நூற்றாண்டைச் சேர்ந்த புத்தர் சிலை இருப்பதை ஓர் ஆராய்ச்சி புரியும் மாணவர் பார்த்தார். இது நாளாந்தா பொருட்காட்சிச் சாலையிலிருந்ததாகும். அந்தச் சிலையின் மீது ''ஏற்றுமதிக்குத் தயார்'' என்று எழுதி ஒட்டப்பட்டிருந்தது. அந்தச் சிலையின் மீது பதித்திருந்த பொருட்காட்சிச்சாலையின் இலக்கம் அமிலத்தால் அழிக்கப்பட்டிருந்தது!

ஃ ஃ ஃ

வெளிநாட்டு யாத்திரிகர்கள் இந்தியாவுக்குப் பெருமளவில் வர உற்சாகமூட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் இந்திய அரசாங்கமே நமது கலைச் செல்வங்கள் விஷயத்தில் பெருந்தவறு இழைத்திருக்கிறது என்று பல கலாரசிகர்கள் குறைப்படுகிறார்கள். அவர்கள் கூற்றில் உண்மை இல்லாமல் போகவில்லை. வெளிநாடுகளில் காண்பிப்பதற்காகக் கொண்டு போகப்பட்ட பல கோனார்க் சிற்பங்கள், மீண்டும் இந்தியாவுக்குக் கொண்டு வரப்படவே இல்லை. பிளாஸ்டரில் அச்செடுத்த உருவங்களை மேனாடுகளுக்கு அனுப்பியிருந்தாலே போதுமானது. கோவில்களிலிருந்து மூல சிற்பங்களை எடுத்திருக்க வேண்டியதே இல்லை. இவை சம்பந்தமாகப் புரி ஜில்லா கலெக்டர் நடந்து கொண்ட விதத்தைப் பாராட்டி உருக்கமாகப் பல கலாரசிகர்கள் சொல்கிறார்கள்.

1950ல் புரி கலெக்டர், கோனார்க் சிற்பங்களை வெளிநாடுகளுக்கு அனுப்பக் கூடாது என்று தடுத்து, பதினைந்து நாட்கள் வரை



யில் அவற்றைப் புவனேசுவரியில் நிறுத்தி வைத்துப் போராடினாராம். அவர் முயற்சியெல்லாம் வீணாயிற்று. நியூயார்க்கில் சென்ற வருஷம் நடைபெற்ற அகில உலகப் பொருட்காட்சியில் பதினேழாவது நூற்றாண்டைச் சேர்ந்த பல அரிய கலைப் பொருட்களை இந்திய அரசாங்கப் பிரிவில் கண்டு பலர் திடுக்கிட்டனர். ஏனெனில், அங்கிருந்தவைகளுக்குப் பிரதியாக இந்தியாவில் ஒன்றுவது இருக்குமா என்பதே சந்தேகமே! அப்படிக் காணக் கிடைக்காத அரிய கலைச் செல்வங்களை அரசாங்கமே அந்நிய நாட்டினருக்கு விற்றிருக்கிறது. கேரள நாட்டின், நேர்த்தியான வேலைப்பாடுகள் அமைந்த மரவாசல்நிலையை, 30,000 ரூபாய்க்கு [விற்றிருக்கிறது. இந்தியாவிலுள்ள பல பொருட்காட்சிச் சாலைகளில் வைக்கக் கிடைக்காத முகலாயர் காலத்துச் சின்னஞ் சிறு வண்ண ஓவியங்களை ஆயிரம் ரூபாய்க்கு விற்றிருக்கிறது. மக்களுக்கு முன்மாதிரியாக விளங்க வேண்டிய அரசாங்கம் செய்யக்கூடிய காரியங்களா இவை? ஆகவே, தேசியக் கலைச் செல்வங்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் முதலில் நமது அரசாங்கம் தனது கொள்கைகளைச் சரியாகச் சீர்செய்து கொள்ள வேண்டும். இப்படி நமது செல்வங்கள் களவாடப்படுவதைப் பற்றி எல்லா மக்களுக்கும் தெரியும்படி செய்ய வேண்டும். ஊர்தோறும், கிராமந்தோறும் காட்சி தரும் கோவில்களில் உள்ள சிற்ப, கலைச் செல்வங்களைக் காப்பாற்றுவது அந்தந்த ஊர் பக்தர்களின் கடமை என்பதை உணர்த்த வேண்டும். இத்தகைய கலைப் பொருட்களைத் திருடுபவர்கள் இந்தியராயினும் அந்நியராயினும் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும். பொருட்காட்சிச் சாலைகளில் நன்கு தேர்ச்சி பெற்ற மேற்பார்வையாளர்களை, பாதுகாவலர்களை நியமிக்க வேண்டும். முக்கியமான விமான தளங்களிலும், ஏற்றுமதி நடக்கும் துறைமுகப்பட்டினங்களிலேயும் சுங்க அதிகாரிகளுக்கு உதவக்கூடிய சிறந்த கலாநிபுணர்களை நியமிக்க வேண்டும். பொருட்காட்சிச்சாலைகளில் உள்ள பொருட்கள் களவு போகாமலிருக்கின்றனவா என்று அடிக்கடி பரிசோதனைகள் செய்ய வேண்டும். பார்க்கப் போனால் இவையெல்லாம் தேசியக் கலைச் செல்வப் பாதுகாப்பு விஷயத்தில் சர்வசாதாரணமாக எடுக்கப்பட வேண்டிய ஒருசில நடவடிக்கைகள்தாம். இவ்விஷயத்தில் அசிரத்தை காண்பிக்காதிருந்தால்தான் நமது கலைச் செல்வங்கள் காப்பாற்றப்படும்.

## விளம்பர ரகசியம்



● இரண்டாவது உலகப் போர் நடந்துகொண்டிருந்த காலம். பிரிட்டிஷ் துருப்புகள் 'டிப்பி' என்னும் இடத்தில் திடீர் முற்றுகையிடத் தீர்மானித்து, தேதி நேரத்தையும் குறிப்பிட்டு ரகசியமாகவைத்திருந்தார்கள். இந்த ஏற்பாடு உயர் பதவியில் உள்ள சில அதிகாரிகளுக்கு மாத்திரம்தான் தெரியும்.

இந்த நேரத்தில் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த அதிகாரி ஒருவர் அதில் வெளியாகியிருந்த ஒரு சோப்புக் கம்பெனி விளம்பரத்தைப் படித்து விட்டுப் பரபரப்படைந்தார். அதில் ஒரு பெண்மணி 'பீச் கோட்'என்று குறிப்பிடப்படும் உடையை அணிந்து நின்றுகொண்டிருந்தாள். அவளுக்கு மேலே 'டிப்பியிலிருந்து ஒரு பீச்கோட்' என்ற வாசகமும் இருந்தது. அந்தப் பத்திரிகை விளம்பரத்தை எடுத்துக்கொண்டு அந்த அதிகாரி பரபரப்புடன் தலைமைக் காரியாலயத்துக்கு விரைந்தார். கோட் (Coat) என்ற பதம் 'கம்பைண்ட் ஆப்பரேஷன்ஸ் அட்டாக்' என்ற கூட்டு முற்றுகை ஏற்பாடாகிய ராணுவ ரகசிய வார்த்தை.

அந்த விளம்பரப் படத்தில் இருந்த பெண்மணி கையில் ஒரு தோட்டக் கத்தரிக் கோலை வைத்துக் கொண்டு முட்கள் நிறைந்த ரோஜாப் புதரை வெட்டிக் கொண்டிருந்தாள். இந்தச் செய்கை முட்கம்பி வேலி சுற்றிய 'டிப்பி'யை இரு பக்கமிருந்தும் டாங்கிகளைக் கொண்டு தாக்க நினைத்திருப்பதைக் குறிப்பிடவாமல்லவா? போதாக்குறைக்கு அந்தப் பெண்மணியின் ஆடைகளில் இருந்த பொத்தான்களின் எண்ணிக்கை பிரிட்டிஷ் ராணுவம் படையெடுப்பதற்காகத் தீர்மானித்திருந்த மணிக்கணக்குக்குச் சரியாக இருந்தது.

எதிரிகளுக்கு எச்சரிக்கை கொடுக்கும் வகையில் யாரோ உளவாளியின் ஏற்பாட்டால் வெளிவந்ததுதான் இந்தச் சோப் விளம்பரம் என்று தீவிர நம்பிக்கையால் ராணுவ அதிகாரிகள் உடனடியாக ஸ்காட்லண்ட் யார்ட் போலீஸ் உதவியை நாடினார்கள். தீவிரமாக அவர்கள் புலன் விசாரித்த பிறகு, எந்த எதிரி உளவாளியும் அந்த விளம்பரத்துக்காகக் காத்திருக்கவில்லை என்றும், வேறு யாரும் அந்த விளம்பரப் பெண்மணியின் பொத்தான்களை எண்ணிப் பார்க்க முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை என்றும் எதிர்பாராத விதத்தில் சந்தர்ப்பப் பொருத்தமாக வெளிவந்த அந்த விளம்பரம் வீணான குழப்பத்தை உண்டாக்கிவிட்டதென்றும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அந்த விளம்பரம் குறிப்பிட்ட முற்றுகையைப் பாதிக்கவில்லை!

செப்டம்பர் மாதம் 21ந் தேதி ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுக்கு எழுபத்தைந்து வயது நிறைந்து, எழுபத்தாறாவது வயது பிறக்கிறது. அவரது திருவுருவத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம்.

❋

# சங்கீத யோகி சிவன்

## திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணுசாமி பாகவதர்

ஸ்ரீமான் பாபநாசம் சிவன் அவர்களை நாற்பது வருஷ காலமாக எனக்குப் பழக்கம். அவர் என்னுடைய திருவையாற்றுக்கு அநேக முறை வந்திருக்கிறார். நானும் அவருடைய திருவையாற்றுக்கு அநேக தடவைகள் போயிருக்கிறேன். இப்படிச் சந்திக்கும் சமயங்களில் என்னுடைய உடன்பிறந்த சகோதரரைச் சந்திப்பதாகவே நான் மகிழ்ச்சி அடைவேன். அவர் ஒரு நல்ல புண்ணியப்புருஷர்.

நமது தேசத்தில் பர்த்ருஹரி என்னும் ஒரு மகான் இருந்தார். அவர் சொன்ன வாக்கியங்கள் சிவனை எப்போது பார்த்தாலும் எனக்கு ஞாபகப்படுத்தும். தர்மத்தில் ஈடுபாடு, பிறர் மனம் நோகாத முறையில் பேசுக, பிறருக்குக் கொடுக்கும் விஷயத்தில் உற்சாகம், யாரிடத்திலும் கபடம் வஞ்சனை இல்லாமல் நடந்து கொள்ளுதல், பிறருடைய தோஷத்தைத் தள்ளிக் குணத்தையே கொண்டாடுதல், குரு பக்தி, இவை பூர்வ ஜன்மாவில் புண்ணியம் செய்தவர்களுக்குத்தான் கிடைக்கும் என்று பர்த்ருஹரி எழுதியிருக்கிறார். இந்த அம்சங்களை யெல்லாம் நம்முடைய சிவனவாளிடம் பார்க்கலாம். அவருக்குத் தர்மத்தில் எல்லையில்லாத ஈடுபாடு. தர்மமாவது சுருங்கச் சொன்னால் நம்மைப் படைத்து எங்கும் நிறைந்திருக்கும் ஈசனைக் காண உண்டான வழிதான். நமது சிவன் மனம், வாக்கு, சரீரம் மூன்றையும் ஈசுவரனிடம் அர்ப்பணம் பண்ணி யிருக்கிறார். அவர் தமக்குக் கிடைத்த சங்கீத ஞானத்தால் ஈசனை ஆராதித்துக் கொண்டாட வேண்டியது தான் நம்முடைய கடமை என்று நிர்மாணித்து அந்தப் பெருமானின் திருவிளையாடல்களைத் தம் மனத்தில் வாங்கி அநுபவித்துக் கரைந்து, ஏராளமான கீர்த்தனைகள் செய்திருக்கிறார். இது எல்லோரும் அறிந்த விஷயம்.

நமது சரீர சிரமங்கூடப் பாராமல் க்ஷேத்திரங்கள்தோறும் சென்று உற்சவ காலங்களில் பகவானுடைய பெருமைகளைப் பாடிக் கொண்டு அவர் வீதிபஜனை செய்து பகவானுடன் வருவது எல்லா ஜனங்களையும் பரவசப்படுத்தியிருக்கிறது. இந்த எழுபத்தி



ஐந்தாவது வயதிலும் அவர் மெலிந்த உடலுடன் திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தன்று பஜனை செய்து கொண்டு வீதிவலம் வந்தது இவருக்கு ஈசனிடம் உள்ள உண்மையான பக்தியைப் பிரகடனம் செய்தது. இவருடைய சாகித்தியங்களையும் அவற்றை இவர் பாடும் அழகையும் கேட்டு ஒன்றுக்கும் அசையாத நெஞ்சம் படைத்த எனது ஆசாரியாள் உருகிக் கண்ணீர்விட நாங்கள் எல்லோரும் மெய்ம்மறந்திருந்தோம். அப்படி ஈசனைப் பாடுவதும், க்ஷேத்திரங்கள்தோறும் செல்வதும், பிறர் மனத்தை ஈசனின் திருவடிகளில் ஈடுபடும்படி செய்வதும், அவர் தர்மத்தில் ஈடுபட்டிருக்கிறார் என்பதை நிரூபிக்கிறது.

எனக்கு அவருடைய சங்கீதத்தைக் கேட்பதில் எல்லையில்லாத பிரீதி உண்டு. அவருடைய அநேக கிருதிகளை நான் அடிக்கடி கதையிலும் பாடுகிறேன். அவர் சங்கீத வித்துவான் மட்டும் அல்ல. ஹரிகதை செய்யும் வல்லமையும் வாய்ந்தவர். இன்றைக்கும் சங்கீதக் கச்சேரிகளில் வித்வான்கள் சிவனுடைய கீர்த்தனங்களைப் பாடும்போது ரசிகர்கள் ஆனந்தம் அடைகிறார்கள் என்பதை நான் சொல்ல வேண்டியதே இல்லை.

சிவனுக்குக் கோபம் வந்து நான் பார்த்ததில்லை. யாரிடத்திலும் உள்ளன்போடும் வஞ்சனையில்லாத முறையிலும் பழகும் சுபாவம் உள்ளவர். வறுமை மிகுந்த காலத்திலும் சரி, செல்வம் மிகுந்திருந்த காலத்திலும் சரி வித்தியாசம் என்பதே சிவனிடம் கிடையாது. இவரை ஒரு யோகி என்றுதான் நான் சொல்லுவேன். சிவன் அவர்கள் ஒரு சங்கீத யோகி.

கொடுப்பதிலும் எல்லை மீறின உற்சாகம் உடையவர் அவர். தம் வாழ்நாளில் சம்பாதித்த ஏராளமான சொத்தைத் தமக்கு என்று வைத்துக் கொள்ளாமல் தாம் பிறந்த ஊரில் ஜீர்ணமாயிருந்த சிவன் கோவிலைக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து சிவார்ப்பணம் செய்து விட்டார். இதன் மூலம் அவர் அழியும் இயல்பு உடைய செல்வத்தை என்றும் அழிவில்லாத சொத்தாகச் செய்து கொண்டு விட்டார். ஈசனுடைய திருவடிகளில் உண்மையாக ஈடுபட்டு அவனை விட்டு எப்போதும் பிரியாமலிருப்பதற்குச் செய்யக் கூடிய கைங்கரியத்துக்குச் செலவாகும் சொத்துத்தான் ஒரு மனிதனின் உண்மையான சொத்தாக ஆக முடியும் என்பதைச் சிவன் நமக்கெல்லாம் எடுத்துக் காட்டி விட்டார்!

நான் — எனது என்ற எண்ணமே சிவனுக்குக் கிடையாது. பிறர் துன்பப்படுவதைப் பார்த்து அவர் சகிக்க மாட்டார். ராமையா என்பதை இயற்பெயராகக் கொண்டு, சிவபூஜைகள் மூலம் சிவன் என்றே பட்டம் பெற்றுள்ள அவருக்கு ராமனிடத்திலும் எல்லையில்லாத பக்தி உண்டு. அவர் சம்ஸ்கிருத பாஷையிலும் சில கிருதிகளைச் செய்திருக்கிறார். சம்ஸ்கிருத வித்துவான்களுக்கெல்லாம் எல்லையில்லாத மகிழ்ச்சியைக் கொடுக்கும் முறையில் அவை அமைந்திருக்கின்றன. சம்ஸ்கிருத வார்த்தைகளுக்கு சம்ஸ்கிருதத்திலேயே அவர் ஓர் அகராதியும் எழுதி முடித்திருக்கிறார். அதை எங்களாலெல்லாம் மறக்கவே முடியாது.

இவ்வாறு பகவானிடத்தில் ஈடுபட்டுச் சங்கீதத் துறையில் உலகத்துக்கு உதவிவரும் எனது ஆத்ம நண்பரான சிவனை எவ்வகையிலும் பெருமைப்படுத்துவது ஈசனைப் பெருமைப்படுத்துவது போலவே ஆகும். உலகத்தில் உள்ள உயர்ந்த ரத்தினங்களைக் காப்பாற்றவேண்டிய முறை நமக்கெல்லாம் நன்கு தெரியும். அம்மாதிரி நமது பாபநாசம் சிவனாகிய ரத்தினமும் நம்மால் போஷிக்கப்படவேண்டியவர். அவருக்குத் திடகாத்திரத்தையும் தீர்க்காயுளையும் கொடுக்க வேண்டுமாய் அவரது எழுபத்தைந்தாவது ஆண்டு விழாவின்போது ஈசனைப் பிரார்த்திக்கிறேன்.

---

ஈசுவரன் அருளிருக்க வேண்டிய திடகாத்திரம், தீர்க்காயுள் இவற்றோடு ஸ்ரீ சிவன் அவர்களுக்குக் கர்நாடக சங்கீத ரஸிகர்கள் அளிக்கவேண்டிய ஒன்றும் உண்டு. கர்நாடக சங்கீத உலகின் இன்றைய தலைசிறந்த வாக்கேயகாரரான ஸ்ரீ சிவன் அவர்கள் கவலையின்றி நடத்துவதற்குரிய திரவிய வசதியை அவருக்கு அளிப்பது ரஸிகர்களுடைய பொறுப்பும் கடமையுமாகும். பொருள் அனுப்புபவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பிவைக்க வேணும். ஸ்ரீ பாபநாசம் சிவன், 9, ஸ்ரீநிவாசன் தெரு, சென்னை — 28.

— ஆசிரியர்

## உங்கள் அழகுக்கு புதுப் பொலிவை அளியுங்கள்!

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் முகம் சோபையுடன் வழவழப்பாகத் தோற்றமளிக்கும்

உங்கள் முகத்திற்கு வசீகரிக்கும் பொலிவை அளியுங்கள். நல்ல அழகியாகத் தோற்றமளிக்க விரும்பும் எந்தப் பெண்மணியும் முதலில் செய்ய வேண்டியது அதுதான். எண்ணெய்ப் பசையில்லாத செளம்யமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் உங்கள் சருமத்திற்கு மிருதுத் தன்மையும் பாதுகாப்பும் கிடைக்கும். அது சருமத்திலுள்ள பெரிய துவாரங்களை மூடி முகத்தில் 'எண்ணெய் வடியும் தோற்றம்' உண்டாகாமல் தடுக்கிறது... முகத்தில் கருப்புப் புள்ளிகள் உண்டாவதிலிருந்து பாதுகாப்பளிக்கிறது.

• பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத தனியாக உபயோகித்தால் உங்கள் வதனம் இயற்கைப் பொலிவுடன் விளங்கும். இந்தக் க்ரீமைத் தடவி அதன்மீது பவுடர் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரேசீராகப் படிந்து மணிக்கணக்கில் கலையாமல் இருக்கும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்து**
**உங்கள் அழகுக்கு மெருகூட்டுங்கள்**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பட்டது)

# காதல் இல்லையேல் சாதல்






[நாகராஜனின் கவிதைகளில் மயங்கிய மாலதி கொஞ்சம் கொஞ்சமாகத் தன் உள்ளத்தையும் அவனுக்குப் பறி கொடுக்கத் தொடங்கினாள். ஒரு நாள் அவனை அவள் தன் இல்லத்துக்கு வரும்படி கோருகிறாள். அதன் பிறகு என்ன நடக்கிறதென்று பார்க்கலாம்.]

## காட்சி 6

மாலதியின் சித்தப்பா கனகசபை வீடு.

பணக்காரர்களின் வீடெல்லாம் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கிறது. தனித்திருந்து வாழும் மனப்பான்மையில் கட்டப்பட்ட காம்பவுண்டுச் சுவர்; பலனில்லாத வாழ்க்கையைக் கட்டிக் காட்டுவது போல், கனி தராத மரங்களும், பூக்காத செடிகளும் நிறைந்த தோட்டம்; வாயிற்படியில் மிதியடி—தங்கள் வீட்டுக்கு வருபவர்கள் எடுத்து வந்தது அனைத்தையும் விட்டுச் செல்ல வேண்டும், போகும்போது எதையும் எடுத்துச் செல்லக்கூடாது என்ற நோக்கத்தை எடுத்துக்காட்டும் ஒரு சாதனம். தெருவிலிருந்து எடுத்து வந்த மண்ணையும் உதறிவிட்டுப் போகும் போது சேறும் குப்பையையும் தள்ளிவிட்டுச் செல்லப் போடப்பட்ட கால்மிதி அல்லவா?

பணக்காரர்கள் வீட்டில் இருக்கும் ஜம்பத்தைமட்டும் காணோம். ஆம், ஒரு நாய்கூட இல்லை! கனகசபை இருக்கிறார்! சுமார் நாற்பது அல்லது நாற்பத்தைந்து வயது இருக்கும். சற்றே நரைத்த மீசை, முற்றிலும் நரைத்த கேசம், முறைக்கும் விழிகள், விறைத்த பேச்சு, ஜரிகை வேஷ்டி, மல் ஜிப்பா. பேப்பர் படித்துக் கொண்டிருக்கிறார். மாலதி மாடிப்படி வழியே ஏதோ பாடியபடி இறங்கி வருவதைக் கனகசபை கவனிக்கிறார்.

மாலதி (மாடிப் படியிலிருந்து இறங்கிக் கொண்டே பாடுகிறாள்):

மன்டே என்ன உனக்குக் காலியா?
ஸன்டே என்ன உனக்கு ஜோலியா?

கன: இது என்னம்மா எளவுப் பாட்டு? நேத்து ஏதாவது தமிழ் சினிமா பார்த்தியா?

மாலதி: தமிழ் சினிமாவிலே இவ்வளவு நல்ல பாட்டு எங்கே சித்தப்பா வருது? இது ஒரு தமிழ்க் கவிஞர் எழுதினது.

கன: யார் அவரு?

மாலதி: எங்க காலேஜிலேதான்பா அவரு படிக்கிறார்.

கன: இந்த வயசிலே ஏன் காலேஜிலே சேர்றாரு?

மாலதி: அவருக்கு ஒண்ணும் வயசாகலே. படிக்கிற வயசுதான்.

கன: எது படிக்கிற வயசு? படிக்கிற வயசுன்றதுக்குத்தான் இப்ப அர்த்தமே இல்லாது போயிடுச்சே. அம்பது வயசிலே கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தன் கூட ஹிந்தி படிக்கிறான்! பாவம், படிக்கிற வயசா அது? அவன் பேரன் பேத்திங்க பள்ளிக்கூடத்திலே போய் ‘ஆத்தா ஹை! ஜாத்தா ஹை’ன்னு படிக்குதுங்க. இவன் ஆபீஸிலே ஆத்தா ஹை—ஜாத்தா ஹை!

மாலதி: படிச்சா என்ன தப்பு? இந்தி படிச்சா பிரமோஷன் வாங்கலாமே?

கன: பிரமோஷன் வாங்க மாட்டான். பென்ஷன்தான் வாங்குவான். அம்பது வயசிலே இந்தி ஆரம்பம். பாஸ் பண்ண உடனே ரிடையர் ஆகவேண்டியதுதானே? அப்பாலே ஏது பிரமோஷன்? பென்ஷன்தான்...எதுக்குச் சொல்ல வந்தேன், படிக்கிற வயசுன்ற வார்த்தைக்கு அர்த்தம் இல்லாமப் போயிடிச்சு.

மாலதி: சித்தப்பா! இந்தப் பாட்டு எப்படி யிருக்கு?

கன: சகிக்கலே! உங்கப்பன்தான் ஒரு தமிழ்க் கவிதைப் பைத்தியமாக இருந்தான். நீயுமா எளவு! அவன் பாட்டாவது நல்லா இருக்கும்.

மாலதி: உங்களுக்குப் புரியலே. இதை எழுதினவருக்கு எங்க கல்லூரிக் கவிதைப் போட்டியிலே முதல் பரிசாக்கும்!

கன: கல்லூரி லட்சணம் அப்படி இருக்குது!

மாலதி: உங்களுக்கு ஒரு பிறவிக் கவிஞருடைய மதிப்பைப் புரிஞ்சுக்கத் தெரியலே.

கன: அது என்ன அது பிறவிக் கவிஞன்? திறமை பிறவியிலேயே வர்றது இல்லே. கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கணும். பணம்

இரு காதலர்கள் விடப்பட்டால்கூட அங்கிருக்கும் மரங்களோ, செடி, கொடிகளோ, அவர்களுடைய கவனத்தைச் சற்றுத் திருப்பக்கூடும். ஒருவிதத்திலும் கவனத்தைக் கவர்ந்திழுக்கக் கூடிய அம்சமே இல்லாத இடம் தமிழ் சினிமாக் கொட்டகையே அல்லவா?— கதைக்கோ, கதாநாயகனுக்கோ என்ன நடந்தால் நமக்கென்ன, எல்லாம் ஈசன் செயல் என்ற பரிபக்குவ நிலைமை நமக்குத் தரும் சாதனம் அல்லவா பெரும்பாலான தமிழ் சினிமாக்கள்!

படம் ஓடிக் கொண்டிருக்கிறது. நல்ல வேளை நாகராஜனும், மாலதியும் தப்பித்தார்கள். அரசாங்க டாகுமெண்டரிப் படம் முன்பாகவே முடிந்து விட்டது. சினிமாக் கதாநாயகனும், கதாநாயகியும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.)



தான் பிறவியிலேயே கிடைக்கும். பிறவிக் குருடன், பிறவிச் செவிடன், பிறவி ஊமை. அப்படி!

மாலதி: என்ன சித்தப்பா! உங்களுக்குக் கவிதைகள்னாலே பிடிக்காதோ?

கன: அவ்வளவா பிடிக்காதுதான் மாலதி. அதெல்லாம் வாழ்க்கைக்கு ஒத்து வரதில்லே. உதாரணமா வள்ளுவரை எடுத்துக்க. 'கன்றொடு கன்றொக்கின் வாய்ச் சொற்கு இடமேது'ன்னாரு. இந்தக் காலத்துலே கன்றொடு கன் மீட் ஆயிடுச்சுன்னுப் போதும். அப்பாலே பேசிக்கிட்டேதானே இருக்காங்க.—'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று ஆடுவோம்'னாரு பாரதி யாரு. இங்கே நாம ஆடலே, திண்டாடறோம். அவங்க மகா கவிகள்! அவங்களைச் சொல்லிக் குத்தமில்லே! நாம நடத்துக்கிற விதம் அப்படி இருக்கு!

மாலதி (கவலையுடன்): சித்தப்பா! கவிதைகளைத்தான் பிடிக்காது உங்களுக்கு. கவிஞர்களைக் கண்டாலும் பிடிக்காதோ?

கன: கவிஞனை எனக்குப் பிடிச்சா என்ன? பிடிக்காட்டி என்ன? நம்ம வீட்டுக்கு என்ன ஒரு கவிஞன் மாப்பிள்ளையாக வரப்போறானா? கிடக்கட்டும் -விடு!...

மாலதி: உங்க எண்ணத்தை நீங்க மாத்திக்கவே மாட்டீங்களா?

கன: ஏன்?

மாலதி: ஒருவேளை ஒரு கவிஞரே மாப்பிள்ளையா வந்தா?

கன: விரட்டியடிப்பேன். காலணாக் காசுக்கு வாயக்கில்லாத ஆசாமிங்க...! கவிஞனைக் கட்டிக்கிட்டாக் காலம் பூராப் பட்டினி தான். உனக்கேன் இதைப் பத்திக் கவலே?

மாலதி: சும்மாத்தான் கேட்டேன்.

கன: அதுதானே கேட்டேன்...ஏதாவது ஒரு கவிஞனைக் கட்டிக்கணும்னு சொல்லி விடப் போறியோன்னு பயந்து போயிட்டேன், எனவு!

மாலதி: சொன்னா என்ன செய்வீங்க?

கன: நீ சொல்ல மாட்டியே?

மாலதி: இல்லே சித்தப்பா. ஒரு பேச்சுக்குக் கேக்கறேன். ஒரு கவிஞனைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு நான் சொன்னா, சேர்த்து வைச்சிடுவீங்களா?

கன: ஆஹா! சேர்த்துடுவேன் — பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே!

## காட்சி 7

### ஒரு சினிமா தியேட்டர்

(நாகராஜனும், மாலதியும் தமிழ்ப் படம் பார்க்க வந்திருக்கின்றனர். படம் பார்க்க என்று சொல்வது தவறுதான். சில மாத காலமாகப் பழகிவிட்ட இளம் காதலர்கள் சினிமாத் தியேட்டருக்குப் போவது, படம் பார்க்க என்று சொல்வது பைத்தியக்காரத்தனம்தான்! இளம் காதலர்கள் ஏன் தமிழ் சினிமாவுக்கே செல்கின்றனர் என்ற வினாவுக்கு விடையளிப்பது கடினமல்ல. எந்தவிதத் தொந்தரவும் இல்லாமல் பேசிக் கொண்டிருக்க, தமிழ்ப்படக் கொட்டகையைவிட வேறு சிறந்த இடம் இருக்க முடியுமா? பட்டப் பகலில் வெட்டவெளியில் ஒரு பார்க்கின் நட்ட நடுவில் தன்னந்தனியாக



ஆண் : நாம் நாளை எங்கு சந்திக்கலாம்?
பெண்: (நாணத்தால் முகம் 'ஜிவ்' என்று சிவக்கிறது. படத்திலும் அது தெரிகிறது. இது கலர்ப்படம்) பார்க்கில் சந்திப்போமா ?

மாலு: இந்த ரெண்டு பேரும் சரியான முட்டாள்களா இருக்காங்களே. பார்க்குக்குப் போனாலும் தனியா ஒரு நிமிஷம் பேச முடியுமா?

நாக: உனக்கு என்ன தெரியும்? தமிழ் சினிமா ஹீரோ, ஹீரோயின்னும் பார்க்குக்குப் போனா அந்த இடம் காலியாத்தான் இருக்கும். இதுவரைக்கும் இவங்க ரெண்டு பேரும் எத்தனை சினிமாவிலே ஆக்ட் பண்ணியிருக்காங்க தெரியுமா? அவங்களுக்குத்தான் தெரியாதாக்கும், பார்க்கிலே போனா அது காலியாயிருக்கும்னு! இப்ப இவங்க அங்கே போய் ஓடிப் பிடிச்சு விளையாடுவாங்க.

(படத்தில், பார்க்கில் கதாநாயகனும்-நாயகியும் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.]

நாக: பார்த்தாயா மாலதி?

மாலு: ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் ஏன் இப்படித் துரத்தறாங்க?

நாக: உடம்பு இளைக்க ஒரே வழி அது தான்!...... மாலதி, அவங்க காதலிச்சாச்சு. அடுத்தபடியா கலியாணம் பண்ணிக்க வேண்டியதுதான். கல்யாணத்துக்கப்புறம் ஜாலியா இருக்க முடியுமா? இதுதான் கடைசி சான்ஸ்! அதனாலேதான்!

மாலு: அப்போ உங்களுக்குக் கல்யாணத்துலே இஷ்டம் இல்லையா?

நாக: சே, சே சும்மா ஜோக் அடிச்சேன்.

மாலு: போறுமே, சகிக்கலே!

நாக: எது? சினிமாவா?

மாலு: உங்க ஜோக் !

நாக: அப்ப நான் சொன்னது ஜோக்குனு ஒத்துக்கிறியா?

மாலு: நிஜமாத்தான் கேக்கறேன், உங்களுக்குக் கல்யாணத்திலே இஷ்டம் இல்லையா....?

நாக: ஏன் அப்படிக் கேக்கறே மாலதி....?

மாலு: நான் எங்க சித்தப்பாவை வந்து பாருங்கன்னு எவ்வளவோ தரம் சொல்லியாச்சு. நீங்க இன்னும் வரப் போறதில்லை.

நாக: வரேன்..... அநேகமா நாளைக்கு உங்க வீட்டுக்குக் கண்டிப்பா நான் வரேன்.

மாலு: நிஜம்மா?

நாக: நிஜம்மா.

மாலு: சத்தியமா.

நாக: நிஜம் வேறே — சத்யம் வேறேயா? ஆல்ரைட் சத்யமா வரேன்.

பெண்: அத்தான்! உங்களை நம்பலாமா?

நாக: என்ன இவ சமய சந்தர்ப்பம் தெரியாமல் கேள்வி கேக்கறா? நீ என்னை நம்பலாம் மாலதி.....

ஆண்: (மெதுவாய்த் திரும்பிப் பார்த்து) என் மேலே உனக்குச் சந்தேகமா? (பெண்ணின் கையைப் பிடித்து) இந்த விநாயகக் கடவுள் மீது ஆணை. உன்னை நான் கைவிடமாட்டேன்! (அவள் கையை விடுகிறான்)

மாலு: இந்த ஆண்களே இப்படித்தான். சொல்லி ஒரு நிமிஷம் ஆகலே; கைவிட்டாச்சு.....ஆமாம், நாகராஜன், பார்க்கிலே தானே பேசிக்கிட்டிருந்தாங்க — அங்கே எப்படித் திடீர்னு விநாயகர் விக்கிரகம் வந்தது?

நாக: தூணிலும் இருப்பார் — துரும்பிலும் இருப்பார்! பார்க்கிலே மட்டும் இருக்க மாட்டாரா? நீ ஒன்னு கவனிச்சிருக்கியா மாலதி ?

மாலு: என்ன?

நாக: இந்தக் காதலர்கள் சபதம் வைக்கிறது விநாயகர் முன்னாலேதான். வீட்டுக்குத் தெரியாம கல்யாணம் பண்ணிக்கிறவங்களுக்கு விநாயகர்தான் சாட்சி. இந்த மாதிரி காதல் கல்யாணத்துக் கெல்லாம் விநாயகர்தான் ரொம்ப ஹெல்ப் பண்றார். மத்த கடவுள் களெல்லாம் அவ்வளவு உதவியா இருக்கிறதில்லே, கவனிச்சிருக்கியா நீ. ஏன்..... முருகனுக்கு வள்ளியைக் கல்யாணம் பண்ணிக்க ஹெல்ப் பண்ணினதே விநாயகர்தான்.

மாலு: ஆமாம், ஏன் அப்படி?

நாக: அவர்தானே பிரம்மச்சாரிக் கடவுள் ? கல்யாணம் பண்ணிக்கிறவங்க படற கஷ்டம் அவருக்கு எப்படித் தெரியும்? அதுதான் தாராளமாக் கல்யாணத்தைப் பண்ணி வெச்சுடறார்.

மாலு: நாகராஜன்.... நீங்க திரும்பித் திரும்பி இப்படியே பேசறீங்க.....உங்களுக்கு என்னைக் கல்யாணம் செய்துக்கிறதிலே இஷ்டம் இல்லேன்னு சொல்லிடுங்க.

பெண்: இந்த ஆண்களே இப்படித்தான். நம்பினவளை நட்டாற்றில் கைவிடுவதில் வல்லவர்கள்.

நாக: அய்யய்யோ! இந்த ஹீரோயின் என்ன ஏதாவது எக்கச்சக்கமா உளறிக்கிட்டே இருக்கா? மாலதி என்னை நம்பு..... நான் நிச்சயமா நாளைக்கு உங்க வீட்டுக்கு வந்து உங்க சித்தப்பாகிட்டே கல்யாணப் பேச்சை எடுத்துடறேன்.

மாலு: நீங்க உங்க ஊருக்குப் போகணும்னு சொன்னீங்களே, என்னிக்கு?

நாக: நாளைக்கு நைட் மெயில்லே போறேன்....... என் மாமாவுக்கு உடம்பு சரியா யில்லையாம்......

மாலு: நான் எப்படி நாகராஜன் இங்கே தனியாக இருப்பேன்....?

நாக: நான் என்ன செய்யறது, மாலதி? அவசியம் போயாகணும். அப்பா, அம்மா இல்லாத என்னைப் படிக்க வெச்சு ஆளாக் கினதே அவர்தான். அவருக்கு உடம்பு சரியில்லாதப்ப நான் அவரைப் போய்ப் பார்க்க வேண்டாமா ?

மாலு: சீக்கிரம் திரும்பி வந்துடுவீங்க இல்லே?

நாக: இரண்டே நாள். நாளைக்கு உங்க சித்தப்பாகிட்டே கல்யாண விஷயமா முடிவு செஞ்சுக்கிட்டு, அடுத்த நாள் எங்க மாமாகிட்ட பர்மிஷன் வாங்கிக்கிட்டுத் திரும்பி வந்துடுவேன்...... ஆமாம், மாலதி.... உங்க சித்தப்பா ஒண்ணும் முட்டுக்கட்டை போட மாட்டாரே ?

மாலு: என் இஷ்டத்துக்கு விரோதமா அவர் ஒண்ணுமே செய்ய மாட்டார்.

நாக: வெரி குட்.......

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்...உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.





காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல, குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

பெண்: நாம் நினைக்கிறபடி இந்த உலகத்தில் எதுவுமே நடப்பதில்லை.

நாக: என்ன இது? பெரிய அபசகுனமா இருக்காளே இவ?

பெண்: அத்தான், என் தந்தை நமது திருமணத்துக்குச் சம்மதம் தர மறுத்து விட்டார் அத்தான்...,

ஆண்: பெற்ற பெண்ணுக்கு முற்றிலும் விரோதமாக, சற்றும் யோசியாமல் குற்றம் புரியும் உன் தந்தை ஒரு தந்தையா ?

பெண்: அத்தான்! இப்போது என்ன செய்வது ?

ஆண்: நாம் இருவரும் இன்றிரவே புறப்பட்டு அரச மரத்தடி விநாயகர் சந்நிதியில் சத்தியம் செய்து திருமணம் செய்து கொண்டு, தம்பதிகளாக நாளை உன் தந்தையைக் காண்போம், கண்ணே !

மாலா: அவனுக்கு எவ்வளவு தைரியம் பார்த்தீங்களா? சித்தப்பா முடியாதுன்னு சொன்னா, நீங்க இந்த ஹீரோ மாதிரி தைரியமா என்னைக் கல்யாணம் பண்ணிப்பீங்களா ?

நாக: அய்யய்யோ!

மாலா: ஏன், மாட்டீங்களா?

நாக: சே! சே! மாட்டிக்கிட்டா அவ்வளோ தான்......

மாலா: இவ்வளவுதானா நீங்க? அந்த ஹீரோவுக்கு இருக்கிற தைரியம்கூட உங்களுக்கு இல்லையே ?

நாக: அவனுக்குத் தைரியத்துக்கு என்ன குறைச்சல்? அவனுக்குத் தெரியும் என்ன தான் அக்கிரமம் பண்ணினாலும், மூணு மணி நேரத்திலே, படம் முடியறதுக்குள்ளே அப்பன்காரன் மனசு மாறி, பெண்ணையும் மாப்பிள்ளையையும் வீட்டுக்கு அழைச்சுக்கு வார்ன்னு ஹீரோவுக்குத் தெரியும் — டைரக்டர் சொல்லியிருப்பார். நம்ப கேஸ்லே அப்படியா ?

மாலா: அப்போ.....

நாக: எப்படியாவது உங்க சித்தப்பா பர்மிஷனோடதான் கல்யாணம் செய்துக்கணும்.

மாலா: நாகராஜன், எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?.... இவ்வளவு நேர்மையானவரை அடையறதுக்கு நான் ரொம்ப ரொம்ப அதிர்ஷ்டம் செய்திருக்கணும்.

நாக: சரி.... சரி..... இந்த சீன் பாரேன்..... அமர்க்களமா இருக்கும்.

மாலா: எப்படித் தெரியும் ?

நாக: நான் முன்னாலேயே ஒரு தடவை இந்தப் படத்தைப் பார்த்துவிட்டேன்...

மாலா: ஐயோ! இதை எப்படித்தான் ரெண்டாம் தடவை பார்க்கிறீங்களோ !

நாக: உனக்குத் தெரியாது. மூக்கால்வாசி தமிழ் சினிமாக்களை ஒரு தடவைக்கு இரண்டு தடவையா பார்க்கறதுதான் நியாயம், அது கடவுள் செயல்......

மாலா: என்ன சொல்றீங்க நீங்க....?

நாக: ஆமாம், முதல் தடவை பார்க்கிறது ஒரு பாவம் — ரெண்டாம் தடவை பார்க்கிறது அதுக்கு ஏத்த தண்டனை ! (தொடரும்)



''கொஞ்சம் எழுந்து அந்தப் பெண்ணுக்கு உட்கார இடம் கொடுங்களேன்!''

''ஏன் நீ ந்தா ன் எழுந்திருந்து இடம் கொடு மேன்!''

''நான் எழுந்தாலும் அவள் உட்கார மாட்டாள்! அவள் என் மனைவி!! நான் நிற்கும் போது அவள் எப்படி உட்கார்ந்து வருவாள் ?''



''சமையல் எனக்கு நல்லாத் தெரியுங்கறதுக்காகத்தான் உங்கப்பா என்னைக் கட்டிக்கிட்டாரு!''

''அதும்போலத்தான் நானும்! சமையல் நல்லாத் தெரியுதுங்கறதுக்காகத்தான் நம்ம வீட்டுச் சமையல்காரனை நான் கட்டிக்கப் போறேன்!''



# இன்பக் கனவே எழிலுருவே ...ஏற்றம் மிகுந்த ஓவியமே

உங்கள் இன்பக் கன
வுகள் நனவாக
கவர்ச்சியான் சக்தி
சில்க் ஆடைகளை
அணிந்து எழிலோவி
யமாகத் திகழுங்கள்.
நயமான துல்லிய
நெசவு, வண்ண
வண்ண மாதிரிகள்,
சக்தி சில்க்குகள்.
உங்கள் மனம கவரும்
மாதிரிகளில் தயாரிக்கப்
படுகின்றன. உங்கள்
வனப்பின் பூரணப்
பொலிவை எடுத்துக்
காட்ட சக்தி சில்க்
ஆடைகளை
அணியுங்கள்.

## Shakti Silks

**போதார் தயாரிப்புகள்**

க்ரேப்ஸ். டஃபேட்டாஸ்,
சாட்டின்ஸ். புரோக்கேட்ஸ்
னைலான் மற்றும் ரேயான்ஸ்
'டெரின்' ஸூட்டிங்
மற்றும் ஷர்ட்டிங்ஸ் ரேயான்
ஸூட்டிங்ஸ்



## வீர அபிமன்யு

இதிகாச, புராணப் படங்களுக்கு மவுசு சில காலம் குறைந்திருந்தது. இப்பொழுது மீண்டும் தலைகாட்ட ஆரம்பித்திருக்கின்றன. ஆனால் எல்லாம் ஏற்கனவே படமாக வந்தவை தான். 50, 60, 70என்று பாடல்களின் எண்ணிக்கையைக்கொண்டு படத்தின் தரத்தை மதிப்பிட்ட காலம்அது !

ராஜலக்ஷ்மி புரொடக்ஷன்ஸாரின். வீர அபிமன்யுவிலும் பாடல்கள் அதிகம்தான். இதிகாசக் கதையாதலால் பாடல்களின் கனத்தைச் சிரமமின்றித் தாங்குகிறது.

மகாபாரதத்தின் இன்றியமையாத பாத்திரமான கண்ணபிரானின் பாத்திரத்தை ஜெமினி கணேசன் ஏற்றுச் சிறப்பாகச் செய்திருக்கிறார். பரந்தாமனின் பாகத்துக்கு ஏற்ற எழிலார்ந்த தோற்றம் அவருக்கு இருக்கிறது. அதை வைத்துக் கொண்டே அவர் படம் முழுவதும் பரிமளிக்கச் செய்துவிட்டார்.

ஏவி.எம். ராஜனுக்கு இப்பொழுது நல்ல காலம். கதாநாயகன் வீர அபிமன்யுவாக வீரத்துடன் நடித்து, தீரத்துடன் போரிட்டிருக்கிறார்.

உத்தரையாக நடிக்கும் காஞ்சனாவுக்கு இதில் நல்ல சான்ஸ் கிடைத்திருக்கிறது. ஒயிலாக ஒசிந்து, மயிலாக அசைந்து ஆடிக் கடைசியில் கண்ணீரும் வடிக்கிறார்.

வீரம் பிரதாபங்களும், துயரக் குமுறல்களும் நிறைந்த படத்தில் நாகேஷின் ஹாஸ்யம் வரவேற்கக் கூடியதாக இருக்கிறது. உத்தர குமாரனாக வந்து எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்.

அர்ஜுனன் பாத்திரம் பாலாஜிக்குப் பொருத்தமானதுதான்.

திரௌபதி என்ன தவறு செய்தாளோ ? ஜி. வரலக்ஷ்மிக்கு அந்தப் பாத்திரத்தைக் கொடுத்து கருத்தெரியாமல் நசுக்கி விட்டார்கள் ! இது மிகப் பெரிய கொடுமை.

துரியோதனனுக்குள்ள பௌருஷத்தையும் பராக்கிரமத்தையும் டி. கே. பகவதியிடம் நன்கு காண முடிகிறது.

மாபெரும் போர்க்களத்தில் சர்ப்பவியூகம், கருடவியூகம், பத்மவியூகம் முதலிய இதிகாச காலத்து வியூகங்களை வகுத்துக் காட்டியிருப்பது வியந்து விம்மிதம் அடையச் செய்கிறது. கடோத்கஜனின் மாயாஜாலப் போர்களும் நன்கு படமாக்கப்பட்டிருக்கின்றன. வசனம் நன்றாக அமைக்கப்பட்டிருக்கிறது.

வேலும் வில்லும் விளையாட, பார்த்தேன் சிரித்தேன் என்ற பாடல்கள் நன்றாயிருக்கின்றன. கடைசிக் காட்சி விசுவரூப தரிசனம் அருமையாக அமைந்திருக்கிறது. பார்த்து மகிழக்கூடிய படம்.

## நீ

ஜெய்சங்கர் : கட்டழகியைக் காதலிக்கவும் காதலித்தவளைக் கடிமணம் புரியவும், கடிமணம் புரிந்தவளைச் சந்தேகத்தின் காரணமாகக் கைவிடவும், கயவர்களுடன் கட்டிப் புரண்டு கைகலக்கவும், கடைசியில் உண்மை தெரிந்து கண்ணீர் பெருக்கவும் இவருக்கு வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. கிட்டிய வாய்ப்புகளைக் கைவிட்டு விடாமல் ஜமாய்க்கிறார்.

ஜெயலலிதா: இரட்டை வேடம் தாங்கி,ஒரு பாத்திரத்தில் அநாதையாகிக் கயவர்களிடம் சிக்கி, கட்டழகனொருவனின் காதலைப் பெற்று, அவன் கைப்பிடித்துப் பிறகு அவனால் கைவிடப்பட்டுத் துயருறவும், இன்னொரு பாத்திரத்தில் குறைந்த உடையுடன் வளைந்து ஆடி வாலிபர்களை மயக்கவும் 'சான்ஸ்' கிடைத்திருக்கிறது. இரண்டு கட்டங்களிலும் இவர் சோடை போய்விடவில்லையென்றாலும், அநாதைப் பெண் பாத்திரம்தான் நம் உள்ளத்தில் இடம் பெறுகிறது.



நாகேஷ்: சயன்ஸ், ஆராய்ச்சி, அது இது என்று சொல்லி எப்படியோ சிரிப்பு மூட்டப் பாடுபட்டிருக்கிறார்.

சகஸ்ரநாமம்: கௌரவ நடிகர்; அதோடு கௌரவமான குடும்பத் தலைவரும்கூட. அப்பப்பா, அநாதைப் பெண்ணை மணந்த தம்பியின் மீது என்னமாய்ச் சீறுகிறார் !

பண்டரிபாய்: 'குலதெய்வம்' படத்தில் நடித்துப் பழகிய அண்ணியின் பாகம்தான். அதுதான் இவருக்குத் தண்ணீர் பட்ட பாடாயிற்றே!

மாணவ மாணவிகள் இடுப்பை நொடித்து ஆடும் ஆட்டமும், பாட்டும் அளவுக்கு மீறிப்போய் விடுகின்றன. பாட்டு ஒன்றுகூட நன்றாயில்லை.

இரண்டொரு தமிழ்ப் படங்கள் நன்றாயமைந்தன என்று திருப்தியடையும் தருணத்தில் ஸ்ரீ விநாயகா பிக்சர்ஸாரின் "நீ" வந்திருக்கிறது.





## அழகும் அணிவும்

அழகில் சிறந்த யுவதி அவள். மாலையில் டம்பப் பையுடன் கடை கண்ணிக்கும் புறப்பட்ட அவளது மணி பர்ஸை ஒருவன் தேட்டை போட்டு விட்டான். கையும்மெய்யுமாக அவனைப் பிடித்து வந்து போலீஸ் நிலையத்தில் நிறுத்தினாள் அந்தப் பெண். புகார் எழுதும்பொழுது போலீஸார் அவள் பெயரைக் கேட்டார்கள். அவள் தன் பெயரை வெளியிட உறுதியாக மறுத்து விட்டாள். அதற்கு அவள் கூறிய காரணம்:

என் பெயரை இந்த வழக்கில் நீங்கள் வெளியிட்டு விட்டால், அப்புறம் எந்த ஆடவனும் என்னை மணந்து கொள்ள முன்வரமாட்டான். ஏனென்றால், இந்த ஆசாமி என் பர்ஸைத் திருட முயன்றபொழுது முதுகில் ஒரு



குத்தும் காலால் ஓர் உதையும் கொடுத்தேன். பல கரணங்கள் போட்டுக் குப்புற விழுந்து மண்ணைக் கவ்வினான். தலையில் ஒரு குட்டு வைத்து இத்தனை தொலைவில் உள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு இவனை அரைகுறை உணர்வோடு நான் ஒருத்தியாகவே தூக்கி வந்திருக்கிறேன். நான் செய்திருக்கும் இந்தச் சாகசச் செயல்களோடு என் பெயரையும் நீங்கள் வெளியிட்டு விட்டால் அப்புறம் எந்த ஆடவன் என்னை மணந்து கொள்ளத் துணிவான்? இந்த இக்கட்டிலிருந்து என்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமானால் என் பெயரை அம்பலப்படுத்தலாமா ?

அந்தச் சரியான காரணத்தைக் கேட்ட போலீஸார் அப்புறம் அவள் பெயரைக் கேட்கவில்லை.

## பொது எண் ?

உலகிலுள்ள எல்லாத் திருமணமான மக்களுக்கும் ஒரு எண் பொதுவாக இருக்கும் இந்த ஆண்டில். அந்த எண் என்ன தெரியுமா? -- 3930.

இந்த எண் எப்படிக் கிடைக்கிறது ? நீங்கள் பிறந்த வருடம், திருமணமான வருடம், தற்போதைய வயது, இல்லறம் நடத்திய ஆண்டுகளின் எண்ணிக்கை இந்நான்கையும் கூட்டினால் மேற்கண்ட எண் வரும்.

நபருக்கு நபர் மேற்குறிப்பிட்ட எண்கள் மாறுபட்டாலும், கடைசியில் கூட்டிப் பார்க்கும் போது மேற்கண்ட எண்தான் அனைவருக்கும் வரும்.

## சந்திப்பு

● ● ● தமிழழகன்

*கணத்துக்குக் கணம் 'டிக் டிக்' என்று ஒலித்துக் கொண்டிருக்கும் கடிகாரத்தை நோக்கி, 'ஏன், இப்படி விடாமல் துடித்துக் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டேன் நான்.*

*''இருதயத் துடிப்புள்ள மனிதனை வெல்வதற்காகத்தான்!'' என்றது கடிகாரம் !*

*நொடிக்கு நொடி 'டக் டக்' என்று அடித்துக் கொண்டிருக்கும் இருதயமுள்ள மனிதனை, ''நீயும் ஏன் இப்படித் துடித்துக் கொண்டிருக்கிறாய் ?'' என்று கேட்டேன்.*

*''கணம்தோறும் விரைந்து கொண்டிருக்கும் காலத்தை வென்று விடத்தான்!'' என்றானே அவனும்!*

## இடமாற்றம் :




*சேனையில் பணியாற்றி ஓய்வுபெற்ற ஒருவர் வேறு துறையில் குமாஸ்தாவாகப் பணியாற்றலானார். அவருக்கு யுத்த சேவையின்போது மேலதிகாரிகளிடமிருந்து தாம் பட்ட அவஸ்தையின் நினைவுகள் பசுமையாக இருந்தன. முன்னாள் கர்னல் ஒருவருக்குத் தம் ஆத்திரம் தீர, ''அன்புடையீர், தங்களிடம் நான் இரண்டு வருட காலம் பட்ட கஷ்டத்துக்கு, தாங்களும் தங்கள் கீழுள்ள படை அணியும் நரகத்துக்குப் போவது நல்லது'' என்று கடிதம் எழுதினார்.*

*''ஐயா, படைகள் நகர்ந்து இடமாற்றம் செய்வதற்கான தங்கள் மேலான யோசனைகளைப் பாதுகாப்பு இலாகா நமூனாவில் பூர்த்தி செய்து அனுப்பினால்தான் கவனிக்கப்படும். அடக்கம்: மாதிரி நமூனா'' என்ற பதில் அடுத்த வாரத்திலேயே வந்தது!* ஆதாரம்: காரனெட்



# நீதிபதியை மடக்கிய கிழவி

ஸ்ரீமதி ஜோன்ஸ்-க்கு வயது எண்பது. அவர் நாற்பது வயதுக் காரியைப் போல் கார் ஓட்டுவார். வேகமாக ஓட்டுவதில் அவருக்கு ஆசை. அவரது முப்பத்தைந்து ஆண்டு காலக் கார் ஓட்டும் அனுபவத்தில் ஒருமுறைகூடத் தண்டிக்கப்படவில்லை என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொள்வார்.

ஒரு நாள் அவரது இந்த ரிகார்டு மறைந்துவிட்டது. ஒரு போலீஸ்காரன் அவரது காரைப் பின்தொடர்ந்து, சிவப்பு விளக்குக் காட்டப்பட்டபோது காரை நிறுத்தாமல் ஓட்டியதாகக் குற்றம் சாட்டினான். நீதிபதி முன்னால் ஸ்ரீமதி ஜோன்ஸ் நிறுத்தப்பட்டார். நீதிபதி, இவ்வளவு வயதாகிறது! இப்படி வேகமாக ஓட்டலாமா? உமக்குக் கண் பார்வை சரியாக இல்லாததால்தான் இப்படி ஏற்பட்டது என்றார்.

ஸ்ரீமதி ஜோன்ஸ் தமது பெரிய கைப் பையிலிருந்து ஓர் ஊசியையும் சிறிது நூலையும் எடுத்தார். ஒன்றும் பேசாமல் முதல் முயற்சியிலேயே ஊசியில் நூலைக் கோத்தார். நீதிபதி தம்மைக் கவனிக்கிறாரா என்று மட்டும் பார்த்தார்.

பிறகு அந்த நூலையும் ஊசியையும் நீதிபதியிடம் கொடுத்து ஐயா! நீங்கள் இதே மாதிரி முயன்று பாருங்கள்! நீங்களும் கார் ஓட்டுவதாக நான் நினைக்கிறேன். உங்களுடைய கண் பார்வையில் உங்களுக்கு நம்பிக்கை உண்டு என்று கருதுகிறேன் என்றார். ஆறு முறை முயன்றும் நீதிபதியினால் முடியவில்லை. கிழவி சிரித்தாள். ஸ்ரீமதி ஜோன்ஸின் மீதிருந்த வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

(ஒரு பழைய ஆங்கிலக் கதை) நா. ஜகந்நாதன், எம்.ஏ.



## நிரந்தர வழுக்கை!

கூந்தல் வளரும் தைலத்தையெல்லாம் யௌவனப் பருவத்திலேயே பயன்படுத்துவது நல்லது. ஏனென்றால் முப்பது வயதுக்கு மேல் புதிதாகத் தலைமயிர் வளராது. ஏற்கனவே முளைத்துள்ளதுதான் வளரும். அப்புறம் வழுக்கை விழுந்தால் விழுந்தது தான். சஸ்திர சிகிச்சையின்மூலம் நல்ல கேசத்தை வேரோடு எடுத்து வழுக்கை விழுந்த தலையில் வைத்துத் தைப்பது இப்போது மேனாட்டில் நடக்கிறது. யௌவனத் தோற்றத்தைக் கருதி இப்படி எத்தனை பயங்கரங்கள்!

❀ நம்மைப் பற்றி நமக்கே தெரியாத மேலும் சில விவரங்கள்: நம் உடலில் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும் இரத்தம் ஒரு நாளைக்கு 1680 லட்சம் மைல் பிரயாணம் செய்கிறது!

❀ நம் தொண்டையில் ஏழு துவாரங்கள் ஒன்று கூடுகின்றன. நடுச் செவியின் குழாய்கள் இரண்டு; நாசித் துவாரங்கள் இரண்டு; உணவுக் குழலின் துவாரம் ஒன்று; காற்றுக் குழல் துவாரம் ஒன்று. வாய் துவாரம் ஒன்று.

❀ நமக்கு உபயோகப்படாத 180 உறுப்புகள் நம் உடம்பில் இருக்கின்றன.

❀ நம் காதுகளில் ஒலியைக் கேட்க ஒரு லட்சம் செல்கள் இருக்கின்றன. - தஞ்சி



# இருமடங்கு குற்றவாளி

காந்திஜிக்கு அன்று மௌன தினம். வர்தாவில் உள்ள சேவா கிராமத்தில் தங்கியிருந்தார். வெளியில் உலாவக் கிளம்பினார். நடைபாதையில் கொஞ்சம் பஞ்சுப் பட்டை கிடந்தது. உடன் வந்த சேவிகை ஒருத்தியிடம் அந்தப் பஞ்சைச் சுட்டிக் காட்டினார். அவள் அந்தப் பஞ்சை எடுத்து வைத்துக் கொண்டாள். பிறகு அதைக் குப்பையில் எறிந்து விட்டாள். துப்புரவில் கவனமுள்ள காந்திஜி, அப்படிச் செய்யத்தான் தனக்குச் சைகை காட்டினார் என்று அவள் நினைத்தாள்.

மறுநாள் பொழுது விடிந்ததும், முதல் பேச்சாக, 'நேற்று எடுத்து வைக்கச் சொன்னேனே, அந்தப் பஞ்சைக் கொண்டுவா' என்றார் காந்திஜி.

திடுக்கிட்ட சேவிகை தான் செய்த பிழையைத் தெரிவித்தாள். அது சிறு பஞ்சுப் பட்டைதானே என்று சமாதானம் சொன்னாள்.

"இதுவே ஒரு பைசாவாக இருந்தால் என்ன செய்திருப்பாய்?" என்று கேட்டார் காந்திஜி.

"எடுத்துப் பத்திரப்படுத்தி யிருப்பேன்" என்றாள் சேவிகை.

உடனே காந்திஜி குப்பைத் தொட்டியிலிருந்து அந்தப் பஞ்சைக் கொண்டுவரச் சொன்னார். அதை அப்பொழுதே நூலாக நூற்ற பிறகு தான் அவருக்கு நிம்மதி ஏற்பட்டது.

"இந்தப் பருத்தியைச் சுத்தம்செய்து பட்டைபோட்டதில் எவ்வளவு மனித உழைப்பு கலந்திருக்கிறது. சிந்தித்துப் பார். இதை எறிந்தவன் ஒரு குற்றவாளி; இதைச் சுட்டிக் காட்டிய பின்பும், குப்பையில் போட்ட நீ இருமடங்கு குற்றவாளி. இனி எச்சரிக்கையாக இரு!" என்று கண்டித்தார் காந்திஜி.



# அதிருஷ்டக் கதை



பத்து வருடங்களுக்கு மேலாகத் தொடர்ந்து சிறுகதை, நாடகம், நாவல் என்று எழுதிக் குவித்தும் எந்தவிதமான வெற்றியும் காணாமல் ஏங்கி ஒதுங்கியிருந்தவர் அவர். அவர் பெயர் வாசகர் உலகத்துக்குத் தெரியாமலே இருந்தது. இத்தனைக்கும் அவர் மருத்துவக் கல்லூரியில் படித்து வைத்தியத் தொழிலுக்கான பட்டம் பெற்றவர். நண்பர்களில் பலர் அவரை எழுத்துத் துறையிலிருந்து வைத்தியத் துறைக்கு இழுக்க முயன்றார்கள். ஆனால் அவரோ பிடிவாதமான தன்மை மிக்க கொண்டவராக இருந்தார். பிற்காலத்தில் இரண்டு லட்சம் பவுன்களுக்கு மேலாகச் சம்பாதிக்கக் கூடிய அதிருஷ்டம் பெற்றவர். அப்போது ஆண்டு ஒன்றுக்கு இருநூறு பவுன்கூடச் சம்பாதிக்க முடியாத நிலையில் வறுமையில் ஆழ்ந்திருந்தார்.

ஒரு நாள் இரவு அவருடன் தங்க ஜான் காஸ்டன் என்ற நண்பர் ஒருவர் வந்து சேர்ந்தார். நண்பர் தூக்கம் வரும் வரை படித்துக் கொண்டிருக்கட்டுமே என்று அந்த எழுத்தாளர் கையெழுத்துப் பிரதியின் உருவத்திலே தங்கியிருந்த தம் கதை ஒன்றை எடுத்துக் கொடுத்துவிட்டுப் படுக்கப் போனார்.

கதையைப் படித்த நண்பருக்கு எதிர்பார்த்தது போல் தூக்கம் வரவேயில்லை! அவருடைய சிந்தனை விழித்துக் கொண்டது. இரவு முழுதும் கொட்டக் கொட்ட விழித்துக்கொண்டிருந்த அவர் மறுநாட் காலையில் எழுத்தாள அன்பரைப் பார்த்து, நேற்று இரவு நீர் படிக்கக் கொடுத்த சிறுகதையில் ஓர் அற்புதமான நாடகத்துக்கான வித்து இருக்கிறது என்றார் உற்சாகத்துடன். எழுத்தாளர் அவ்வளவு உற்சாகம் காட்டவில்லை. "அப்படி என்ன இருக்கிறது? நாடகமாக்கி மேடை ஏற்றினால் நாலைந்து வாரங்கள்கூடத் தொடர்ந்து நடத்த முடியாது" என்றார் உற்சாகமில்லாமல்.

அந்த விடாப்பிடி நண்பர் அந்தக் கதையை நாடகமாக அமைத்தார். அமெரிக்க நாட்டில் அது அரங்கேற்றமாகி நானூற்றுப்பதினேழு நாட்கள் தொடர்ந்து நடந்தது. அந்த நாடகம் ரெயின் ஸாடி தாம்ஸன் என்ற சிறுகதையை அடிப்படையாகக் கொண்டது. அந்தச் சிறுகதையை எழுதியவர் பிற்காலத்தில் உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளர் சாமர்-செட் மாம்!

ஒரு நபர் பத்து வருட காலம் அநாமதேயமாக உழைத்து உழைத்துச் சருகு ஆனாலும் பத்தே நிமிடங்களில் உலகப் பிரசித்தியாரும் அதிருஷ்டம் அவரிடம் இருந்தாலும் இருக்கலாம் என்ற பொன்மொழி சாமர்செட்மாம் விஷயத்தில் நூற்றுக்கு நூறு உண்மையாகி விட்டது! - பேனு



# சிந்தால் சிங்காரி

இந்தியாவின் தலைவாசலான பம்பாய் நகரத்திலே சர்வ தேசப் புகழ் படைத்த தாஜ்மஹால் ஹோட்டலின் நடன அரங்கிலே ஒப்பற்ற அழகிய நங்கை ஒருத்தி நின்றுகொண்டிருக்கிறாள். அந்த அழகியைச் சூழ்ந்து நிற்கிறது பெருங் கூட்டம். கௌரவமும் கண்ணியமும் மிக்க நகரின் பிரமுகர்கள் அடங்கிய கூட்டம் அது. மகாராஷ்டிர கவர்னரான டாக்டர் செரியனும் ஸ்ரீமதி செரியனும்கூட அந்தக் கூட்டத்தில் இருந்தனர். பூனாவைச் சேர்ந்த மிஸ் ஷாநாஸ் அப்பாஸ் என்ற அந்த அழகியைக் கௌரவிக்கவே அந்தக் கூட்டம். அப்பாஸின் தகப்பனார் பூனாவில் குதிரைகளைப் பழக்குவதில் வல்லவர். பம்பாய் சமூக நல இலாகா மந்திரி ஸ்ரீமதி நிர்மலா ராஜேபோஸ்லே அவர்கள் மிஸ் அப்பாஸின் தலையிலே சிவப்பு வெள்ளை ஆகிய மலர்களால் ஆக்கப்பட்ட அழகிய கிரீடத்தை அணிவித்தபோது மண்டபம் அதிரும்படி கரகோஷம் எழுந்தது. 'சிந்தால் அழகி' என்று அவளைக் கூட்டத்தினருக்கு அறிமுகப்படுத்தினார்கள் பிரபல கோத்ரெஜ் ஸ்தாபனத்தினர்.

சிந்தால் சிங்காரி அப்பாஸ் 'அழகி' என்ற பட்டத்தோடு தன்னுடைய துணை ஒருவருடன் பீ. ஓ. ஏ. ஸி. V. C. - 10 ஜெட் விமானத்தில் லண்டனுக்குச் செல்லுவார். லண்டனில் உள்ள ஓர் உயர்ந்த நாகரிகமிக்க ஹோட்டலில் தங்குவார். அங்கு இவர்களுடைய தேவைக்காக ஒரு ரோல்ஸ் ராய்ஸ் கார் காத்திருக்கும்.

எம். ஜீ. எம். கம்பெனியார் கடந்த ஆண்டு 'மஞ்சள் ரோல்ஸ்' ராய்ஸ்' என்றொரு படத்தைத் திரையிட்டார்கள். அத்துடன் கோத்ரெஜ் கம்பெனியின் 'சிந்தால்' சோப்பு அழகுப் போட்டியையும் அறிவித்தார்கள். போட்டியில் மிஸ் அப்பாஸ் அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடுத்தபடி அழகிகளாக மிஸ் பிரமீளா சந், ஸ்ரீமதி மோஹினி மதுராஜன் இருவரும் அறிவிக்கப்பட்டு அவர்களுக்கு முறையே கோத்ரெஜ் ஸ்டோர்வெல், கோத்ரெஜ் கபர் என்ற இரும்புப் பீரோக்கள் பரிசளிக்கப்பட்டன.

# ஊர் சிரித்த யுரேனியம்

பிரான்சு நாட்டில் மத்தியதரைக் கடலை ஒட்டி அமைந்திருந்த ஒரு சிறு நகரம். கடற்கரையை ஒட்டிய அழகான ஒரு பங்களா. அதில் பாரன் பியோன் டு—ரோர், அவன் மனைவி ஆகிய இருவரும் வசித்து வந்தார்கள். சுகவாசிகள். டு ரோர் பெரிய செல்வந்தன். இருபத்தி ஐந்தே வயதான இளைஞனும்கூட!

டு—ரோர் கவலைப்பட்டதெல்லாம் உலகில் தீவிரமாகப் பரவி வரும் கம்யூனிசத்தைப் பற்றித்தான். பிரெஞ்சு ஜனநாயகமும் ஒரு வேளை இந்தக் கம்யூனிச நோய்க்குப் பலியாகிவிடுமோ என்ற அச்சம். எந்த நேரத்திலும் தன் உடைமைகளைப் பணமாக்கிக் கொண்டு அமெரிக்க நாட்டில் குடியேற டு—ரோர் தம்பதிகள் சித்தமாக இருந்தார்கள். டு—ரோர் தன் எண்ணங்களை இரைந்தே பேசினான். நண்பர்களுடனும் அறிமுகமானவர்களுடனும் பேசும் போதெல்லாம் அவன் தன்னுடைய கம்யூனிச எதிர்ப்புச் சித்தாந்தத்தைத் தொடாமல் இருந்ததில்லை.

1950ம் ஆண்டில் ஒரு நாள். ஒரு பிரெஞ்சுப் போலீஸ் உத்தியோகஸ்தன், எதிர்பாராத விதமாக டு—ரோர் மாளிகைக்கு வந்து அவனைச் சந்தித்தான். பிரான்சின் எல்லைக் காவல் படையைச் சேர்ந்த இன்ஸ்பெக்டர் ரேமாண்ட் ஆல்பெர்ட்டோ என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். முப்பத்தி ஐந்து வயது மதிக்கக் கூடிய அந்த ஆசாமியின் கம்பீரத் தோற்றமும், அவனுக்குப் போலீஸ் உடுப்புக்கள் பொருந்தியிருந்த விதமும், அந்த உடுப்புகளில் தொங்கிய பதக்கங்களும் டு—ரோரை மிகவும் கவர்ந்தன. அவைகளைவிட அவன் சுற்றி வளைக்காமல் நேரடியாக வந்த விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தது அவனிடம் மதிப்பை உயர்த்தியது.

"நான் உங்களுடன் வெகு முக்கியமானதொரு விஷயத்தைப் பற்றி அதிரகசியமான முறையில் ஆலோசிக்க வந்திருக்கிறேன். பிரான்சின் எதிர்காலம், ஏன்? மேற்கு ஐரோப்பிய நாடுகளின் ஜனநாயகத்தின் எதிர்காலமே, உங்களுடைய உதவிக்காகக் காத்திருக்கிறது" என்று ரேமாண்ட் ஆல்பெர்ட்டோ தணிந்த குரலில் ஆரம்பித்தான்.

டு—ரோர் உள்ளத்தில் பெருமிதமும் பூரிப்பும் தோன்றின. ரேமாண்டைத் தன் தனி அறைக்கு அழைத்துக் கொண்டு போனான்.

"இன்றைய ஐரோப்பாவின் நிலை பற்றியும் பிளேக்மாதிரி பரவி வரும் கம்யூனிசம் பற்றியும் நான் உங்களுக்கு விவரிக்க வேண்டிய அவசியமில்லை; உங்களுக்கே தெரியும் இந்தக் கம்யூனிசத்தையும் கம்யூனிஸ்டுகளையும் ஒழிக்கக் கூடிய ஒரே மருந்து அணுகுண்டுதான்! இப்போது நான் உங்களை நம்பி ஒரு பரம ரகசியத்தைச் சொல்லப் போகிறேன். ஸ்பெயின் நாட்டு ஜெனரலிஸ்மோ ஃப்ராங்கோவிடம் அணுகுண்டுகள் தயாரிக்க வேண்டிய சாதனங்களும் விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள். ஆனால் அந்தத் தயாரிப்புக்கு அதிமுக்கியமான யுரேனியம் அங்கு இல்லை. ஜெர்மனியில் அது இருக்கிறது. ஜெர்மனியிலிருந்து யுரேனியத்தை வாங்க நிறையப் பணம் வேண்டும். ஃப்ராங்கோவோ தன் ஸ்பானிஷ் எல்லைக்குள் யுரேனியத்தைக் கொண்டு வந்து சேர்த்த பிறகுதான் அதற்கான பணத்தைக் கொடுக்க முடியும் என்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார். பிரெஞ்சு அரசாங்கம் அதற்கான தொகையை ஒதுக்கக் கலபமாக பார்லிமெண்டிடம் அனுமதி பெறலாம். ஆனால் இந்த விஷயம் கம்யூனிஸ்டுகளுக்குத் தெரிந்தால் அவர்கள், நாம் வாங்கும் யுரேனியத்தை ஸ்பெயின் எல்லைக்குள் போகவிடாமல் இடைவழியில் ஏதாவது கோளாறு செய்து விடுவார்கள். விஷயம் காதும் காதும் வைத்தாற்போல் நடக்க வேண்டும். இந்த மாபெரும் பொறுப்பைப் பிரஞ்சு அரசாங்கம் என் தலையில் போட்டிருக்கிறது. உங்களைப்போன்ற ஜனநாயக அபிமானி ஒருவரால்தான் இந்த நெருக்கடியில் உதவ முடியும். ஒரு கோடி பிராங்குகளை (சுமார் இருபத்தி எட்டாயிரம் டாலர்கள்) நீங்கள் இந்தப் பேரத்துக்கு ரகசியமாகக் கொடுத்து உதவினால், ஃப்ராங்கோவிடம் யுரேனியத்தைச் சேர்த்ததும் சுமார் ஒன்னேகால் கோடி பிராங்குகள் பெறலாம். உங்கள் முதலுக்குக் கணிசமான லாபமுண்டு."

ரேமாண்ட் பேச்சு டு—ரோர் செவிகளில் வெகு இதமாக விழுந்தன. "நான் தயார்" என்று டு—ரோர் சொல்லிவிட்டான். மறுநாள் ரேமாண்ட் இது விஷயமாகத் தன் மேல் அதிகாரியான லெஃப்டினண்ட் கர்னல் ஜீன் பெர்த்தியரிடம் டு—ரோர் பேச வேண்டும் என்பதற்காக அந்தத் தம்பதிகளைப் பாரிசுக்கு அழைத்துச் சென்றான். பாரிசிலுள்ள டுரோர் மாளிகைக்கே ரேமாண்ட், ஜீன்பெர்த்தியரை அழைத்து வந்தான்.

ஜீன் டுரோரைப் பல விதமாகக் கேள்விகள் கேட்டு விட்டு, "இந்த ஏற்பாடு மிகவும் ஆபத்தானது. இதனால் உங்கள் உயிருக்கே கூட ஹானி ஏற்படலாம். தேச சேவை என்பது நல்ல நோக்கம்தான். ஆனால் உங்கள் நலனையும் நீங்கள் கவனித்துக் கொள்ள

வேண்டும். உங்களுக்குப் போதியமன உறுதி இருக்கிறதா?'' என்றான்.

டு–ரோர் கொஞ்சமும் தயங்கவில்லை. கம்யூனிஸத்தை ஒழிக்க நான் எந்தக் கடும் சோதனைக்கும் தயார் என்று தலையை ஆட்டி விட்டான். உடனடியாகத் தன் பாங்கிக் கணக்கிலிருந்து ஒரு கோடிப் பிராங்குகளை வாங்கியும் கொடுத்து விட்டான்.

''நாட்டின் பாதுகாப்பு ஏற்பாடுகளின்படி இந்த விஷயம் பரம ரகசியமாக இருக்க வேண்டும். ஆகவே நீங்கள் இது விஷயம் பற்றி யாரிடமும் மூச்சுக்கூட விடக் கூடாது. என்னிடமும், ரேமாண்டிடமும்தான் இது பற்றி நீங்கள் பேசலாம்'' என்று சொல்லி ஜீன் அவர்களை மீண்டும் கடற்கரை வாசஸ்தலத்துக்கு அனுப்பி வைத்தான்.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் இரவில் ஜீனும் ரேமாண்டும் தங்கள் மிலிட்டரிக் காரில் டு–ரோர் இருப்பிடத்துக்கு வந்தார்கள். ''அபாயம்.... திறக்காதே '' என்ற எச்சரிக்கையுடன் கூடிய ஒரு பெட்டியை டு–ரோரின் மாடி அறைக்குள் நிறுவியவாறு கொண்டு சேர்த்தார்கள். நூற்று முப்பத்தி ஐந்து பவுண்டு எடையுள்ள அந்தப் பெட்டி அரசாங்க முத்திரைகளிடப்பட்டுப் பத்திரமாகக் கட்டப்பட்டிருந்தது. பெர்த்தியர் மேற்கொண்டு நடக்க வேண்டியதை உத்தரவாக எழுதி அரசாங்கக் கவர் ஒன்றில் எழுதிக் கொடுத்து விட்டுப் போனான்.

மறுநாள் டு–ரோர் தம்பதிகள் தங்கள் காடிலாக் காரின் பின், முதல் நாள் வந்து சேர்ந்த யுரேனியம் பெட்டியை எடுத்து வைத்துக் கொண்டு ஸ்பெயின் எல்லையிலுள்ள செயின்ட் ஜீன்–டி–லஸ் என்னும் சிற்றூருக்குக் கிளம்பினார்கள். அங்குள்ள ஹோட்டல் ஒன்றில் அவர்கள் தங்கவேண்டுமென்றும் அங்கு ஸ்பானிஷ் ஏஜண்டுகள் அவர்களைச் சந்தித்துச் சரக்கைப் பெற்றுக் கொள்வார்கள் என்றும் ஏற்பாடு.

நான்கு நாட்களாகியும் எந்த ஸ்பானிஷ் ஏஜண்டும் அவர்களைச் சந்திக்கவில்லை. கடைசி நாளில் பெர்த்தியரும் ரேமாண்டும் ஒரு மிலிட்டரிக் காரில் தொங்கிய முகத்துடன் வந்து சேர்ந்தார்கள். இந்த யுரேனியக் கடத்தல் வியவகாரம் எப்படியோ கம்யூனிஸ்டு உளவாளிகளுக்குத் தெரிந்து விட்டதென்றும், அவர்கள் எல்லைப் பிரதேசத்தில் இந்த ஏற்பாட்டை முறியடிக்கத் தயாராக இருக்கிறார்கள் என்றும் பின்னால் ஒரு சமயத்தில்தான் இந்தக் கடத்தலை வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் டு–ரோரிடம் தெரிவித்தார்கள். ஏமாற்றத்துடன் அவர்கள் தங்கள் இருப்பிடத்துக்குத் திரும்பினார்கள். கதிரியக்கத்தைத் தடுக்க அன்றிரவு, டு–ரோர் மாளிகையின் தோட்ட மூலையில், அந்த யுரேனியப் பெட்டியைப் புதைத்தார்கள்.



இரண்டு மாதங்கள் ஓடி விட்டன. ஒரு நாள் அவசரம் அவசரமாகப் போர்த்தியர் டு—ரோரைப் பாரிசுக்கு வரவழைத்தான். "ஃப்ராங்கோ, மிகவும் அவசரப்படுகிறார். அவருக்கு யுரேனியம் உடனடியாக எவ்வளவு கிடைத்தாலும் வேண்டுமாம். நல்லவேளையாக ஜெர்மானியர்கள் மேற்கொண்டு ஐந்து கோடி பிராங்குகள் பெறுமான யுரேனியத்தை விற்கத் தயாராக இருக்கிறார்கள். அதையும் வாங்கி விட்டால் சேர்த்தாற் போல் ஸ்பெயினில் கொண்டு போய்ச் சேர்த்து விடலாம். முதலீட்டுக்கேற்பக் கணிசமான லாபமும் கிடைக்கும். என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

டு—ரோரிடம் அத்தனை பணம் தயாராக இல்லை. ஆனாலும் சற்று யோசித்துவிட்டு, ''அவ்வளவு பணம் என் பாங்கிக் கணக்கில் இல்லை. ஆனாலும் ஆறரைக் கோடி பிராங்க் பெறுமானமுள்ள ஒரு வைரமாலை என் மனைவியிடம் இருக்கிறது. அதை அடகு வைத்து இப்போது தேவையான பணத்தைப் புரட்டிக் கொள்ளலாம்'' என்றான்.

போர்த்தியர் உணர்ச்சி வசப்பட்டு ஜன நாயகத்தின் சார்பில் நாத் தழுதழுக்க வந்தனம் தெரிவித்தான். சீக்கிரமே வைரமாலை அவன் கைக்குப் போயிற்று. அதைத் தொடர்ந்து மூன்று யுரேனியம் பெட்டிகள் வந்து சேர்ந்தன. அவைகளையும் பத்திரமாகப் புதைத்து வைத்தார்கள்.

மேலும் ஆறு மாதங்கள் ஓடி விட்டன. ஜெனரலிஸ்மோ பிராங்கோவைச் சந்தித்ததாகவும் சீக்கிரமே யுரேனியப் பெட்டிகளைக் கடத்த ஏற்பாடு செய்வதாகவும் போர்த்தியர் தீர்மானமாகச் சொன்னான்.

இந்தச் சமயத்தில் ஒரு நாள் மாலை டு—ரோர் உலாவப் போய் விட்டுத் தனிமையில் திரும்பும்போது தாடியும் மீசையுமாக ஒரு முரட்டு ஆசாமி அவனை நெருங்கி வந்தான். 'ஓர் அதிமுக்கியமான விஷயம் பேச வேண்டும்' என்று ஆரம்பித்த அந்த ஆசாமி தான் ஒரு சோவியத் ஏஜண்ட் என்றும் டு—ரோரிடம் யுரேனியம் இருப்பது தெரியுமென்றும், மூன்று மடங்கு விலை கொடுத்துத் தான் வாங்கிக் கொள்ளத் தயாராக இருப்பதாகவும் ரகசியக் குரலில் தெரிவித்தான். ஆத்திரமடைந்த டு—ரோர் அவனைப் பிடித்துத் தள்ளிவிட்டு வேகமாகத் தன் மாளிகைக்கு வந்து இந்தச் சம்பவத்தைப் பற்றி போர்த்தியருக்கு டெலிபோன் பண்ணினான். போர்த்தியரும் தான் இதுபற்றி உடனடியாக நடவடிக்கை எடுப்பதாக உறுதியளித்தான்.

அன்று நள்ளிரவு போர்த்தியரும் ரேமாண்டும் தங்கள் காரில் வந்து தூங்கிக் கொண்டிருந்த டு—ரோரை எழுப்பித் தங்களுடன் கடற்கரையின் மற்றொரு பகுதிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு ஒரு புதர் அருகே அன்று மாலை டு—ரோரைச் சந்தித்த சோவியத் ஏஜண்ட் ரத்த வெள்ளத்தில் உயிரிழந்து கிடந்தான். ''இந்த ஆசாமிதானா பேரம் பேசியவன்?'' என்று போர்த்தியர் கேட்டான். டு—ரோர் தலையை அசைத்தான். அவனுக்குப் பரம சந்தோஷம். பிரஞ்சுப் போலீஸ் அதிகாரிகள் இத்தனை வேகமாக எதிரிகளை ஒழித்துத் தள்ளுகிறார்களே! டு—ரோர் நிம்மதியாக வீடு திரும்பினான்.

மாதங்கள் ஓடின. வாங்கிய யுரேனியம் அப்படியே தூங்கிக் கொண்டிருந்தது. இடையே போர்த்தியர் மேலும் கொஞ்சம் யுரேனியம் வாங்க மூன்று கோடி பிராங்குகள் கேட்டான். டு—ரோர் தன் மாளிகையை அடமானம் வைத்துப் பணம் வாங்கிக் கொடுத்தான்.

ஒரு வருடத்துக்குப் பிறகு போர்த்தியர் கைகளைப் பிசைந்து கொண்டு டு—ரோரிடம் வந்தான். ''ஜெனரலிஸ்மோ பிராங்கோவைச் சந்தித்தேன். அவர் உடனடியாக அத்தனை யுரேனியத்தையும் வாங்கிக் கொள்ளும் நிலையில் இல்லை. ஸ்பெயினில் பொருளாதார நெருக்கடி. ஆகவே, நாம் இந்தப் பேரத்தை அமெரிக்காவுடன் வைத்துக் கொள்ளலாம். அமெரிக்க செனட்டர்கள் சிலருக்கு நீங்கள் கடிதம் எழுதுங்கள். அவர்கள் தங்கள் அரசாங்கத்தை இதற்குப் போதிய பணம் கொடுக்கும்படி வற்புறுத்துவார்கள்'' என்று சொன்னான். வேறு வழியில்லாமல் டு—ரோர் பல கடிதங்களை எழுதிப் போர்த்தியரிடமே கொடுத்தான்.

நாட்கள் ஆக ஆக டு—ரோரின் மனைவி கணவனை நச்சரிக்க ஆரம்பித்தாள். அவளுடைய வைரமாலை அடமானத்தில் அல்லவா இருக்கிறது? அமெரிக்காவிலிருந்தும்

அடுத்த இதழில்

# கொரில்லாப் போர்

தமிழ்வாணன் — விசேஷக் கட்டுரை —



ஒன்றும் பதில் வரவில்லை என்று பெர்த்தியர் சொன்னான். மனைவியின் நச்சரிப்புத் தாங்காமல் டு—ரோர் பெர்த்தியரைத் துளைக்க ஆரம்பித்தான். அதற்கும் ஒரு வழி சொன்னான் பெர்த்தியர். அந்த வைரமாலையை வாங்கிக் கொண்டு ஐந்து கோடி பிராங்குகள் கொடுத்திருக்கும் ஆசாமி, இப்போது கையில் ஒன்றரைக்கோடி பிராங்குகளையும் மீதிக்கு ஒரு பிராமிசரி நோட்டும் கொடுத்தால் வைர மாலையைக் கொடுக்கச் சம்மதிப்பதாகத் தெரிவித்தான். அதற்குள் அநேகமாக அமோக லாபத்துடன் அமெரிக்காவுடன் யுரேனிய பேரத்தை முடித்து விடலாம் என்று உற்சாகமூட்டினான்.

டு—ரோர், உடனே தன் கடிலாக் கார், மற்றும் சில சில்லறைச் சொத்துக்களையும் விற்று ஒன்றரைக் கோடி பிராங்குகளைப் பெர்த்தியரிடம் கொடுத்து அனுப்பினான். ஆனால் பெர்த்தியர் பாரிசுக்குப் போகவேயில்லை. அவசர நிமித்தமாக அரசாங்க உத்தரவு பெற்றுத் தான் வாஷிங்டன் புறப்படுவதாகவும் திரும்பியவுடன் வைர மாலை விஷயத்தைக் கவனிக்கலாம் என்றும் பாதி வழியிலிருந்து டெலிபோன் செய்தான்.

பெர்த்தியரின் உறவு ஏற்பட்டுப் பதினெட்டு மாதங்களுக்குப் பிறகுதான் டு—ரோருக்கு முதல் தடவையாக அவன் மீது அவநம்பிக்கை தோன்ற ஆரம்பித்தது. இன்ஸ்பெக்டர் ரேமாண்டைச் சில மாதங்களாக அவன் பார்க்கவேயில்லை. என்ன செய்யலாம் என்று விழித்துக் கொண்டிருக்கும்போதுதான் பிரான்சின் ரகசியப் போலீஸ் இலாகாத் தலைவர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டு ஜெனரல் காம்பஜூரியர் டு—ரோரைச் சந்தித்தார். பட்டானத்து மீசையுடனும் பளபளத்த பதக்கங்களுடனும் காம்பஜூரியர் கம்பீரமாகக் காட்சியளித்தார்.

"பிரெஞ்சு அரசாங்கத்தின் சார்பில் உங்களுடைய தேசாபிமானத்தையும் கடமை உணர்ச்சியையும் பாராட்ட அதன் பிரதிநிதியாக வந்திருக்கிறேன். அரசாங்கத்துக்கு நீங்கள் அளித்திருக்கும் ஒத்துழைப்பைப் பாராட்டிக் கௌரவிக்கும் வகையில் உங்களுக்கு இவ்வாண்டு சர்க்கார் விருது வழங்கப்படும்" என்று சொல்லிவிட்டு காம்பஜூரியர் கிளம்பினார்.

டுரோர் உள்ளத்தில் எழுந்த சந்தேகம் எல்லாம் ஓடி விட்டது. ஜனவரி மாதம் முதல் தேதிக் காலையை ஆவலுடன் டு—ரோரும் அவன் மனைவியும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அன்று காலைப் பத்திரிகைகளில்தான் அரசாங்க விருதுகள் பெற்றவர்களின் பெயர்கள் வெளியாகும்.

1952ம் ஆண்டு ஜனவரி முதல் தேதியன்று அதிகாலையிலேயே டு—ரோர் எழுந்து பத்திரிகைக்காகக் காத்திருந்தான். பத்திரிகையும் வந்தது. ஆனால் அதில் டு—ரோர் பெயர் தான் இல்லை.

இத்தனை நாட்கள் அடக்கி வைக்கப்பட்டிருந்த ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு கிளம்பியது, டெலிபோனில் தன்னுடைய வக்கீலுடன் தொடர்பு கொண்டு எல்லாவற்றையும் சொன்னான். அந்த வக்கீல் உடனடியாக பிரெஞ்சு அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டார். அரசாங்கம் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொண்டது.

டு—ரோர் மாளிகையில் புதைக்கப்பட்டிருந்த யுரேனியம் பெட்டிகளை சர்வஜாக்கிரதையாக எடுத்துப் பரிசோதனைக்கூடத்துக்கு அனுப்பினார்கள். அங்கு, அது சுத்தமான கடற்கரை மணல் என்று கண்டுபிடிக்கப்பட்டது. ரேமாண்ட், பெர்த்தியர், காம்பஜூரியர் புதாபடியில் ரத்தவெள்ளத்தில் மிதந்த சோவியத் ஏஜண்ட் எல்லோரையுமே பிரெஞ்சு போலீஸ் பிடித்து விட்டது.

ரேமாண்ட் ஒரு கசாப்புக் கடைக்காரன். பெர்த்தியர் ஒரு வழிப்பறிக்கொள்ளைக்காரன். காம்பஜூரியர் ஒரு சில்லறைத் திருட்டுப் பேர்வழி. சோவியத் ஏஜண்ட் ஒரு மாஜி நாடகக்காரன். எல்லோருக்குமே அசல் பெயர்கள் வேறு உண்டு.

டு—ரோர் இப்படி ஏமாற்றப்பட்டது முழு விவரங்களுடன் வெளியான போது பிரெஞ்சு மக்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். 1953 ஜூன் 5ம் தேதியன்று நடந்த கோர்ட் விசாரணை, ஜூரிகள், நீதிபதி எல்லோரையுமே சிரிப்பில் ஆழ்த்தியது. அவர்கள் நால்வரும் சிறைத் தண்டனையடைந்தார்கள்.

பன்னிரண்டு கோடி பிராங்குகள்—கிட்டத்தட்ட பதினேழு லட்சம் ரூபாய்களை இந்த மோசடியில் இழந்த டுரோர் தம்பதிகள், இந்த நிகழ்ச்சியை யெல்லாம் மறக்க அமெரிக்காவில் குடியேறினர்.

"நான் சொன்னதை யெல்லாம் டு—ரோர் நம்பினார். அதனால்தான் கொஞ்சம்கூடச் சிரிக்காமல் இந்த யுரேனிய வலையை விரிக்க முடிந்தது" என்றான் ரேமாண்ட் கோர்ட்டில்!

—திருவேரகத்தான்

# புத்தக உலகில்...

★ பொருளாதாரம்

★ கலைக் களஞ்சியம்

★ விஞ்ஞானம்

எத்தனையோ விதமான நோய்களில் பார்கின்ஸன் நோய் என்ற நரம்புத் தளர்ச்சி வியாதியும் ஒன்று. உடலில் சதா ஒரு நடுக்கம் இருந்து கொண்டேயிருக்கும். இந்நோய் குறித்துப் பல்லாண்டுகளுக்கு முன் பார்கின்ஸன் என்ற அறிஞர் சிறந்த ஆராய்ச்சிகள் செய்ததால் அவர் பெயரையே அந்த நோய்க்கு வைத்து விட்டார்கள்.

ஆனால் சமீப காலமாக மற்றொரு பார்கின்ஸனின் பெயர் பிரபலமாக அடிபடுகிறது. இவரும் ஒரு நோய் குறித்துத்தான் நிறைய ஆராய்ச்சிகள் செய்து வருகிறார். அது பொருளாதார நோய். அது குறித்துத் தாம் கண்டுபிடித்துள்ள உண்மைகளையெல்லாம் ருசிகரமாக எழுதும் ஆற்றல் படைத்தவர் இந்த பார்கின்ஸன்.

ஸி. நார்த்காட் பார்கின்ஸன், சர்க்கார் வரிகள், வருமான வரி இவ்விரண்டையும் பற்றி (The law and the profits) என்ற புத்தகத்தில் எழுதி அமர்க்களப்படுத்தியிருக்கிறார்.

அவர் தமது முன்னுரையிலேயே பின்வரும் முத்துக்களை உதிர்த்திருக்கிறார்:

★ வரிகள் போடுவதற்கு ஒரு வரம்பு இருக்கிறது. அந்த வரம்பை மீறினால் தீமைகள் பெருகும். குறைந்த அளவு வரி வசூலிப்பதன் பயனும் அரசாங்க ஊழியர்களின் திறமை அதிகரிக்குமேயன்றிப் பாதிக்கப் பட்டுவிடாது.

★ சர்க்காரிடம் பணம் அளவுக்கு மீறி இருக்கும்போது சிக்கனம் ஏற்படுவது சிந்தனை செய்வதில் மட்டுமேதான். இதன் காரணமாய்ப் பணம் பலவிதங்களில் விரயமாக்கப்படுகிறது.

ஒரு தேசத்தின் பிரஜை வருமான வரி கொடுக்காமல் ஏமாற்ற முயல்வதற்கான காரணங்களைத் தர்க்க முறையில் எடுத்துக் கூறுகிறார்:

ஒருவர் சிறந்த தேசாபிமானி. தேசத்தைக் காப்பாற்றுவதற்காக யுத்த முனைக்குச் சென்று போராடியிருக்கிறார். நிறைய தான தருமங்கள் செய்திருக்கிறார். ஒரு பொய்கூடச் சொல்லமாட்டார். தெய்வ பக்தியுள்ளவர். எதிலும் நேர்மையாக நடந்து கொள்பவர். பரம்பரைக் கனவான்.

ஆனாலும் அவர் வருமான வரி இலாகாவை ஏமாற்றுவதற்கான முயற்சிகள் செய்ய ஒரு சிறிதும் தயங்குவதில்லை. அது ஏனோ?

ஏனென்றால் சர்க்கார் விதித்திருக்கும் வரி, வரிகளல்ல. தாம் நிறையச் சம்பாதிக்கும் குற்றத்துக்காக விதிக்கப்பட்ட தண்டனை என்று அவர் கருதுகிறார்.

அந்த வரிகள் யாரால் விதிக்கப்பட்டன? அரசாங்கத்தாரால். அந்த அரசாங்கத்தை அதிகாரத்தில் வைத்திருப்பது யார்? சட்டசபைப் பிரதிநிதிகள். அந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தது யார்? பணம் சம்பாதிக்கும் சாமர்த்தியமில்லாத அதிகமான கல்வி அறிவு இல்லாத பெரும்பான்மை வாக்காளர்கள். ஆகவே, வருமான வரி கொடுப்பவர், தாம் கையில் காசில்லாத ஒரு நடுத் தெரு நாராயணனுடைய வோட்டின் அதிகாரத்தின் மீது வரி கொடுத்தாக வேண்டியிருக்கிறது என்று கருதுகிறார்.

வருமான வரி, ஒருவரது வருமானத்தில் நூற்றுக்குப் பத்துச் சத விகிதமோ, இருபது சத விகிதமோ இருந்தால் யாருக்கும் அதைப் பற்றிப் பெரிதாக எண்ணிப் பார்க்கத் தோன்றாது. 40, 50, 60, 70 சதவிகிதம் என்றால் வரி கொடுக்காமல் இருக்கவோ அல்லது குறைந்த வரி கொடுக்கவோ முயற்சி செய்யத் தோன்றுகிறது.

ஒருவர் 50 சதவிகிதம் வரி கொடுக்க நேருமென்று வைத்துக் கொள்ளுங்கள். குறைந்த விகிதமே கொடுக்கும் முறையில் கணக்குகள் தயாரிப்பதற்காக அக்கௌண்டண்டுகள் உதவியை நாடுகிறார். வருமான வரி அதிகாரியின் முன் நீதி ஸ்தலத்திலும் வழக்காடுவதற்காக வருமான வரி நிபுணரான வக்கீலை அமர்த்துகிறார். இதற்காகப் பல்லாயிரக் கணக்கில் பணம் செலவழியலாம். சிலசமயம் இலஞ்சம் வாங்கும் அதிகாரிகளுக்காகவும் பணம் செலவாகிறது. முடிவில் அவர் முயற்சிகளின் பயனும் நூற்றுக்கு 50 சத விகிதம் வட்டி கொடுப்பதற்குப் பதிலாக 20 சதவிகிதம் கொடுக்கும்படி உத்தரவாகிறது.

இந்த வரி கொடாப் போராட்டத்துக்காக அவர் தமது இலாபத்தில் 15 சத விகிதம் செலவு செய்யும்படி நேரிடலாம். அப்படிச் செலவழித்தால் கூட அவருக்கு 15 சத விகிதம் லாபம் அதிகப்படியாக மீதமாகிறது.

எந்த ஒரு பிரஜையும் கொடுக்க வேண்டிய வரி சட்டப்படி அவரது இலாபத்தில் 25 சத விகிதத்துக்கு மேல் இல்லையென்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் வரி கொடாமலிருக்க 15 சத விகிதம் செலவழித்துக்கொண்டிருக்க மாட்டார். அதற்காக நாலு பேரைக் கெஞ்சிக்கொண்டும் அலைந்துகொண்டும் இருக்க மாட்டார். பேசாமல் 25 சதவிகித வரியைக் கொடுத்து விடுவார். தமது அரசாங்கத்துக்குக் கொடுக்கிறோமென்று மகிழ்ச்சியுடன் கொடுப்பார்.

இப்போதோ அவர் தாம் கொடுக்கும் வரி, கன்னு பின்னு என்று செலவழிக்கப்படுகிறது. விரயமாக்கப்படுகிறது என்று வேறு கருதுகிறார். அவசியமானவை, பயனுள்ளவை என்ற காரியங்களுக்குச் செலவிடுவதற்காக வரிகள் கொடுப்பது ஒரு விதம், அவசியமற்ற, தீமை விளைவிக்கும், அல்லது பரிகசிக்கத் தக்க காரியங்களுக்காகக் கொடுப்பது வேறு விதம். இப்படியாக வரி கொடாமல் தப்புவிக்கும்



முயற்சிகள், அரசாங்கத்தின் வீண் செலவு முயற்சிகள் பயனும் தோன்றியவையாகும்.

இப்படிப் பொருள்படக் கூறியுள்ள பார்க் கின்ஸனது அபிப்பிராயங்கள் இந்திய அரசாங்கத்தின் வரி விதிக் கொள்கை, வீண் செலவு இவற்றைப் படம் பிடித்துக் காட்டு கின்றன என்று சொல்லலாம்.

ஃ ஃ ஃ

**வருங்காலச்** செல்வங்களின் அறிவு வளர்ச்சிக்காக அயல்நாடுகளில் மிக மிக உயர்ந்த முறையில் அழகழகான வண்ணப் புத்தகங்கள் வெளியிட்டிருப்பதைக் காணும் போது நம் தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்கு இம்மாதிரியான அறிவு வளர்க்கும் புத்த கங்கள் எப்போது வருமோ என்று நாம் ஏங்கியது உண்டு. அத்தகைய குறையைப் போக்கத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் முன்வந்திருப்பதைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறோம். 'என்஺ைக்ளோ பீடியா' என்ற கலைக் களஞ்சியத்தைத் தமிழில் சிறுவர்களுக்காகக் கொண்டு வரத் திட்டமிட்டு வேலையும் தொடங்கி விட் டார்கள். கலைக் களஞ்சியம் இந்திய மொழி களில் தமிழில்தான் முதன் முதலில் வெளி வந்தது. வெற்றிகரமாக அதைக் கொண்டு வந்த தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரே சிறுவர் கலைக் களஞ்சியத்தையும் வண்ணங்கள் நிறைந்த புத்தகங்களாகக் கொண்டு வரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இந்திய மொழிகளில் இதுவும் முதல் முயற்சி என்பதை எண்ணித் தமிழர் களாகிய நாம் பெருமைப்படலாம். ஏழு வால்யூம்களாக இந்தக் குட்டிக் கலைக் களஞ்சியம் வெளிவரும். இதை முடிக்க ஏழு ஆண்டுகள் ஆகுமாம். ஒவ்வொரு வால்யூமும் 144 பக்கங்கள் கொண்டதாக இருக்கும். ஒரு வால்யூமின் விலை ரூ. 10. புத்தகத்தின் பெரும் பகுதி பல வண்ணத்தி லும் நல்ல கெட்டியான காகிதத்திலும் அச் சாகப் போவதால் விலை அதிகமென்று சொல்வதற்கில்லை. கலைக் களஞ்சியத்தின் தொகுப்பாசிரியர். பெரியசாமி தூரன், குழந்தைகளுக்கான இந்தத் தொகுப்பில் விஞ் ஞான விஷயங்களுக்கு முதலும் முக்கியமுமான இடமளிக்க இருப்பதாகக் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

**சென்னை அமெரிக்க வாசக சாலையில் உள்ள நல்ல புத்தகங்களும் எதை முன்னால்** படிக்கிறது, எதைப் பின்னால் படிக்கிறது என்று தெரியாமல் திண்டாடிப் போகிறது. இந்த நிலைமையில் மூன்று நான்கு மாதங்களுக்கொரு முறை புத்த கக் கண்காட்சி ஒன்று வேறு வைத்து வாசகர்களைத் திணற அடித்து விடுகிறார்கள். இந்தக் குற்றத்தை இழைப்பவர்கள், லைப்ரரி டைரக்டர் எவலின் மக்கீபும், பிரதம லைப்ரரியன் திருவேங்கடமும்.

சமீபத்தில் 'காகித அட்டையுள்ள' விஞ் ஞானப் புத்தகங்களின் கண்காட்சி பொன்று அங்கே நடைபெற்றது. அதில் கணிதம், பௌதிகம், ரசாயனம், மின்சாரம், வைத் தியம் முதலியவற்றைப் பற்றிய புத்தகங்கள் இருந்தன. இந்த விஞ்ஞானப் புத்தகங்கள் பாட புத்தக முறையில் பயப்படும்படியாக அமைந்திராமல், கதைப் புத்தகங்களைப்போல் அமைந்திருப்பது விசேஷம்.

எதைப் புரட்டிப் பார்த்தாலும் விஷயம் எளிதில் புரிகிறது போலிருந்தது. விஞ்ஞானம் என்று சிறிதும் தோன்றாமல், நாவல்களைப் போல் படிக்க வேண்டுமென்ற உற் சாகமும் தோன்றியது. ஒரு பெரிய புத்த கத்தை எடுத்துப் புரட்டிக் கொண்டே போனேன். ஒரு பக்கத்திலிருந்த விஷயம் என் கண்களில் பட்டது:

"அவர் புட்னியில் நோயுற்றுப் படுத் திருந்த போது அவரைப் பார்க்கச் சென்றிருந் தேன். அவரைக் காண நான் ஒரு வண்டி யில் போனேன். அந்த வண்டியின் எண் 1729. அதென்னமோ எனக்கு, அந்த எண் மந்தகரமானதாகத் தோன்றிற்று. தவிர 'அந்த எண்ணால் ஏதாவது தீமை ஏற்படுமா என்றுகூட எண்ணுகிறேன்' என்றேன். உடனே அவர், "இல்லை. அது மிகவும் ருசிகரமான ஓர் எண். இரண்டு கியூப்களின் மொத்த எண்ணை இரண்டு வெவ்வேறு விதமான முறையில் எடுத்துக் காண்பிக்கக் கூடிய சிறு எண்" என்று கூறினார்.

இப்படிக் கூறியது நமது கணித மேதை ராமானுஜம் அவர்கள்தான். அவரது வாழ்க் கையைப் பற்றிய கட்டுரையில் இந்தச் சம்ப வத்தைப் பற்றி எழுதப்பட்டிருந்தது. புத்த கம், (The world of Mathematics) என்ற தலைப் புள்ளது. ஜேம்ஸ் சர் நியூமன் தொகுத்தது. அந்தப் புத்தகம் நான்கு வால்யூம்கள் கொண் டது. சுமார் 2600 பக்கங்கள் உள்ளது.

ஆசை வெட்கமறியாதல்லவா? அந்தப் புத்தகங்களை எடுத்துக் கொண்டு வந்து புரட்டிப் பார்த்தேன். கிட்டத்தட்ட 150 நிபுணர்கள் கணித சாஸ்திரத்தைப் பற்றிய கதைகள், கட்டுரைகள், வேடிக்கைக் கதைகள் எழுதியிருக்கிறார்கள். பழைய காலத்திய பல தேசத்திய கணக்குப் புதிர்களும் இடம் பெற் றிருக்கின்றன. இப்படியே நிலைமை போய்க் கொண்டிருந்தால் இன்னும் சில வருஷங்க ளில் வீட்டுக்கு வீடு வாசற்படி என்கிற பழ மொழி மாறி வீட்டுக்கு வீடு விஞ்ஞானம் என்பதே பழமொழியாகிவிடலாம். —என். ஆர்

# சுவையான சர்ச்சைகள்

"நான் சாப்பிடுகிற ஹோட்டலில் இன்றைக்கு என்ன சாம்பார் என்று கேட்கிறீர்களா? இன்றைக்கென்ன? என்றைக்குமே வேதாள சாம்பார்தான். அதாவது இந்த சீசன் முழுதும்! புரியவில்லையா? நீங்க விக்கிரமாதித்தன் கதை படித்ததில்லையோ? அதிலே தானே அடிக்கடி அந்த வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொள்கிறது? நம்ப ஹோட்டல்காரர் அப்படியே முருங்கை மரத்தைத் தூக்கிச் சாம்பாரிலே போட்டு விடுவதாலே தான் வேதாள சாம்பார் என்கிறேன். அந்தக் கதையிலே வர வேதாளம் அடிக்கடி மரத்திலே ஏறிக்கொள்கிற மாதிரி இந்தச் சாப்பாட்டுக் கடையிலே அடிக்கடி முருங்கை மரம் சாம்பாருக்குள்ளே இறங்கி விடும். ஹோட்டல்காரர் பாவம்! என்ன பண்ணுவார்? மார்க்கெட்டிலே அதுதானே மலிவாகக் கிடைக்கிறது! மலிவாக எந்தக் குப்பை விற்றாலும் வாங்குவதுதானே அவர் லட்சியம்!

"சௌ சௌ இருக்கே.... அதுதான் அந்தப் பங்களூர் கத்தரிக்காய்! அதைப் பார்த்துச் சில நாட்களிலே இந்த முருங்கைக் காயே வெட்கப்பட்டுச் சாம்பாருக்கு அடியிலே ஒளிந்து கொண்டுவிடும். சௌ சௌ பொரியல், சௌ சௌ கூட்டு, சௌ சௌ பச்சடி, சௌசௌ குழம்பு இத்தியாதி! அதைக் கொஞ்சம் பொடியாக நறுக்கிச் சாதத்தோடுதான் கலக்கவில்லை. மற்றதெல்லாம் பண்ணிவிடுவார்கள். சாப்பிடுபவர்களுக்கு நாக்கு என்று ஒன்று இருக்கிறது. ருசி என்ற உணர்ச்சி இருக்கிறது என்ற கவலையெல்லாம் ஹோட்டல்காரர்களுக்கு இல்லை! அவர்கள் கவலையெல்லாம் எதைச் சாக்காகக் கொண்டு பண்டங்களின் விலையையும் சாப்பாட்டு டிக்கட்டுகளின் ரேட்டையும் உயர்த்தலாம் என்பதுதான்!

'மதுரையிலே அடிச்சானும் மானாமதுரையிலே மீசை துடித்ததாம்!' என்று வசனம் சொல்வார்கள். அதுமாதிரி பார்லிமெண்டிலே விலைவாசி புள்ளிவிவரத்தைப் பற்றியோ, பஞ்சாப் மாகாணத்திலே கோதுமைப் பஞ்சத்தைப் பற்றியோ யாராவது கேள்வி கேட்டார்கள் என்று ரேடியோவில் செய்தி வந்தால் போதும். மறுநாள் ஹோட்டல் விலைகள் குறிக்கப்பட்ட பலகையில் அடித்தல் திருத்தலுடன் அதிக நயா பைசாக்கள் இடம் பெற்றிருக்கும். சாப்பாடு டிக்கெட் மாதாந்திர விகிதத்திலே இரண்டு ரூபாய் கூடின அறிவிப்பு இருக்கும்.

இப்படித் திடீர் திடீரென்று விலையை ஏற்றுகிறார்களே! ஐயா! தரத்தையும் கூடச் சேர்த்து இழுத்து ஏற்ற வேண்டாம்? பழைய 'வெரைட்டி'யாவது வைத்திருக்கிறார்களா? அதுதான் கிடையாது! அந்தத் தரத்தோடு தலையில் காலை வைத்து அழுத்தி விலையை மாத்திரம் உயர்த்துகிறார்கள். தரம் இன்னும் கொஞ்சம் கீழே போகிறது. விலை மேலே போகிறது. பதினாறு பைசா காப்பி நன்றாகவே இருந்தது. அது பதினெட்டுப் பைசாவாக உயர்ந்து இப்போது இருபது பைசாவிலே வந்து நிற்கிறது. தரம் வெறும் ஆறு பைசா வைக்கூட எட்டாது. கேட்டால் பால் பஞ்சம் என்ற பதில். இட்டிலியை ஏழு பைசா விலே வைத்திருக்கிறார்களே என்று மனம் பூரித்துவிட வேண்டாம். பழைய இட்டிலியை அதாவது இட்டிலியின் அளவை மூன்றாக உடைத்து இப்போது அதே விலைக்கு ஒரு பகுதியை முழுதாகக் கொடுக்கிறார்கள்! என்ன தாராளம்!

பிரம்மபுத்திரா நதியிலே எப்போதாவது ஆண்டுக்கு ஒருதடவைதான் வெள்ளப் பெருக்கு வரும். நம்ப ஹோட்டல் மோர் நினைத்தபோதெல்லாம் ஒரே வெள்ளமாக ஓட ஆரம்பிக்கும். இப்போதெல்லாம் சில ஹோட்டல்களில் 'கப்பு'களில் கடைசியில் மோர் கொடுப்பதைக்கூட நிறுத்திவிடுகிறார்கள்.

"ஹோட்டல்களில் பரிமாறுபவர்கள் இருக்கிறார்களே! அவர்களைப் பார்க்கும்போது மகாபாரதத்தில் தர்மபுத்திரர் தம் சகோதரர்களைப் பார்த்துச் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது. 'நம்மையும் கௌரவர்களையும் பொறுத்தவரை நாம் ஐந்துபேர்; அவர்கள் நூறு பேர். ஆனால் வெளி விரோதி வந்துவிட்டால் நாம் நூற்று ஐந்துபேர்' என்று சொன்னாராம். சர்வர்களுக்கும் ஹோட்டல் முதலாளிகளுக்கும் இடையே ஆயிரம் சண்டைகள் இருந்தாலும் சாப்பிட வருபவர்கள் அவர்களுடைய பொது விரோதிகள். நல்ல பதார்த்தம் ஒன்று தயாரான நாட்களில் ஒன்று அவர்கள் செவிடர்களாக மாறிவிடுகிறார்கள்! அல்லது அபிநய நிபுணர்களாக மாறிப் பாத்திரத்திலிருந்து பண்டம் வெளியே வராத வகையில் கையை ஆட்டி வெறும் கரண்டியைக் கவிழ்த்துவிட்டுப் போவார்கள்!

"ஹோட்டல்களின் சுகாதாரச் சூழ்நிலையைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். வாய்விட்டுச் சொல்லவே பிடிக்கவில்லை!

"ஹூம்! இந்தக் கஷ்டத்தைத் தொடர்ந்து அனுபவிக்கிறதைவிட என்னைப் போன்ற பிரம்மசாரிகள் துணிந்து இல்லறத்தார்களாகிவிடலாம் என்று நினைப்பதில் ஆச்சரியமில்லை!"

* * *

"நாங்கள் தர்ம சத்திரம் நடத்துகிறவர்கள் இல்லை. முதல் போட்டுத் தொழில் நடத்துகிறோம். முதலுக்குத் தகுந்த உழைப்பையும் அதோடு பிணைக்கிறோம். லாபம் இல்லை

வென்றுக்கூட முதலுக்கு மோசம் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் எங்களுக்கு உண்டு. அந்த ஜாக்கிரதைக்குப் பேராசை என்கிற பெயரைச் சுலபமாகச் சூட்டி விடுகிறீர்கள்! அது ரொம்பத் தப்பு!

உதாரணத்துக்கு 1952ல் இருந்த விலைவாசிக்கும் இப்போது 1965ல் இருக்கும் விலைவாசிக்கும் உள்ள வித்தியாசங்களை எங்க தொழிலுக்கு முக்கியமான சில அயிட்டங்களைப் பொறுத்த வரை பார்ப்போம்: ரேடியோ ஆயில் அப்போது பதினைந்து ரூபாய்! இப்போது ஐம்பத்தி ஐந்தை எட்டியிருக்கிறது. விறகு அப்போ டன் முப்பத்தி ஐந்து. இப்போது எண்பத்தி ஐந்து. பருப்பு ரகங்கள் மூன்று மடங்கு ஏறிவிட்டன! இப்படிப்பட்ட நேரத்திலே எங்களாலே விலையை எப்படி உயர்த்தாமல் இருக்க முடியும்? புளி விலையோ சொல்லவே வேண்டாம்!

இந்தக் குடும்பக் கார்டு முறை ரேஷன் வருவதற்கு முன்னாலே 'ஓப்பன் மார்க்கெட்'டிலே கிடைத்த கடைசித் தர மட்டமான அரிசி ரகங்களெல்லாம் இப்போ 'டாப்' ஜோராக விளங்குகின்றன. இந்த டாப் ரகத்தைத்தான் நாங்க வாங்க வேண்டியிருக்கிறது. விலை அதிகம். ஆனால் சரக்கு மட்டம். மூலப் பொருளைப் பொறுத்துத்தானே சரக்கின் தரமும் அமையும்?

"தங்கக் கட்டுப்பாடு வந்தாலும் வந்தது. பெரும் பணப் புள்ளிகளெல்லாம் தங்கத்திலே முடக்கி வைத்திருந்த பணத்தையெல்லாம் துவரம் பருப்பிலேயும் கடலைப் பருப்பிலேயும் திணித்தார்கள். இப்போ மார்க்கெட் அவர்கள் சொன்னபடி ஆடுகிறது. சர்க்காராலே ஒன்றும் செய்ய முடியலே! கடலைப் பருப்பு, கடலை மா, ஹோட்டல் தயாரிப்புக்களுக்கு எவ்வளவு முக்கியம் என்பதைச் சொல்லவேண்டியதில்லை! கடலைப்பருப்பு அஞ்ஞாதவாசம் ஆகிவிட்டால் உடைத்த கடலையின் விலை ஆகாசத்தை எட்டுகிறது. இப்போ அதற்கும் கொஞ்சம் மேலேயே தேங்காய் விலை ஏறி உட்கார்ந்திருக்கிறது. இந்த இரண்டையும் எப்படியோ வாங்கிச் சட்னி தயாரித்துப் போடத்தான் போடுகிறோம். ஓர் இட்டிலிக்குப் போடுகிற சட்னி அடக்கமே ஏழு பைசா ஆகிவிடுகிறது! இந்த நிலையிலே இட்டிலி சின்னதாகப் போச்சுன்னு ஒரு குறை!

## ஹோட்டல்காரர்கள் திடீர் திடீரென்று பண்டங்களின் விலைகளை உயர்த்துவது சரியா?

"குடும்பத்திலே சுடுபட்டு மாதா மாதம் கடைச் சாமான் வாங்கிப் போட்டு விலைவாசி ஏற்றங்களைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறவர்கள் சில சமயங்களில் எங்கள் வாடிக்கைக்காரர்களாக வரும்போது திருப்தியுடனேயே சாப்பிட்டுவிட்டுப் போகிறார்கள். அவர்களுக்குத் தெரியும் இன்றைய நடப்பு நிலவரம்! மற்றவர்கள் மார்க்கெட் நிலவரம் தெரியாதவர்கள். குறை சொல்லத் தெரிந்தவர்கள்.

"பணத்தைக் கட்டிக் கொண்டு கடைக்குப் புறப்படும்போது இன்றைக்கு என்ன சாமான் கிடைக்கும் என்று சொல்ல முடியாத ஒருநிலை. கிடைத்தாலும் நேற்று விலைக்கும் இன்றைய விலைக்கும் மூட்டைக்கு ஐந்து ரூபாய் அதிகமாக இருக்கும். ஏன் என்று கேட்கவோ ஆராய்ச்சி செய்யவோ அவகாசம் ஏது? அப்புறம் அந்தச் சாமானும் கிடைக்காதே! மலிவுச் சாமான் என்று சொல்லும்படியாக இப்போ மார்க்கெட்டிலே ஒன்றும் கிடையாது. எல்லாம் யானை விலை, குதிரை விலை!

இப்போதெல்லாம் தனியார் துறையிலும் சர்க்காரிலும் எத்தனையோ தொழிற்சாலைகளை ஆரம்பித்திருக்கிறார்கள். அங்கு போகிறவர்களுக்கு, விசேஷத் திறமை இல்லாதவர்களுக்குக்கூட நிறையச் சம்பளம் கிடைக்கிறது. அங்கெல்லாம் போகமுடியாத கடைசிப்பட்சத் திறமை உள்ளவர்கள்தான் இந்த ஹோட்டல் துறையில் தொழிலாளர்களாக வருகிறார்கள். அவர்களை வைத்து வேலை வாங்குவது மகா சிரமம்! அது எங்களுக்குத்தான் தெரியும்!

"ஐந்தாறு லட்ச ரூபாய் முதல் போட்டு அட்டாச்டு பாத் ரூம், டிட்டாச்டு பால்கனி என்று கட்டிப் போட்டு ஹோட்டல் நடத்தத் துணிகிறவர்கள் வேண்டுமானால் சமாளிக்கலாமே தவிர, சாதாரண நடுத்தரக் காப்பி சாப்பாடு ஹோட்ட



"அநியாயம்!" என்பவர் : மயிலாப்பூர் திரு கே. சம்பத், ஹோட்டல் சாப்பாட்டுக்காரர்.

○●○

"இல்லை" என்றுமறுக்கிறவர் : திரு பி. வி. கிருஷ்ணன், ஸ்ரீராமாஸ் கஃபே, புரசவாக்கம்.



டல்களை இந்தக் காலத்தில் புதிதாக யாரும் ஆரம்பித்து நடத்திவிட முடியாது. ஏதோ போட வேண்டும் என்ற அலட்சியத்தில் நாங்கள் தொழில் நடத்தவில்லை. இதையாவது போட முடிகிறதே என்ற திருப்தியில் தொழிலை ஓட்டுகிறோம்!

பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

**ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்**

ஆயுர்வேதாஸ்ரமம் ப்ரைவேட் லிட்., மதராஸ்-17

# சிறந்த தரத்துடன் சிக்கனமும்
## குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது



எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டாக்கில் உங்களுக்கு பேர் பெற்ற கால்கேட்டின் சிறிய தரம் கிட்டுகிறது.



எத்தனை நறுமண முடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்- வெளியே செல்லுமுன்- தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.



எத்தனை நேர்த்தியானது! எத்தனை மிருதுவானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டாக்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது




# கால்கேட்

## ஆல்-பர்ப்பஸ் டால்க்

அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது!

# "உஷாவிடமா அனுதாபம்?"

தொழிலாளர் யூனியனில் நடக்கும் பேச்சு வார்த்தைகளின் விளைவு என்ன வாக இருக்கும் என்பது பற்றிக் காரி யாலய அறையில் உட்கார்ந்து குனிந்து கொண்டிருந்த தங்கப்பனுக்குச் சந்தே கம் ஏதுமிருக்கவில்லை. தனக்கு விரோத மாகத்தான் தீர்ப்பாகும் என்று அவன் ஏற்கெனவே முடிவுகட்டி விட்டான். தங்கப்பன் எடுத்துக் கொண்ட நடவடிக் கையில் நேர்மை இருப்பதை ஓரிருவர் சுட்டிக் காட்ட நேர்ந்தால் அவர்கள் 'முதலாளிக்கு வால் பிடிப்பவர்கள்' என்று பட்டம் சூட்டப் பெறுவார்கள். தொழிலாளர் சமூகத்தின் ஒற்றுமை யைக் குலைக்க வந்தவர்களாகக் கருதப் படுவார்கள். எதிர்த் தரப்பின் வாதங் களுக்கும் எப்போது மதிப்புத் தரப்படு கிறதோ அப்போதுதான் கயிற்றின் இரு முனைகளையும் பிடித்துக் கடையும்போது வெண்ணெய் திரள்வதுபோல உண்மை புலனாகும் என்பதை உணரப் போவ தில்லை; அப்படி உணராது அவர்கள் உணர்ச்சி வசப்படுமாறு பார்த்துக் கொள்வார்கள் அதற்கெனக் கைக் கூலி பெற்றவர்கள். ஆகக்கூடி அவர்கள் கடைப்பிடிக்கப் போவது வேலை நிறுத் தமோ ஒத்துழையாமைக் கொள்கையோ எதுவா னாலும் இறுதியில் மன மின்றியேனும் அனை வரும் ஒத்துப் போய் விடுவார்கள். அப்படி அதற்கு இணங்காத வர்கள் கருங்காலிகளாக ஆகிவிடுவார்களே!

விவாதங்கள் நீண்ட நேரம் அங்கு நடைபெற் றுக் கொண்டிருந்தது அவனுக்குப் பெருமளவு நிம்மதியையும் திருப்தி யையும் அளித்தது. அந் தக் கூட்டத்தில் தன் தரப்பிலும் பேச ஆளிருந் தார்கள் என்பதை எடுத் துக் காட்டியது நீடித்துக் கொண்டு போன கால அளவு.

"தம்பி! ரொம்பவும் கவலைப்பட்டுக் கிட்டிருக் காதே! அதனால் 'அல்ஸர்' தான் வரும்! வயிறும் குட லும் புண்ணாவதுதான் மிச் சம். மேற்கொண்டு ஆக வேண்டியதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்! அதுதான் நல்லது" என்றார் மாருதி.

"எனக்குக் கவலை இல்லை, ஸார்! கவலை இல்லை! கோபம்தான் என் நெஞ்சத்திலே எரிமலையாக் குமுறிக்கிட்டிருக்குது" என்று கூறியபடி மேஜையை ஓங்கிக் குத்தினான் தங்கப்பன். "இத்தனைக்கும் அந்த ராங்கிக் காரிதானே காரணம்? அவளை... அவளை என்ன செய்தால்தான் என்ன?" பற்களை நறநறவென்று கடித்தான் தங்கப்பன்.

"தம்பி! கோபப்படுவது சுலபம். ஆனால் அவளிடத்தில் நீ அனுதாபம் காட்டுவதுதான் நியாயம்."

"அனுதாபமா? உஷாவிடமா? எதற்காக ஸார்? அத்தனை விஷம் நிறைஞ்ச மனசுடைய இன்னொருத்தியைச் சல்லடை போட்டுத் தேடினாலும் கண்டுபிடிக்க முடியாதே!"

"அதனாலேதான் நானும் சொல்றேன், தம்பி! உஷாவின் போக்கு உனக்குக் கோபத்தை அளிக்கிறதை விட ஆச்சரியத்தை அல்லவா தரவேணும்? இப்படியும் ஒரு பெண் இருக்க முடியுமா? அவள் மனசிலே இத்தனை வெறுப்பும் வன்மமும் எப்படி வளர்ந்தன? ஏன்? எதனால்? எதற்காக இப்படிச் செய்கி றாள் என்று நீ யோசித்துப் பார்த்தாயா?"

தங்கப்பன் தன் உள்ளத்தில் ஏதோ ஒரு புதுமையான உணர்வு மூள விடுவதைக் கண்டவன் போல் அவரை விநோதமான விதத்தில் ஏறிட்டுப் பார்த்தான்.




கி. ராஜேந்திரன்



"ஆமாம் ஸார்! உஷா வின் விபரீதமான செய்கை களுக்கெல்லாம் நான் தேர்த லில் நிற்கப் போகிறேன் என்பதோ அது ஒரு விதத் தில் அவள் தகப்பனாரை எதிர்ப்பதாகும் என்பதோ அல்லது என் புகழ் பெருகு வதால் ஏற்பட்ட பொறா மையோ காரணங்கள் இல்லை; இவை யெல்லாம் விட அடிப்படையான முக் கியமான வேறு காரணம் ஏதேனும் இருக்கத்தான் வேண்டும் என்று எனக்குக் கூடத் தோன்றுகிறது!"

"ஒருத்தருடைய நடை உடை பாவனைகள் சுபாவம் எல்லாவற்றையும் பிறப்பு, வளர்ப்பு, அனுபவங்கள் போன்ற எத்தனையோ விஷ யங்கள் பாதிக்கும். உஷா பிறந்தபோதே தாயை இழந்துவிட்ட அதிருஷ்டக் கட்டை. அதுவே அவளுக்கு ஒரு பெரிய குறை. எந்த ஒரு பெண்ணுடைய மனமும் தாயில்லாமல் முழுமையான வளர்ச்சியோ வடிவமோ பெற முடியாது. அதனால்

போகட்டுமென்றும் அவளுடைய அத்தையின் பாதுகாப்பிலே வளர்ந்தாளே, அந்த மகேசுவரி எப்படிப்பட்டவள்? திடமான மனமோ, உடம்போ இல்லாத ஒரு பஞ்சடைத்த பொம்மை மாதிரி. அண்ணனுக்குப் பயந்து நடுங்குபவள். அவள் புருஷன் குடி கூத்தென்று சொத்தையெல்லாம் அழிச்சுத் தன்னையும் அழித்துக் கொண்டவன். வெறும் கையோடும் விதவைக் கோலத்தோடும் வந்த அவளுக்கு ஆதரவு கொடுத்தது மட்டுமில்லே, கொத்துச் சாவியையும் அவளிடமே கொடுத்தார் நீனதயாளு. தான் இந்தப் பெருமைக்கு, பொறுப்பு வகிப்பதற்குத் தகுதியானவளில்லே என்கிற எண்ணம் சதா அவளை உறுத்தியிருக்கும். தன்னைப் பற்றியும் நிராதரவாகத் தன்னைவிட்டுப் போன குடிகாரப் புருஷனைப் பற்றியும் அவமானத்தால் புழுங்கியிருப்பாள். அப்படிப்பட்டவள் உஷாவை உருப்படியாக வளர்க்கிறது சாத்தியமாகுமா? அவளைக் கண்டித்து வளர்க்கத் தனக்கு என்ன அதிகாரமோ யோக்கியதையோ இருக்குதுன்னு எண்ணியிருப்பாள். அதற்கு மாறாகப் பிடிவாதம் பிடிக்கும் குழந்தையை அப்பப்போ வழிக்குக் கொண்டுவரச் செல்லம் கொடுத்துக் கொஞ்சியிருப்பாள். அளவுக்கு மீறிய சலுகைகள் பெற்றுத் தன் செல்வத்திலும் அழகிலும் ஆசை வைத்துக் கர்வம் கொண்டு வளர்ந்திருக்கிறாள் உஷா. அவள் கேட்டதெல்லாம் கிடைத்துவிடும். நினைத்ததெல்லாம் நடந்துவிடும் என்னும் போது அந்தச் சிறுமியின் உள்ளத்தில் தன் அழகு அந்தஸ்து செல்வம் இவற்றைத் தவிர வேறு எதிலுமே ஒரு பிடிப்பு உண்டாயிருக்காது.



அவள் அடைய வேண்டிய லட்சியம் குறிக்கோள்னு ஒன்றும் கிடையாது. படிச்சா என்ன படிக்கிறேன்றவங்க இல்லே, படிக்கலேன்னு ஏன் படிக்கலேன்னு கேக்கறவங்களும் இல்லே. இதனால் அவளுக்கு வாழ்க்கையில் உற்சாகம் இல்லே; எதுக்காக யாருக்காக உயிர் வாழ்கிறோம் என்பதே புரியாத வெறும் சூன்யம்தான்!

''தம்பீ! நோயுற்ற நோஞ்சான் குதிரையை வண்டியில் பூட்டிச் சவுக்கடி கொடுத்தால் அது கொஞ்ச தூரம் தலை தெறிக்க ஓடும். மறுபடியும் முன்னைக் காட்டிலும் சோர்வுற்றுத் தள்ளாடும். அதேபோல்தான் உஷாவும் தன் உருத்துப்போன வாழ்வுக்குப் புத்துயிர் கொடுப்பதாக நினைத்துக்

கொண்டு இப்படிச் சில சேஷ்டைகளில் ஈடுபடுகிறான். வெறுமையை விரட்டியடிக்கும் நோக்கத்தில் அவன் மேற்கொள்ளுகிற இந்த முயற்சிகள் அதுக்கு மருந்தாகுமா? உஷாவின் மனசைச் சரியாப் புரிஞ்சுக்கிட்டு அனுதாபத்தோட அணுகி, நல்ல, உயர்ந்த காரியங்களிலே அவன் கவனத்தையும் கருத்தையும் திருப்பி நோயைக் குணப்படுத்தும் ஆளில்லே!''

இணைந்து உல்லாசமாகக் காலத்தை ஓட்டுவது போல் தோன்றலாம். ஆனால் அந்த வெளித் தோற்றத்துக்குப் பின்னும் துயரமே வடிவாக அவனைக் காண்கிறேன் நான். நாம் அவனை நோக்குகிற ஒவ்வொரு





தங்கப்பனுடைய நினைவுத்திரையிலே உதகையில், அவன் தான் ஆரோகணித்திருந்த குதிரையை அடி அடியென்று அடித்து விரட்டிக் கொண்டு சென்ற காட்சி விரிந்தது. அன்று அவன் அந்தக் குதிரையைக் கொடுமைப் படுத்துவதிலும், பிறகு அடிக்கடி அவனது மனத்தைத் தனது தகாத செயல்களாலும் கொடூரமான சொற்களாலும் துன்புறுத்துவதிலும் இன்பமே கண்டதாக உணர்ந்து. இந்நாள்வரை தங்கப்பன் ஒன்றும் புரியாமல் வியந்திருக்கிறான். ஆனால் இப்போது எல்லாமே தெளிவாகிவிட்டது போலிருந்தது. 'தனது துயரத்தை வெளிக் காண்பித்துக் கொண்டு அழ வாய்ப்பில்லாத காரணத்தால்தான் அவன் பிறரை வருத்தச் செய்து வேடிக்கை பார்க்கிறானா?'

''மாருதி ஸார்! 'கல் இறந்தது' என் பாங்கிலே அப்படி இருக்கு ஸார், எனக்கு இன்றைக்கு'' என்றான் தங்கப்பன், புதிய தெளிர் உற்சாகத்துடன். ''வெளிப் பார்வைக்கு அவன் ஏதோ சுக போகங்களில் விநாடியும் அவன் நமக்காக நடித்துக் காண்பித்துக் கொண்டிருக்கிறான் என்று நினைக்கிறேன்.''

''பெருமளவுக்கு நீ சொல்கிறது வாஸ்தவம்தான், தம்பி! பெற்ற தகப்பனார் வாரத்திலே எட்டு நாட்கள் வீட்டிலே தங்குறதில்லே! அவரோடு சென்னைக்குச் சென்று தங்கிப் படிக்க வேணுமென்ற ஆசை உஷாவுக்கு உண்டு என்கிறது எனக்குத் தெரியும். ஆனால் தீனதயாளு இத்தனை நாட்களாக அதற்கு முட்டுக்கட்டைதான் போட்டு வந்திருக்கிறார். பட்டணத்திலே அவர் ஒரு சினிமா எக்ஸ்ட்ரா மோகினிகிட்டே சிக்கிக் கிட்டிருக்கிறதா வேறே கேள்வி. அது எவ்வளவு தூரம் உண்மையோ பொய்யோ எனக்குத் தெரியாது. ஆனால் ஊரிலே நாலு பேர் பேசிக்கிறது உஷாவின் காதிலே விழாமல் போகுமா? அதற்கப்புறம் பட்டணத்துக்கு அவனை அவர் அழைச்சுக்கிட்டுப் போகாததற்கு வேறு எங்கே போய் என்ன காரணத்தை அவன் தேடப் போகிறான்?''

தங்கப்பன் தன் இதயம் அவனுக்காகக் கனிந்துருக வேதனைப்பட்டான். குடிகாரரான மாமா, கூத்தாடியுடன் தந்தை, குழைந்து நெளியும் அத்தை — தாழ்வு மனப்பான்மை யால் கூனிக் குறுகி இருக்குமே அவன் நெஞ்சம்! நல்லவர்களை, நேர்மையாக வாழ நினைக்கிறவர்களைக் கண்டால், பணம் பதவி இவற்றுக்காக எந்த வழியையும் கடைப் பிடிக்கத் தயங்காத தன் தந்தையின் நினை வும் கூடவே வந்து இதயத்தைப் புண் படுத்த, பொருமையால் கொதிக்குமே அந்த உள்ளம்! மிடுக்கும் வெறுப்புமாக அது பொங்கிச் சீறிப் பாய்வதில்தான் என்ன ஆச்சரியம் இருக்கிறது?

'உஷா! நீ இனிமேல் என்ன செய்தாலும் எப்படி நடந்து கொண்டாலும் உன்னை இந்த நிலைக்கு ஆளாக்கியவர்கள் மீதுதான் எனக்குக் கோபம் வருமே தவிர, உன்னை ஒருபோதும் தவறாக எண்ண மாட்டேன்' என்று உறுதி யாகத் தனக்குள் கூறிக் கொண்டான் தங்கப்பன்.

## அத்தியாயம் 28

# வேலை நிறுத்தம்

வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஃபிட்டர் பக்கிரிசாமியிடம் 'டிஸ்மிஸல் ஆர்டரைக் கொடுக்கு முன்னர் அவன் தன் கட்சியை எடுத்துரைக்க ஒரு சந்தர்ப்பம் தரப்படவில்லை' என்பது தொழிலாளரின் வாதம். 'உன்னை ஏன் வேலையிலிருந்து நீக்கக் கூடாது?' என்று கேட்டிருந்தால் அவன் ஒருவேளை மன்னிப்புக் கூடக் கோரியிருப்பான்!

"இப்போதுதான் என்ன, அவன் தவற்றை ஒப்புக்கொள்ளட்டும். திரும்பவும் வேலைக்கு எடுத்துக் கொள்கிறேன்" என்ற தங்கப்பன், "என்ன பக்கிரிசாமி என்ன சொல்கிறாய்?" என்று கேட்டவாறே அவனிருந்த பக்கமாகத் திரும்பினான். பதில் கூறப் பக்கிரிசாமியின் உதடுகள் அசையத் தொடங்கு முன்னர் தண்டாயுதபாணி குறுக்கே புகுந்து பேசினான் அவசரமாக. "அதை எப்படிங்க ஒத்துக் கொள்ள முடியும்?" என்றான். மறுபேச்சில்லா மல் பக்கிரிசாமி திரும்பவும் வேலைக்கு எடுத் துக்கொள்ளப்பட வேண்டும். அதுதான் அவர் களது முடிவான தீர்மானம்; இல்லையானால் வேலை நிறுத்தம்தான்.

தங்கப்பன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். ஓர் அறிஞரது பொன் மொழி அவன் நினைவுக்கு வந்தது. 'நீ சுறு சுறுப்பாக இருப்பதாய்ப் பெருமைப்பட்டுப் பிரயோசனமில்லை. ஏன், எறும்புகள் கூடத் தான் சுறுசுறுப்பாய் உள்ளன. எதைக் குறித்து நீ சுறுசுறுப்பாய் இருக்கிறாய் என்பது தான் முக்கியமான விஷயம்.' இதைத்தான் தங்கப்பன் தன் தொழிலாளரிடம் கூறினான். "ஃபிட்டர் பக்கிரிசாமி உபயோகப்படுத்தும் ஸ்பானரையோ ஸ்குரு டிரைவரையோ நான் கையிலே பிடித்து வேலை செய்வேன். அந்த அளவுக்கு உடலுறுதியும் தொழில் நுணுக்கத் திறனும் எனக்கு உண்டு. உடல் உழைப்பின் பெருமையும் எனக்குத் தெரியும். பக்கிரிசாமி செய்து வந்த வேலையில் உள்ள சிரமத்தையும் நான் உணர்ந்திருக்கிறேன். ஆனால் நான் பக்கிரிசாமியின் வேலையைச் சிரமப்பட்டே னும் செய்துவிடலாமே ஒழிய, பக்கிரிசாமி யால் என் காரியங்களைக் கவனிக்க முடியாது. ஒரு ஃபிட்டரின் பணி ஒரு தொழிலகத்துக்கு எவ்வளவு அவசியமோ, அப்படியே லாப நஷ்டக் கணக்குகளை நிர்ணயிப்பதும், கடிதப் போக்குவரத்துக் கொள்வதும், வருகிறவர் களுக்குப் பதில் சொல்லுவதும் பிற காரி யாலய அலுவல்களும் ஒரு தொழிலகத்துக்கு அத்தியாவசியமானவைதான். அவையும் இலகுவான காரியங்கள் இல்லை. அவற்றைச் செய்பவர்களுக்குத்தான் அந்தக் கஷ்டம் தெரியும். ஆகவே அந்த அறிஞர் கூறியது போல் நாம் சுறுசுறுப்பாக இருக்கலாம்; அவரவர் எதைக் குறித்துச் சுறுசுறுப்பாக இருக்க வேண்டுமோ, அதில் நம் செயல் திறனைக் காட்டலாம்.

இந்த நியாய வாதங்களெல்லாம் எந்த விதமான சலனத்தையும் அவர்களிடம் உண் டாக்கவில்லை. முன்னறிவிப்பின்றி ஒருவனை வேலையை விட்டு நீக்கியது தவறு. அவர் களுக்கு அதற்கு நியாயம் கிடைத்தாக வேண்டும். மற்றவையெல்லாம் பிறகுதான்.

தங்கப்பன் தொடர்ந்து அவர்களிடம் கூறினான். "உங்களில் சிலரை வெளியாட்கள் தம் வயப்படுத்தி யிருக்கிறார்கள். இந்தத் தொழிற்சாலையில் வேலை நடக்கவில்லையென் றால் அது எனக்குத்தானே நஷ்டம் என்று நினைக்கலாம். நீங்கள் அனைவரும் அதனால் பாதிக்கப்படுவது மட்டுமல்ல; உண்மையில் அது தேசிய நஷ்டமேயாகும். ஆனால் நாட் டில் உள்ள ஒவ்வொரு பிரஜையையுமே நேரடியாகவும் உடனடியாகவும் பாதிக்கும் தேசிய நஷ்டங்கள் குறித்தே நாம் கவலைப் படுவதாகக் காணோம். நமக்கென்ன சம்பத் தம் என்று அலட்சியப்படுத்தும் அளவுக்கு நாம் சுரணை குன்றிப் போயிருக்கிறோம்..."

தங்கப்பன் தனக்கு முன்னால் உட்கார்ந் திருந்த தொழிலாளரின் முகங்களைக் கூர்ந்து பார்த்தான். அவற்றில் அவன் பேச்சைப் புரிந்து கொண்டதற்கான பிரதிபலிப்பாக எந்தவிதமான சிறு உணர்ச்சி பாவத்தையும் காணோம். எல்லாரும் அசைவின்றி அழுத்த மாக அமர்ந்திருந்தார்கள். தங்கப்பனுக்கு மேலும் மேலும் தான் பேசிக் கொண்டு போவதில் அர்த்தமில்லை என்பது விளங்கி யது. 'தன்னுடைய பொருளாதாரத் தத்து வங்களை இவர்கள் எங்கே புரிந்துகொள்ளப் போகிறார்கள்? அப்படியே புரிந்துகொண் டாலும் அல்லது புரிந்து விட்டது போல் காட்டிக் கொண்டாலும், 'அதெல்லாம் சரி தாங்க, நாங்க இல்லேன்னு சொல்லலே,



கல்கத்தா ஈஸ்டர்ன் ஸ்டீம் ஷிப் கம்பெனி மானேஜிங் டைரெக்டர் ஸ்ரீ டி. எஸ். சுப்ரமணியன் குமாரி சௌ. ஜயாவுக்கும், பம்பாய் கே. எச். சீதாராமனின் குமாரர் சிரஞ்சீவி கே. எஸ். சுப்ரமணியனுக்கும் திருநெல்வேலி ஜில்லா தருவை கிராமத்தில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!





மணமகள்: சௌ. பூமா B. Sc., சென்னை அரவிந்த் லாபரட்டரீஸ், ஸ்ரீ A.V. சீனிவாசன் அவர்கள் குமாரி.

மணமகன்: சிரஞ்சீவி டி. தேவநாதன், M. A., A. C. A. இவர்கள் திருமணம் சமீபத்தில் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

What you can't see





செஞ்சுரியின்

ஃபேஷன் துணிரகங்களை

...தொட்டுப் பார்த்தால் தெரியலாம் அவைகள் அணிய எவ்வளவு சுகமளிப்பவை என்று.

சூப்பர்கோம்டு மற்றும் சூப்பர்க்வையன் டாப்லி ஷர்ட்டிங்குகள், செக் ஷர்ட்டிங்குகள் புட்டா பாப்லின்கள், ப்ளீச்டு மற்றும் டைடு பாப்லின்கள், உடுப்புகளுக்கான துணிகள், சூப்பர்க்வையன் ஸ்கிரீன் பிரிண்டெட் லான்கள், பிரிண்டெட் வாயில்கள், லெனன்கள்.

இ செஞ்சுரி ஸ்பின்னிங் & மானு. கோ. லிட்., பம்பாய்–1

ஆறு.... என்று பழைய பல்லவியையே மீண்டும் பாடுவார்கள்.

தங்கப்பனின் நெஞ்சைத் துயரம் நிறைத்தது; தொண்டை அடைத்துக் கொண்டது. அதே சமயத்தில் அவனால் தனது தொழிலாளரிடையே நிலவிய ஒற்றுமையையும், உறுதியையும் கண்டு பிரமிக்காமலும் கொஞ்சம் பெருமைப்படாமலும் இருக்க முடியவில்லை! மேலும் அங்கு தாமதிக்காமல் தங்கப்பன் அங்கிருந்து வெளியேறி நடந்தான் வீடு நோக்கி.

தங்கப்பன் போன பிறகு மாருதி தொழிலாளரிடையே உட்கார்ந்து அவர்களுடன் அளவளாவுவதுபோல் நயமாகப் பேசினார்.

''தங்கப்பன் இந்த யூனியனை ஆரம்பிக்கத் தானாகவே முன்வந்தபோது நான் ரொம்பவும் சந்தோஷப்பட்டேன். ஏன் தெரியுமா? இது ஒரு லட்சிய யூனியனாகத் திகழும்னு அவன் கூறினதினாலேதான்! ஒரு லட்சிய யூனியன் எப்படிச் செயல்படணும்? தொழிலாளிங்களோட நியாயமான கோரிக்கைகளுக்காக அது போராடணும். அதே சமயத்தில் தொழிலாளிங்களிடமிருந்து நியாயமான அளவு உழைப்பைப் பெற முதலாளிக்கும் உதவ வேணும். ஒரு லட்சிய யூனியன் தொழிலாளிங்க நலனுக்கு மட்டுமே ஏற்பட்டதில்லே. ஒரு தொழிலாளி தன் கடமையைச் சரிவரச் செய்யலேன்னு அது முதலாளிக்குத் தெரியவரதுக்கு முன்னாடி யூனியன் தலைவருக்குத் தெரிஞ்சுடும். தலைவர் அவனைக் கூப்பிட்டுக் கண்டிக்கணும். பிரிட்டனிலே இப்படிப்பட்ட லட்சிய யூனியன்கள்தான் செயல்படுகின்றன. அதனாலேதான் அங்கே யூனியன் என்றால் முதலாளிங்க பயந்து சாவதற்குப் பதில் அதை விரும்பி வரவேற்கிறாங்க. தொழிலாளி ஒருவன் தொடர்ந்து தன் கடமையை ஒழுங்காகச் செய்யலேன்னு அவன் வேலையிலிருந்து அதுக்காக நீக்கப்படுகிறதுக்கு முன்னால் யூனியன் தலைமையே அவனை யூனியனிலிருந்து விலக்கி விடுகிறது. பிறகு யூனியன் அங்கத்தினன் என்று காண்பிக்கும் அத்தாட்சிச் சீட்டு இல்லாத அவனுக்கு எங்கேயும் வேறு நல்ல வேலை கிடைக்காது! இந்த வழக்கம் நடைமுறையிலே இருப்பதால்தான் அங்கே உழைப்பும் மிகுதியா இருக்குது; உற்பத்தி பெருகுது; நாட்டின் செல்வம் சிறக்குது; தொழிலாளரும் நல்ல சம்பளம் பெற்றுச் செளக்கியமா வாழுறாங்க. எதுக்குச் சொல்ல வரேன்னு...''

''என்ன வாத்தியாரே!'' என்றான் கருப்பண்ணன். ''நீங்க ஓசிலே சீமைக்குப் போயிட்டு வந்த பெருமையை இங்கே அளந்து என்ன பிரயோசனம்? அங்கே தெருக்கூட்டறவனிலேருந்து தொடங்கி எல்லாத் தொழிலாளிங்களும் சொந்தக் காரிலேதான் வேலைக்குப் போறாங்களாமே, அதைக் கவனிச்சீங்களா?''

''நல்லாக் கவனிச்சேன். நாளாவட்டத்தில் அந்த நிலையை அடையத்தானே நாமும் பாடுபடுகிறோம் இன்று?''

''ஆமா, நாளைய வயத்துப்பாட்டுக்கு வழியைக் காணுமாம்; நாளாவட்டத்திலே சொந்தக் கார் ஓட்டலாம்னு ஆசை காட்டறாரு!''

'கொல்'லென்ற சிரிப்பொலி நாலா புறமிருந்தும் கிளம்பி அவரைச் சுற்றிச் சூழ அதற்கு மேல் ஏதும் பேச மாருதிக்கு நா எழவில்லை. இவன் அறியாமையால் பேசுகிறானா அல்லது மிகுந்த அறிவாற்றலுடன் இங்கிதம் வேண்டுமென்றே ஆளை மடக்குகிறானா என்பது அவருக்கு விளங்கவில்லை.

'ஈசன் விட்ட வழி' என்று இறுதி முடிவுக்கு வந்து அவர் அங்கிருந்து கிளம்பிப் போய்விட்டார்.

அடுத்த பதினைந்து நாட்களுக்குத் தாமரைத் தொழிலகத்தின் முன் வாசலில் தொங்கிய பூட்டுத் திறக்கப்படவேயில்லை! (தொடரும்)



# பாக்கியவதி

எஸ். ரங்கநாயகி

**அ**ம்மா வரப் போகிறாள்!

அதை எண்ணிப் பார்த்துக் கொண்டே சோபாவில் சாய்ந்து கிடந்தான் ரகுபதி. அன்றுதான் அந்தக்கடிதம் கிடைத்திருந்தது. அதற்குப் பதில் எழுதுவதற்குள் அம்மா புறப்பட்டு விடுவாள். இந்த ஒரு வருட காலத்தில் அந்தக்கடிதம்தான் அவனுக்கு வியப்பை மட்டுமல்ல, ஓர் அச்சத்தையும் கொடுத்திருந்தது.

கோமளத்துக்கு அவன் ஒரே மகன். அப்பா இல்லாத குறையை அவன் உணரவில்லை. பி. காம் முடித்துவிட்டு வி. ஏ. படிக்க ஒரு நண்பரின் உதவியுடன் கல்கத்தாவில் ஒரு கம்பெனியில் அமர்ந்தான். படித்து முடித்து அவனுக்கு வேலையும் கிடைத்து விட்டது. அவன் அம்மா மட்டும் தஞ்சாவூரிலேயே இருந்து வந்தாள்.

அவன் வேலையிலமர்ந்ததுமே கோமளம் எழுதியிருந்தாள்: "ரகு! நீ வேலையில் அமர்ந்து விட்டாயே, இனியும் தாமதிக்கக் கூடாது. மைதிலியுடன் உன் விவாகத்தை நாங்கள் நடத்திவிட வேண்டும். நீ லீவு எடுத்து வா!"

மைதிலியின் முகம் முழு நினைவில் இல்லாவிடினும் மைதிலியின் உறவு முறை அவனுக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அவனுடைய மாமன் மகள் அவள். தாய் தந்தையற்ற மைதிலி தன்னுடைய மாமாவின் வீட்டில் வசித்து வந்தாள். ரகுபதிக்கு அவளை மணம் முடித்துவிட அனைவரின் சம்மதமும் இருந்தது. அதனால்தான் ரகுபதியின் வீட்டோடு அவளை வளர விடாது அவளுடைய மாமா வீட்டில் வளர விட்டிருந்தனர். விவாக பந்தத்துக்குப் பிறகுதான் இருவரையும் சேர்க்க வேண்டும்; அதுவரை பிரித்துக் கட்டுப்பாட்டுக்குள் வைப்பதுதான் நல்லது. கல்கத்தாவுக்குப் புறப்படும்போதுகூட ரகுபதி மைதிலியைப் பார்க்கவில்லை. அதற்குப் பிறகு பல வருடங்கள் மறைந்து விட்டன.

அம்மாவுக்குத் தன் விவாகத்தைப் பற்றி என்ன பதில் எழுதுவது? தன் கடிதத்தைப் பார்த்தால் அம்மா எப்படிக் கோபத்துடன் இரைவாள் என்பது அவன் மனத்தில் படம் எடுத்துக் காட்டியது. கடைசியில் அவன் தன் துணிவைச் சேர்த்துப் பதில் எழுதி விட்டான். "அம்மா! என் விவாக விஷயத்தில் உன் விருப்பப்படி நடந்துகொள்ள முடியாததற்கு வருந்துகிறேன். இங்கு என் ஆபீஸிலேயே பணி புரியும் சுமித்ராவை நான் தேடிக்கிறேன். எங்கள் திருமணத்தை நீங்கள் ஒருவரும் விரும்ப மாட்டீர்கள். அந்தத் திருமணத்துக்கு நீங்கள் ஒருவரும் வரமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன். அதனால் இங்குள்ள வேதியரை மட்டும் வைத்துக் கொண்டு மாங்கல்யத்தை முடியப் போகிறேன். நீ என்னைக் கண்டிப்பாய் மன்னிப்பாய் என்றே நம்புகிறேன். இப்படிக்கு

— ரகுபதி."

இந்தக் கடிதத்துக்கு வந்த பதிலை அவன் படித்தபோது ஒரு தாய் எழுதிய கடிதமாகவே அவனுக்குத் தோன்றவில்லை. விரோதி கூட இன்னும் கொஞ்சம் நல்ல முறையில் நடந்து கொள்வான் என்றேதான் தோன்றியது. அவ்வளவு காரசாரமாகப் பதில் இருந்தது.

சுமித்ராவும் ரகுபதியும் மணம் முடித்து இல்லறம் தொடங்கி விட்டனர். சுமித்ரா வேலையை விடவில்லை. கோமளம் கடிதங்கள் எழுதுவதை நிறுத்தவில்லை. இதுவரை ரகுபதி அக்கடிதங்களைக் கிழித்து விடுவான். இப்போது அவள் வருவதாகவே கடிதம் வந்ததும் அவன் துணுக்குற்றான்.

"சுமித்ரா! என் அம்மா வரப் போகிறாளாம். கடிதம் வந்திருக்கிறது" என்று ரகுபதி கூறினான்.

சுமித்ராவுக்கும் ஆச்சரியம்தான். இந்தக் காதல் திருமணத்தை வெறுப்பவள் எந்த மனத்தோடு இங்கு வர நிச்சயித்திருக்கிறாள்! கடிதத்தைத் தொடர்ந்து கோமளம் ஸ்டேஷனுக்கு வரும்படி தந்தியும் அடித்துவிட்டிருந்தாள்.

ஸ்டேஷனில் தாயை மட்டும் காணவில்லை; தாயுடன் வந்த பெண்...

"மைதிலி! நீ அந்தக் கூஜாவை எடுத்துக் கொள். கூலியிடம் அதைக் கொடுக்காதே. பிடி சரியாக இல்லை."

கோமளம் கூறியதைக் கேட்டபிறகுதான் வந்திருப்பது யார் என்பது ரகுபதிக்குப் புரிந்தது. அவன் கண்களைப் பலமுறை துடைத்துப் பார்த்துக்கொண்டான். பருவத்தின் நிழலில் பிரும்மனுடைய படைப்பில் இப்படி ஒரு தேவமங்கையைக் கண்டதில்லை எனத் தன் மனம் கூவுவதை அவன் உணர்ந்தான். வெறுப்பும் செந்நிறமும் கலந்த உடலில் அளவோடு அமைந்திருந்த அங்கங்களும், பொன் முகத்தின் புன்முறு

வதும், முழங்கால் வரையில் நீண்டிருந்த பின்னலும்...

"நீ ஸ்டேஷனுக்கு வராமல் இருந்து விடுவாயோ என்ற பயம் எனக்கு!" அம்மா ஆரம்பித்தபோதுதான் அவனுக்குச் சுய நினைவு திரும்பியது.

வீட்டுக்கு வந்த மாமியாரைச் சுமித்ரா இன்முகத்துடன் வரவேற்றாள். தாய்க்கும் மகனுக்கும் மிடையே தன் காரணமாகப் பிளவு இருப்பதை அவள் முதலிலேயே விரும்பவில்லை. மாமியாரை மெள்ளச் சமாளித்துத் தங்களுடனேயே இருக்கச் செய்ய வேண்டும்!

"இவள்தான் உங்கள் மனைவியா?" என்று மைதிலி கேட்டாள்.

"ஆமாம். இவள்தான் சுமித்ரா" என்றவன் பிறகு சுமித்ராவை நோக்கி, "சுமி, இவள் என் மாமன் மகள். மைதிலி என்று பெயர்" என்று கூறினான்.

சாப்பிட்டுவிட்டுச் சுமித்ராவும் ரகுபதியும் ஆபீசுக்குக் கிளம்பி விட்டனர். கணவன் மனைவியாக அவர்கள் அப்படிக் கிளம்பி விட்டது மைதிலிக்குப் புதிய அனுபவம்.

மாலை வீடு திரும்பியபோது ரகுபதி தான் புதிய சூழ்நிலையில் இருப்பதை உணர்ந்தான். சுமித்ரா இன்னும் வீடு திரும்பவில்லை. அவள் வேறு இலாகாவில் இருப்பதால் தாமதமாகத்தான் வருவாள்.

தன் அறையில் நுழைந்த ரகுபதிக்குத் தான் ஆபீசுக்குப் போனபோது விட்டுச் சென்ற சாமான்கள் ஒன்றும் கண்ணில் படவில்லை. பான்டின் பட்டனைக் கழற்றிக் கொண்டே அவன் சுற்றுமுற்றும் தேடினான்.

"என்ன ரகு தேடுகிறீர்கள் ?" என்று மைதிலி கேட்டாள்.

"நான் காலையில் இங்கு வைத்திருந்த பைஜாமாவைக் காணுமே!"

மைதிலி பக்கென்று சிரித்து விட்டாள். "பைஜாமா நீங்கள் போட்டுவிட்டுச் சென்ற நிலையில் அப்படியே தரையில் கிடக்குமா? அதை மடித்துப் பக்கத்தில் துணி ரேக்கில் வைத்திருக்கிறேன், பாருங்கள்! ஆட்டைத் தோளில் போட்டுக் கொண்டு தேடுபவனுக்குப் பக்கத்தில் இருப்பது தெரியவில்லை."

ரகுபதி அவள் கூறியதை மகிழ்ச்சியுடன் கேட்டுக் கொண்டான். அந்த மகிழ்ச்சியின் அடித்தளத்தில் அவன் எதையோ உணர்ந்த பாவம்.

ரகுபதி உடை மாற்றுவதற்குள் மணக்க மணக்கக் காப்பி வந்துவிட்டது. அவனுடைய களைப்புக்கு அந்தக் காப்பி எவ்வளவு இதமாக இருந்தது!

ரகுபதி மணியைப் பார்த்துக்கொண்டான். அவன் ஆபீசிலிருந்து திரும்பி வந்து பதினைந்து நிமிடங்களுக்குள் காப்பியும் குடித்தாகிவிட்டது. இனி என்ன செய்வது?...

தினமும் அவன் திரும்பி வந்து தானே காஸ் அடுப்பில் காப்பி போடுவான். இவன் அதைத் தயாரித்து முடிக்கும் வேளையில் சுமித்ரா வந்துவிடுவாள். அவள் சமையலை ஆரம்பிக்கும்போது அவன் உதவுவான். பிறகு இருவரும் உலாவச் செல்வார்கள். இன்று அந்தப் பணிகள் ஒன்றும் இல்லை. மேலே என்ன செய்வது?

சுமித்ரா ஆபீசிலிருந்து திரும்பியதும் மாமியாரிடம் கோபித்துக் கொண்டாள். "அம்மா! நீங்கள் எதற்குச் சமைக்க வேண்டுமாம்! நான் வந்து சமைக்க மாட்டேனு? உங்களுக்குப் பிடித்தமானதைச் சொல்லுங்கள். இனி நானே சமைக்கிறேன். என் கை ருசியைத்தான் பாருங்களேன்!"

கோமளமும் மைதிலியும் வந்து ஒரு வார காலத்துக்கு மேலாகவே ஓடிவிட்டது. சுமித்ரா அவர்களோடு ஒட்டிப் பழகியும் கோமளம் மட்டும் மகனுடனே, அவளுடனே அதிகம் கலக்கவில்லை. இந்த ஒரு வாரத்துக்குள் ரகுபதி மட்டும் தனக்குள் ஏதோ ஒன்று குடைந்தெடுப்பதை உணர்ந்தான். மைதிலியைவிடச் சுமித்ராவை எந்த விதத்தில் உயர்வாகக் கண்டு மணம் புரிந்திருக்கிறான்?

அவன் தன் கண்களை மூடி ஆராய்கிறான். எழிலுருவமாக மைதிலியின் பிம்பம் கண்



ளோடு அழகாகிறது. சுமித்ராவின் அழகுக்கு மேல் மைதிலியின் அழகு விரிந்து நிற்கிறது. அந்த அழகின் அடிச்சுவட்டில் அவன் காலை வைக்கும்போது மைதிலியின் பேச்சு இன்ப வாரிதியைத் தருகிறது. அவளது ஒவ்வொரு செய்கையும் தனக்கு உகந்ததா யிருந்தது.

பத்து நாட்களுக்குள் கோமளம் அண்டை அயலில் சிநேகிதர்களைப் பிடித்துக்கொண்டு விட்டாள். ராமர் கோவிலில் உபந்யாசத்துக்கும், கலை நிகழ்ச்சிக்கும், கறிகாய் வாங்க மார்க்கெட்டுக்கும், தென்னிந்திய ஸபையின் நிகழ்ச்சிகளுக்கும் போய் வர ஆரம்பித்து விட்டாள். அவள் வீட்டில் தங்குவது தூர்லப மாகிவிட்டது. மைதிலி என்றுமே அவனுடன் செல்வாள்.

அன்று ரகுபதி சீக்கிரமே ஆபீஸிலிருந்து திரும்பியபோது மயக்கம் தரும் இப்படி யொரு கானத்தைக் கேட்டு வாசலிலேயே நின்று விட்டான்.

அவன் உள்ளே நுழைந்ததும் முதலில் கேட்ட கேள்வி, ''மைதிலி, உனக்குத் தெரியாத கலையே கிடையாதா? தேவ கானமாக இப்படி எங்கிருந்து கற்றுக் கொண்டாய்?'' என்பதுதான்.

''தென்னிந்தியாவில் வளர்ந்தவள் நான். கேள்வி ஞானம்தான் இது எனக்கு. நீங்கள்



# எங்கள் புதிய ரெக்கரிங் டெபாஸிட் சேமிப்புத் திட்டம்





பிரதிமாத சுலப டெபாஸிட்டின மூலம் உங்கள் திட்டமிட்ட குறிக்கோள் நிறைவேறுவதற்கு தேவையான கணிசமான பெரும் தொகையை சேமிப்பதற்கு ஊக்கமளிக்கிறது.



| மாதாந்திரத் தவணைத் தொகை | திருப்பியளிக்கப்படும் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 10 | 123-50 | 255-00 | 395-00 | 543-00 | 709-00 |
| 25 | 308-75 | 637-50 | 987-50 | 1357-50 | 1772-50 |
| 100 | 1235-00 | 2550-00 | 3950-00 | 5430-00 | 7090-00 |
| 250 | 3087-50 | 6375-00 | 9875-00 | 13575-00 | 17725-00 |
| 500 | 6175-00 | 12750-00 | 19750-00 | 27150-00 | 35450-00 |

ELEGANT

மாதாந்திரத் தவணைகள் குறைந்த பட்சம் ரூ. 10

ரூ. 5-ன் கூட்டுத் தொகை — ரூ. 500 வரையில் ஏற்றுக்கொள்ளப்படும்.

**இந்தியன் பாங்க் லிட்.**

சென்னை - 1

வந்து விடுவீர்கள் எனத் தெரியாது. நானே பாடிப் பார்த்துக் கொண்டேன்.''

''நான் வருவது தெரியாமலிருந்ததே நல்லதாகிவிட்டது. இல்லாவிட்டால் இந்தக் கானத்தை நான் கேட்டிருக்க முடியுமா? உன்னுடைய புத்தி கூர்மையைக் கண்டு நான் வியக்கிறேன்.''

''ரகு! என்னிடம் என்ன கூர்மை இருக்கிறது? ஆபீசில் பணி புரியும் திறமை இருக்கிறதா? பொருளாதாரத்தில் உங்களுக்கு உதவ முடியுமா? சுமித்ராவைக் கண்டு நான் வியக்கிறேன். குடும்பத்தையும் வேலையையும் ஒருங்கே அவள் எப்படிச் சமாளித்துக் கொள்கிறாள்!''

உணர்ச்சிக் கொந்தளிப்பு மேலெழும்பிவிட ரகுபதி கூவ ஆரம்பித்தான். ''மைதிலி! என் தவறு எனக்குப் புரிகிறது. உன்னை...''

சட்டென்று வார்த்தைகளை முடிக்காமல் நிறுத்திவிட்டது உணர்ச்சிகளை அடக்குவதற்கான முயற்சி இல்லை. திடீரென்று சுமித்ரா உள்ளே நுழைந்துவிட்டது அவன் வார்த்தைகளைச் சப்தத்தோடு கலக்க விடாமல் வாயினுள்ளேயே அடங்கி விட்டது. இன்று சுமித்ராவும் சீக்கிரமாகத் திரும்பக்கூடும் என்று அவனுக்குத் தோன்றாமலே போய்விட்டதே!

சுமித்ராவுக்கு அவர்கள் சம்பாஷணையில் சில வார்த்தைகளாவது காதில் விழுந்திருக்க வேண்டும். அவள் தன் கையிலிருந்த பர்ஸை மேஜையின் மீது வீசி எறிந்தாள். கணவனை ஒரு முறை நோக்கினாள். பிறகு மைதிலியை ஒரு முறை நோக்கிவிட்டுக் கேட்டாள்!

''அம்மா எங்கே?''

''அத்தை மார்க்கெட்டுக்குப் போயிருக்கிறாள் சுமித்ரா!''

''மகன் வரும் வேளையில்தான் கறிகாய்க்கு அவசரமாகப் போக வேண்டுமென்றும், இதெல்லாம் யாருடைய வழி வகுத்த திட்டம் என்று எனக்குப் புரிகிறது.''

மேலும் அவள் ஏதேதோ முணங்கிக் கொண்டிருந்தாள். அன்றிலிருந்து அவளுடைய நடவடிக்கைகளில் மாறுபாடுகள் காணப்பட்டன. தன் மனத்தை நல்ல எண்ணத்துக்குத் திருப்பிக்கொண்டு தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டுவிட்டதான பிரமை. மைதிலி அந்த வீட்டில் நுழைந்தபோதே இருக்கிறீர்க்க வேண்டும். அவளோடு நெருங்கியிருக்கக் கூடாது. மாமியாரை வீட்டோடு ஒட்ட வைக்க எடுத்த முயற்சி நெருப்பாக எரிந்து அவளையே தகிக்கிறது. அவள் தன்னை நல்ல மருமகளாகக் காட்டிக்கொள்வதில் ஈடுபட்டிருக்க, மாமியாரோ வழி வகுத்துத் திட்டமிட்டு மைதிலியை அழைத்து வந்திருக்கிறாள்!

கோமளத்துக்குச் சுமித்ராவின் மனத்தில் புரைவோடிவிட்ட விஷயம் தெரியவில்லை. ஒன்றுமட்டும் அவள் உணர ஆரம்பித்தாள். சுமித்ரா முன்போல் இல்லை. அவர்களிடம் அவள் எரிந்து விழுகிறாள். வீட்டு வேலைகளில்

## ஆயுர்வேதம் சிறக்கத் தங்கப் பதக்கம்




பதக்கத்தின் முன்புறம்

ஆயுர்வேதத்தின் தத்துவங்களை அதில் ஆர்வமுள்ளவர்கள் விஞ்ஞான ரீதியான நோக்குடன் கற்றுணர வேண்டும். இந்திய மருத்துவத்தின் சிறப்பைக் கணித்து, அதனை உலக முழுவதிலுமுள்ள மருத்துவ, விஞ்ஞான அறிஞர்கள் புரிந்து கொள்ளக்கூடிய மொழியில் தரவேண்டும். இவை வைத்திய ரத்தின காப்டன் ஸ்ரீனிவாசமூர்த்தியின் லட்சியங்கள். ஆயுர்வேதம் என்றும் கொடியினை உலகின் உச்சியில் பட்டொளி வீசிப் பறக்கச் செய்யவேண்டுமானால் அதற்குத் தீவிர ஆராய்ச்சிகளில் இறங்குவதுடன் மருத்துவத்துக்கு ஆதாரமான விஞ்ஞானப் பாடங்களிலும் தேர்ச்சி பெற வேண்டும்; பழங்காலத்திய மருத்துவத்துடன், நவீன மருத்துவத்திலும் பரிச்சயம் கொள்ளவேண்டும்; பட்டப்படிப்புடன், பட்டதாரிகளுக்கான உயர் கல்வியும் இருக்க வேண்டும்; — இவ்விதம் மிகவேயேல் கொடியைப் பறக்க விடுவதற்குப் பதிலாக வெறும் பட்டம் பறக்க விடுவதாக முடியும் என்று கருதியவர் பிரின்ஸிபால் ஸ்ரீநிவாசமூர்த்தி.

பதக்கத்தின் பின்புறம்




ஆயுர்வேதத் துறையில் பெரும் பணியாற்றியுள்ள பிரின்ஸிபால் ஸ்ரீநிவாசமூர்த்தியின் நினைவாகவும் அவரது சிறந்த சேவைகளை நன்றியுடன் போற்றும் முகமாகவும் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் ஒரு தங்கப் பதக்கத்தைத் தயாரித்து அதனை மத்திய ஆயுர்வேத ஆராய்ச்சிக் கௌன்ஸிலின் சார்பாக காசி ஹிந்து சர்வ கலாசாலையின் பட்டதாரிகளின் மேல்படிப்புப் பிரிவுக்கு (Post Graduate Institute) அளித்துள்ளார்.

சென்ற மாத இறுதியில் காசியில் இந்த வைபவம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

பங்கெடுக்காமல் தள்ளி நிற்கிறான். அத்துடன்... காதலித்து மணம் செய்துகொண்ட தம்பதிகளிடையே ஏன் திடீரென்று அடிக்கடி பூசல் கிளம்புகிறது? அந்த அறையை விட்டு வெளியே வந்ததுமே ரகுபதி அம்மாளிடம் குழைகிறான், மைதிலியிடம் இனிக்கப் பேசுகிறான். வெளியே மகிழ்வின் இருப்பிடத்தைக் காண்கிறான்.

ஓரிரு மாதங்கள் மேலே நகர்ந்தன. அன்று ரகுபதி பிற்பகல் லீவு போட்டுவிட்டுத் திடீரென வீடு திரும்பியிருந்தான். அவன் லீவு எடுத்திருப்பது சுமித்ராவுக்குத் தெரியாது. தெரிந்திருந்தாலும் ரகுபதி வீடு செல்வது பற்றி அவள் கவலைப்பட்டிருக்க மாட்டாள். ஏனெனில் மைதிலி அன்று தென்னிந்திய கிளப்பில் லேடீஸ் செக்ஷனில் நடந்த போட்டிகள் சிலவற்றைக் காணப் போகப் போகிறாள். கோமளம் போகவில்லை.

''என்ன ரகு, சீக்கிரம் திரும்பிவிட்டாய்? உடம்புக்கு ஏதாவது...'' என்று கோமளம் தவித்தாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா. உன்னோடு தனிமையில் பேசத்தான் வந்தேன்'' என்று கூறித் தவிப்பைக் கொட்டினான்.

கோமளம் மகனையே கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தாள்.

''சட்டப்படி இது கடினம் என்று உனக்குத் தோன்றும். ஆனால் என் மனம் அறிந்தால், என்னோடு வாழப் பிடிக்காது சுமித்ரா ஒதுங்கிவிடுவாள். மைதிலியோடு நான் இணைவதில் கஷ்டம் இருக்காது.''

''உன்னுடைய இந்த முடிவில் நீ தீவிரமாகவும் உறுதியாகவும் தானே இருக்கிறாய்? நீ சொன்னது என் காதில் சரியாக விழுந்ததா என்று தெரிய வேண்டும்.''

ரகுபதி மகிழ்ச்சியின் நாதத்தைக் கிளப்பி விடுபவனாகக் கூறினான். ''ஆமாம், நான் உறுதியாகத்தான் சொல்கிறேன். மைதிலி என்வாழ்க்கைத் துணைவியாக ஆகவேண்டும்!''

கோமளம் மௌனமாக உள்ளே போய் விட்டாள். ரகுபதியும் தன் அறைக்குச் சென்று விட்டான். எப்படியும் தன் தாயார் தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைப்பாள் என்ற நம்பிக்கையுடன்.

மறுநாள் காலை கோமளம் தான் அன்றே மைதிலியுடன் ஊருக்குப் போகப் போவதாகக் கூறியபோது சுமித்ரா பதில் கூறவில்லை. ரகுபதி மட்டும் ரகசியமாகக் கேட்டான். ''என்னம்மா நான் கூறியதை மறந்து விட்டாயா? திடீரென இந்தப் பயணம் ஏன்?''

''மறக்கவில்லை ரகு! அதற்காகவே நான் முக்கியமாக அவசரப்பட்டுக் கிளம்புகிறேன். நீயோ உறுதியாக இருப்பதாகக் கூறுகிறாய். ஊருக்குப் போய்த்தான் நான் மைதிலியைக் கலந்துகொண்டு மற்றவர்களுடன் ஏற்பாடு செய்கிறேன். என் கடிதம் கண்ட பிறகு நீயும் தவறாமல் வா! மைதிலியின் பாக்கியம் நன்றாக இருக்கக் கடவுள் அருளட்டும்.''

கோமளம் மைதிலியோடு புறப்பட்டுச் சென்று விட்டாள். ரகுபதி சுமித்ராவிடம் எப்படிக் கூறுவது எனத் தவித்தான்.

நாள்தோறும் எதிர்பார்த்த கடிதம் பத்து நாட்களுக்குப் பிறகுதான் வந்தது.

''ரகுபதிக்கு, அம்மாவின் ஆசிகள். இத்தனை நாட்களாக ஏற்பாடு செய்வதில் மூழ்கியதால் உடனே கடிதம் எழுத முடியவில்லை.

ரகு! மலரைப் பெண்ணுக்கு ஒப்பிடுவார்கள். ஆனால் அதைச் சுற்றும் வண்டை ஆணுக்கு ஒப்பிட்டு நான் கேட்டதில்லை. வண்டு சுயநலமி. பல மலர்களை வஞ்சிப்பவை. ஆறறிவு படைத்த மனிதன் அது போல் இருக்க மாட்டான். இருக்கக்கூடாது. சுமித்ராவை நீ விவாகம் செய்துகொண்டதை நான் தடுத்தவள்தான். ஆனால் உன் மனைவியாக நீ ஏற்ற பிறகு அவள் ஒருத்திக்குத்தான் நீ சொந்தம் என நான் உறுதி கொண்டவள். நீயும் அப்படித்தான் நடந்துகொள்வாய், சுமித்ராவை விடுத்து உன் மனம் வேறு பக்கம் திரும்பாது என்ற திடமான நம்பிக்கையுடன்தான் மைதிலியை அன்று அழைத்து வந்தேன். உன்னோடு சரளமாகப் பழக விட்டேன். ஆனால் அதன் முடிவை நீ கூறியபோது திடுக்கிட்டு விட்டேன்.

மைதிலியின் அதிர்ஷ்டம் காரணமாகத்தான் அவள் உன்னை மணக்காமல் தடுத்திருக்கிறது. அவள் பெற்றோர்களற்ற பெண், சுமித்ராவைப் போல் தொழில் முறை அநுபவம் கிடையாது. அப்படிப்பட்டவள் உன்னை மணந்திருந்தால் இப்போது போல் உன் மனம் வேறு ஒரு பெண்ணிடம் திரும்பிச் சஞ்சலம் கண்டிருந்தால் மைதிலி நிர்க்கதியாக நின்றிருப்பாளே! அவள் பாக்கியவதி. உன்னை மணக்கவில்லை!

நான் ஊருக்குச் சென்று ஏற்பாடு செய்வதாகச் சொன்னேனல்லவா? அதே போல் மைதிலிக்குத் தகுந்த மணாளனை நிச்சயித்து விட்டேன்.

நல்ல வேலையில் அமர்ந்து பெற்றோர்களுடன் சென்னையில் வசிக்கும் அவன், மைதிலிக்குத் தகுந்த காப்பாளனாக இருக்க ஆண்டவன் அருள் புரியட்டும். மைதிலியின் திருமணத்துக்கு நீ கட்டாயமாக வா. சுமித்ராவையும் தவறாமல் அழைத்து வா.

ரகு! உன்னையே நீ குற்றவாளியாக எப்போதும் பார்த்துக்கொள். சுமித்ராவுடன் உன் விவாகம் முடிந்து விட்டதால் சுமித்ரா ஒருத்தியைத்தான் நான் என் மருமகளாக ஏற்பேன். அதேபோல் அவள் ஒருத்திதான் உன் மனைவி. நீ இதை மறக்கக் கூடாது.

அம்மா.''

கடிதத்தைப் படித்து முடித்ததும் ரகுபதியின் கண்களில் நீர்த் தேக்கம். கடிதத்தை மேஜை மீது வைத்தான். ''அம்மா!'' என்ற கூவலுடன் கண்களை மூடி நாற்காலியில் சாய்ந்து விட்டான்.

ரகுபதி மீண்டும் கண் விழித்தபோது எதிரே சுமித்ரா அமர்ந்திருப்பது தெரிந்தது. ''மைதிலியின் பாக்கியத்தைவிட என் பாக்கியத்தைக் கண்டு நான் வியக்கிறேன். இப்படியொரு மாமியார் சில பாக்கியவதிகளுக்குத்தான் அற்புதமாகக் கிடைத்திருக்கிறாள்.'' — சுமித்ரா முணுமுணுப்பது அவன் காதில் விழுந்தது.



# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் முப்பத்தாறு

## அத்திப் பழம்

கோடைக்காலம் ஓடியும் சென்னை நகர் மட்டும் இன்னும் குளிரவில்லை. வெயிலான வெயில் இன்னும் வறுத்துக் கொட்டிக் கொண்டிருந்தது. அந்த அனல் எரிப்பிலே தார் இளகித் தளதளத்துக் கிடந்த எழும்பூர் நெடுஞ்சாலையில் ஒருவித 'சள சளா' சத்தத்தை எழுப்பியவாறு கார்களும், பஸ்களும், லாரிகளும் அசுர வேகத்தில் பறந்து கொண்டிருக்க, சைக்கிளிஸ்டுகள் தம் முதுகெலும்பே உருகி வளைந்தாற் போலக் கூனிட்டுக் குனிந்து விரைந்துகொண்டிருந்தனர். பாதசாரிகளின் விறுவிறுப்பான நடமாட்டம் தீ மிதி விழாவைக் காண்பதுபோல் இருந்தது.

சோளிப் பெட்டிகளை மலை போல் ஏற்றி அடுக்கப்பட்டிருந்த கைவண்டி ஒன்றை இரு கூலியாட்கள் தம் கால் பாதங்களைக் கோணிக் கந்தைகளால் சுற்றிக் கட்டிக் கொண்டு முன்னும் பின்னுமாக நின்று முண்டியடித்து இழுத்துத் தள்ளிச் சென்றனர். எங்கோ இருக்கும் காலணி விற்பனை நிலையமொன்றுக்கு அந்தக் கன்னிப் பெட்டிகளில் புதிய காலணிகள் அனுப்பப்படுகின்றன என்பது அவற்றின் மேல் ஒட்டப்பட்டிருந்த லேபிள்களிலிருந்து தெளிவாயிற்று. திடீரென்று அந்தச் சாலையில் கணகணவென்ற மணி ஓசை. சிவப்பு வர்ணம் தீட்டிய 'ஃபயர் என்ஜின்' ஒன்று வேகமாக வந்து அதே வேகத்தில் மறைந்தது. அரசியல் மேடைப் பேச்சாளர்களுக்கும், திரைக் கலைஞர்களுக்கும் அன்று 'விளம்பர யோக தினம்' போலும்!

குடைக்காரர்களுக்கு மழை — பனிக் காலங்களும், ஐஸ் கடைக்காரர்களுக்கு வெயில் காலமும் பொற்காலங்கள் அல்லவா? சிறு சிறு பெட்டி வண்டிகளிலும், பெரிய தர்மாஸ்பிளாஸ்குகளிலும் 'பனிநீர்ப் பழம்' (ஐஸ் ஃப்ரூட்!) விற்கும் சிறுவர்களின் உற்சாகமான ஓசைக் குரல் தெருவுக்குத் தெரு, சந்துக்குச் சந்து கேட்டுக் கொண்டிருந்தது. பிழைக்கத் தெரியாத ஓர் அப்பாவி அந்தப் பட்டை உரிக்கும் வெயிலில் 'இஞ்சி மொரபா' விற்றுக்கொண்டு போனான். மரத்தடிகளி

னும், சாலை ஓரங்களிலும் வர்ண வாரியான தண்ணீர் பாட்டில்கள் நிறைந்த தள்ளு வண்டிகளை நிறுத்தி வைத்துக் கொண்டு வெகு ஜரூராகச் சர்பத் வியாபாரம் செய்துகொண்டிருந்தனர் சிலர். அங்கு பெரும்பாலும் ஏழை மக்களே தாகசாந்தி பண்ணினர். கொஞ்சம் 'தாட்பூட்' ஆசாமிகள் வெற்றிலை பாக்குக் கடைகளில் நின்று உயர்தரக் குளிர் பானங்களைக் குழாய்க் குச்சியால் நாசூக்காக உறிஞ்சிப் பருகிக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு 'பங்க்' கடை எதிரிலும் ஒரு சிறு கும்பல் கூடி நின்றது.

இப்படிச் சென்னை நகரக் குழாய்த் தண்ணீரெல்லாம் சிறிதளவு ஐஸ் கட்டியுடன் புளிப்பும் இனிப்பும் சேர்ந்த வர்ணக் கலவைகளாகி அமோகமாக விலையாகிக்கொண்டிருந்த அந்த நடுப் பகல் நேரத்தில்—

எழும்பூர் பழைய சாராயக்கடைச் சந்திலிருந்து வெளிப்பட்டு, நெடுஞ்சாலையில் எதிர்ச் சற்றுத் தூரம் நடந்து வலப் பக்கவாட்டிலிருந்த ஓர் அலங்காரமான வெற்றிலைப் பாக்குக் கடையண்டை போய், "ஹப்பாடா! இன்னா வெயில், இன்னா வெயில்! கொளுத்தித் தள்ளுதே!" என்றவாறு கையிலிருந்த பெரியதொரு கித்தான் பையைச் சுவரோரம் சாத்தி வைத்துவிட்டுக் கைக் குட்டையை எடுத்து முகத்துக்கு நேரே சுழற்றி வீசிக்கொண்டே இடது கையால் கூலிங் கிளாஸைக் கழற்றினான் நச்சினார்க்கினியன்.

அந்தக் கடைக்காரர் "பட்டணத்து சீஸன் நுணுக்கம்' தெரிந்தவர். ஐம்பதாயிரம் ரூபாய், லட்ச ரூபாய் என்று அதிர்ஷ்டச் சீட்டுப் பரிசுப் போட்டிகள் பிரபலமாயிருக்கும்போது அவை சம்பந்தமான போஸ்டர்களும் கூப்பன்களுமே அவர் கடையை அலங்கரிக்கும்; தேர்தல் காலங்களிலோ காரசாரமான தலைப்புக்கள் கொண்ட அக்கப்போர் மஞ்சள் பத்திரிகைகளை நிறைய வாங்கிக் கடையை ஜோடித்து விடுவார்; அப்புறம் இடையிடையே மலிவு விலையில் பல வர்ண அட்டைப் பட மோகினிகளைத் தாங்கி வெளிவரும் மர்மக் கொலை, துப்பறியும் நாவல்கள் அந்தக் கடையிலே தூக்குப் போட்டுத் தொங்க ஆரம்பிக்கும்; அடுத்து, தீபாவளி மாசத்தில் பட்டாசுக் கடையாக மாறும்; அதன் பின் வருஷக் கடைசியில் காலண்டர் கண்காட்சிக் கூடமாக விளங்கும்; பிறகு பொங்கலுக்கு முந்தின வாரம் விதம் விதமான பொங்கல் வாழ்த்து இதழ்கள் பரப்பப்பட்டுப் பளிச்சிடும். ஆனால் எந்த சீஸனிலும் வெற்றிலை பாக்கு, பீடி சிகரெட்டுகள் விற்பனைக்கு இருந்து கொண்டே யிருக்கும். பட்டாசு சீஸனில் மாத்திரம் பீடி சிகரெட் பற்ற வைக்கத் தேங்காய் நார்க் கயிற்றில் நெருப்பு மூட்டி வைப்பதில்லை.

இது கோடைக் காலமல்லவா? அதாவது, குளிர் பான விற்பனை சீஸன்! அதை அனுசரித்து அந்தக் கடை முழுக்கச் சோடா, கலர், சர்பத் புட்டிகளாக அடுக்கப்பட்டுக் காட்சியளித்தன. ஒரு மரப் பெட்டி நிறைய ஐஸ் கட்டிகள்; ஈரத் துணி போர்த்திய பெரியதொரு பானையில் தண்ணீர்; ஒரு கூடையில் எலுமிச்சம் பழங்கள்; வரிசையாக அடுக்கப் பட்ட கண்ணாடித் தம்ளர்கள்; எலுமிச்சம் பழத்தைப் பிழிவதற்கென்று இரட்டை அகப்பை வடிவிலே அலுமினியத்தாலான ஒரு கருவி — இத்தியாதிகளுக்கிடையே குறுகுறுவென நின்று குளிர் பான விற்பனையில் வெகு சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தார் அந்தக் கடைக்காரர். அவர் மலையாள மாப்பிள்ளா வகுப்பைச் சேர்ந்தவர். பெயர் அகமது குட்டி.

"இன்னப்பா, காக்கா! நம்பளுக்கு ஒரு சர்பத் போடு! ஐஸ், லெமன் எல்லாம் கலாய்ஞ்சு சும்மா ஜில்லுன்னு இருக்கணும்!" என்று தன் வழக்கமான கோணல் சிரிப்புடன் சொன்னான் நச்சி.

வேலையில் கவனமாக இருந்த அகமது குட்டி அப்போதுதான் அவனை நிமிர்ந்து பார்த்து, "வாடா, வா!" என்றார் புன்முறுவலுடன். "என்ன ரொம்ப அவசரமோ? கொஞ்ச நேரம் இரேன்."

"ஆவட்டும், ஆவட்டும். அவங்களுக்கெல்லாம் முதல்லே போட்டுக் கொடுத்தனுப்பு" என்றவாறு ஒரு கள்ளிப்பெட்டியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான் நச்சி.

நாலு சர்பத், இரண்டு கலர், மூன்று சோடா — கடையில் இருந்த கூட்டம் கொஞ்சம் குறைந்தது. "இந்தாடா, ஸ்பெஷல் சர்பத்!" என்றபடி நச்சியிடம் தம்ளரை நீட்டினார் கடைக்காரர்.

"இன்னா, லெமன் இருக்குதா?" என்று ஓர் அர்த்த பாவத்துடன் கண் சிமிட்டிக் கேட்டுக் கொண்டே சர்பத்தை வாங்கினான் நச்சி.

"இருக்குது, இருக்குது" என்று புன்னகை புரிந்த கடைக்காரர், "நேத்து ஏன் வரலே?" என்று கேட்டார்.

"நேத்திக்கு மவுண்ட் ரோடு, திருவல்லிக்கேணி, மைலாப்பூரு, மாம்பலம் — இந்த ரூட்களிலே போயிட்டேன்; முந்தாநாள் சிந்தாதிரிப்பேட்டை, சௌகார்பேட்டை, கொருக்குப்பேட்டை, தண்டையார்பேட்டை, வண்ணாரப்பேட்டை; இன்னிக்குக் கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம், கீழ்ப்பாக்கம், எழும்பூர்! ......ஆமாம்; எதுக்குக் கேட்கிறே? வேறே எவனாச்சும் வந்தானு?"

"எவனெவனோ வர்றாங்க. நான் யாருக்கும் கொடுக்கறதில்லேன்னு சொல்லிப்பிடறது."

"இதுக்கும் போட்டிக்கு ஜெம்பிட்டான்களா? சரி; இன்னையோடு இந்த வேலையை விட்டுட வேண்டியதுதான்!"

"ஏன்டா, இதுக்குள்ளாற விட்டுடறே? இன்னும் ஒரு மாசம் தள்ளலாமே?"

"நம்பளுக்கு வாணாம், காக்கா! இது ரொம்பப் பேஜார் புடிச்ச வேலையா இருக்குது. இந்த அஞ்சாறு நாட்கள் இதைக் குதியா செய்ததே பெரிய விசயம். அர்ஜண்ட் தேவைக்காக இதிலே பூந்தேன். அது ஒரு இஷ்யூ 'லீன்' ஆயிடுச்சு. நாளையிலிருந்து வேற எதனாச்சும் சம்மர்சால்ட் அடிக்க வேண்டியதுதான்."

"பெரிய ஆளுடா, நீ!" என்று நகைத்த அகமது குட்டி, பல்லுக்காக அவசரப்பட்டுக்

கொண்டு நின்ற ஒருவருக்கு ஐஸ் பெட்டியில் வைத்திருந்த சோடாவை 'உடைத்து'க் கொடுத்துக் காசை வாங்கிப் போட்டுக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தார். அப்போதைக்குக் கடை எதிரில் ஒருவருமில்லை. ''சரி, சரி; பையைப் பிடடா!'' என்றவாறு கீழே குனிந்து ஒரு குப்பைக் கூடையை எடுத்தார். அதில் காலியான சிகரெட் பாக்கட்டுகள், பீடி பண்டல் உறைகள், சோடா கலர் புட்டிகளின் கார்க்குகள் — இவற்றுடன் சர்பத் பானத்தில் பாதி பாதியாக அறுத்துப் பிழிந்துவிட்டுப் போட்ட எலுமிச்சம் பழத் தோல்களும் நிறைந்திருந்தன. பெட்டியைக் கவிழ்த்து அதிலிருந்த எலுமிச்சம் பழத் தோல்களை மட்டும் தனியாகப் பொறுக்கிச் சேர்த்துக் குவியலாக்கினார். இரண்டு நாள் சர்பத் வியாபாரத்தில் சேர்ந்த அவை, மண்ணும் தூசியுமாகக் கொஞ்சம் அழுகியும் காய்ந்தும்கூட விட்டிருந்தன.

''பரவாயில்லே; சரக்குப் பலமாகத்தான் இருக்குது!'' என்று சிரித்துக் கொண்டே எழுந்த நச்சி, ''இன்னா காக்கா! இதெல்லாம் சேர்த்துக் கமாரா மூணு கிலோ இருக்குமா?... எவ்வளவு கேட்கிறே?'' என்றவாறு அந்த எலுமிச்சம் பழத் தோல்களை வாரித் தன் கித்தான் பைக்குள் போட்டுக்கொண்டான். அதில் ஏற்கனவே இருந்த தோல்களுடன் இவையும் சேர்ந்து பை நிறைந்தது.

''நாலு கிலோவுக்கு இருக்கும்; நீ கொடுக்கிறதைக் கொடுடா!'' என்று சிரித்த அகமது குட்டி, தமக்குப் பிடிக்காத ஏதோ ஒன்றை நினைத்துக் கொண்டவர்போல் பெருமூச்சு விட்டார்.

''இன்னா காக்கா, பெருமூச்சு உடறே? குப்பையிலே கொட்ற இந்த அழுகல் தோலே வாங்கிக் காசு சம்பாரிக்கிறாங்களேன்னு நினைக்கிறியா? இதுதான் பிசினஸ் ட்ரிக்ஸ்! ஆயிரம் எலுமிச்சம் பழம் இப்ப இன்னா வெலே? பதினஞ்சு ரூபா இருக்குமா? அதே அளவுத் தோலுங்களை நான் அஞ்சு ரூபாய்க்குச் சப்ளை பண்றேன். வாங்குற வங்களுக்குப் பத்து ரூபா லாபம்; எனக்கு ரெண்டோ மூணோ கிடைக்கும்; உனக்கும் அநாமத்தா ஒரு ரூபா வருது. இந்தத் தோலுகளை வேக வைச்சு, மசாலா என்னெயிலே ஊறப் போட்டுப் பாட்டில்களிலே அடைச்சு அழகான லேபிளும் ஒட்டிக் கண்ணாடி அலமாரியிலே அடுக்கி வைச்சுட்டா, 'லெமன் பிக்கிள்ஸ்' அப்படின்னு ஜனங்கள் அள்ளிக்கிட்டுப் போயிடுறாங்க! சர்பத்துக்குப் பிழிஞ்சுட்டுக் குப்பையிலே போட்ட அழுகல் தோலுன்னு அவங்களுக்குத் தெரியவா போவுது? நான் சப்ளை செய்யுற அந்தப் பலான கம்பெனி முதலாளி இந்த மாதிரி ஊறுகாய் வியாபாரம் பண்ணியே மெட்ராஸில் மூணு பங்களாவுக்குச் சொந்தக்காரராயிருக்கார். இதுமாதிரியான குல்மால் பிசினஸ் இன்னும் எவ்வளவோ இருக்குது. காப்பிப் பொடியிலேயிருந்து, பொண்ணுங்கள் தலையிலே வைச்சிக்கிற கதம்பப் பூ வரை இந்தக் கழிசல் சரக்கு வியாபாரம் நடந்துக்கிட்டுத்தான் இருக்குது'' என்று அலட்சியமாகச் சொல்லி இரண்டு கைகளையும் தட்டித் துடைத்துக்கொண்ட நச்சி, குப்பென்று ஒரு குறுக்குச் சிரிப்புச் சிரித்துவிட்டு மேலும்



டாக்டர்: நவரசம் என்றால் என்னென்று நீங்க முதலில் தெரிந்துகொள்ளணும்!

நடிகை: ஓ! நல்லாத் தெரியுமே, ஆப்பிள் ரசம், அன்னாசி ரசம், சாத்துக்குடி ரசம், ஆரஞ்சு ரசம், எலுமிச்சம் ரசம், மாம்பழ ரசம், திராட்சை ரசம், தக்காளி ரசம், மிளகு ரசம் இவையெல்லாம் எனக்கு ரொம்பப் பிடிக்குமே!

சொன்னான்: ''இங்கே பாரு, காக்கா! சில கோயில்களிலே சாமிக்குப் பஞ்சாமிர்தம் படையல் பண்றதுக்காகக் கூடை கூடையா வாழைப் பழம் செலவாகுதே. அந்த வாழைப் பழத் தோலெல்லாம் இன்னா ஆவுது, எங்கே போவுது, எதுக்கு உபயோகமாகி எப்படிக் காசாவுதுங்கிற ரகசியம் உனக்குத் தெரியுமா? அதை நான் சொல்ல மாட்டேன்! ஏன்னு, அந்தக் கயிலாத்து வேலே ஒண்ணுதான் நான் செய்யாதது; எனக்கென்னமோ அது பிடிக்கிறதே இல்லே!...சரி, இந்தா பத்தணா. சர்பத்துக்கும் சேர்த்துக் கொடுத்திருக்கிறேன்.''

அகமது குட்டி நச்சியை வியப்புடன் ஏறிட்டுப் பார்க்க, அவன் வெகு உற்சாகமாகத் தன் சரக்குப் பையை எடுத்துக் கொண்டு கானல் பறந்த நெடுஞ்சாலையில் இறங்கி நடக்கலானான்.

அன்று மாலை நான்கு மணி இருக்கும். கடந்த ஐந்தாறு தினங்களாக ஊறுகாய்க் கம்பெனி யொன்றுக்குச் சப்ளை செய்த எலுமிச்சம் பழத் தோல்களுக்குரிய மொத்தத் தொகையில் அவ்வப்போது அட்வான்ஸாக வாங்கிக்கொண்டது போக மீதிப் பணம் இருபத்தைந்து ரூபாய் பெற்று ஒவ்வொரு நோட்டாக எண்ணிப் பார்த்து ஜேபியில் திணித்துக்கொண்டு பாய்க்கடை பஸ் நிலையத்துக்கு வந்து பதினேழாம் நம்பர் பஸ்ஸுக்காகக் காத்து நின்றான் நச்சி.

''வாத்தியாரே! இப்படி வந்து ஒரு கை கொடுக்கிறியா?''

சிகரெட் குடித்தவாறு சிந்தனையில் ஆழ்ந்து நின்ற நச்சி மெல்லத் திரும்பிப் பார்த்தான். சற்று முன்னால் ஒரு டாக்சி நின்றுகொண்டிருக்க, அதிலிருந்து இறங்கிய டிரைவர், அவனை நோக்கி வந்தான்.

''இன்னாப்பா, என்னையா கூப்பிட்டே? வண்டிக்கு இன்னா?'' என்று கேலியாக வினவினான் நச்சி.

''படுத்துக்குச்சு வாத்தியாரே! சர்வீசுக்கு அனுப்பணுமின்னு மொதலாளி மூக்காலே அழுவறான். அவனுக்கு வண்டி ஓடிக்கிட்டே இருக்கணும். நானெல்லாம் இப்படி நான் அவதிப்படறேன். அதோ பாரு, நடு ரோட்டிலே வண்டி நிக்குதுன்னு போலீஸ்காரர் மொறைக்கிறார். உள்ளே உட்கார்ந்திருக்கிற பாசஞ்சர் வேறே மீட்டர் ஆவுதுன்னு

சத்தம் போடறுங்க. கொஞ்சம் வா, வாத்தியாரே! ஒரு கை பிடிக்கத் தன்னு.''

ஏதோ யோசித்த நச்சி, ''சும்மாவா தன்னச் சொல்றே? நாலணு கொடுக்கணும்; கொடுக்கிறயா?'' என்றன் அலட்சியமாக.

''அட, இன்னுப்பா நீ! இதுக்கெல்லாம் போய்க் கூலி கேட்கிறே?''

''இது கூலியா? ஹெல்ப் பண்றதுக்கு பக்ஷீஸ்! நீ மாத்திரம் சும்மாவா வண்டி ஓட்றே? இல்லே, எனக்கோ ஓசியா ஏத்திகிட்டுப் போறியா?''

''ஆங், படா கில்லாடி ஹைறு நீ!'' என்று சிரித்த டிரைவர், வேறு யாராவது இடைப்பார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு. ''சரிதான் வாத்தியாரே, வந்து தன்னு. ரெண்டணு வாங்கிக்க'' என்றவாறு விரைந்து போய் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்தான்.

கையிலிருந்த சிகரெட்டை எறிந்துவிட்டுச் சென்ற நச்சி, டாக்ஸிக்குப் பின்னுல் நின்று. ''ஆ...புடி, புடி, புடி, ராஜா!...யேர் போட்டியா? போடு!...'' என்று கூவிக்கொண்டே தள்ளினன். கொஞ்ச தூரம் தள்ளியதும் வண்டி உறுமிக்கொண்டு 'ஸ்டார்ட்' ஆகிவிட்டது. சட்டென்று முன்னுல் தாவிய அவன், ''எடுப்பா! துட்டை எடு!'' என்று டிரைவரிடம் கை நீட்டிய அதே சமயம், ''ஹலோ, மிஸ்டர் நாச்! வேர் ஆர் யூ கோயிங்?'' என்று மகிழ்ச்சிக் கேவலான கீச்சுக் குரல் கேட்டு அவசரமாகத் திரும்பினன். அந்த டாக்ஸியின் பின் 'சீட்'டில் உட்கார்ந்திருந்த ரோஸ்லின் அப்போதுதான் அவனைப் பார்த்துவிட்டுப் பரபரப்புடன் கதவைத் திறந்தாள்.

நச்சியின் பாடு தர்மசங்கடமாகி விட்டது. ஏதும் சொல்லத் தோன்ருமல் திக்கித் திணறிய அவன், டிரைவரிடமிருந்து வாங்கிய பன்னிரண்டு பைசாவை, ''இந்தாப்பா! சும்மா கேட்டேன். நீயே வைச்சுக்க'' என்று திருப்பிக் கொடுத்துவிட்டு அசட்டுச் சிரிப்புடன் திரும்பி, ''இன்னு, மிஸி! எங்கே போறே?'' என்றன்.

''கம் இன், மிஸ்டர் நாச்! கம் இன்!'' என்று அவனுடைய கையைப் பிடித்துக் குலுக்கி டாக்ஸிக்குள் இழுத்தாள் ரோஸி.

''பரவாயில்லே, மிஸி! நான் கொஞ்சம் அர்ஜண்டா போவணும். நானே சவ்விங் வந்து கண்டுக்கிறேன்.''

''நீ எங்கே போவணும்? அதை முதல்லே சொல்லு டார்லிங்?''

''நான் என் ஹவுஸுக்குப் போறேன். மம்மி வரச் சொல்லி போன் பண்ணிச்சு.''

''தொங்கம்பாக்கம்தானே? உன்னே அங்கே ட்ராப் பண்ணிடறேன். கெட் இன், டார்லிங்!'' என்றவாறு வலுக் கட்டாயமாக அவனை இழுத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள் ரோஸி. ''டிரைவர்! நீ ஸ்டார்ட் பண்ணிக்கலாம்.''

வியப்புடன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்த டிரைவர் ஒரு குறும்புச் சிரிப்புடன் குபீரெனக் காரைக் கிளப்பினன்.

''என்ன, மிஸ்டர் நாச்! நீ ரொம்ப நாளா நம்ப ஹவுஸ் பக்கமே வரலே; என் மேலே கோவமா?'' என்று கொஞ்சலும் சிணுங்கலுமாக வினவினாள் ரோஸி.

லெகு அமர்த்தலாக 'சீட்'டில் சாய்ந்து ரோஸியின் முதுகுப் பக்கம் தன் கையை நீட்டிப் போட்டுக்கொண்ட நச்சி, ''நான் இன்னு சொல்றது போ, மிஸி! வேலே ரொம்ப ஜாஸ்தி. அப்படி இப்படி நவுற முடியலே'' என்று அலுத்துக் கொண்டவன் அவளைக் குனிந்து பார்த்து, ''ஆமாம்; இந்த நேரத்திலே நீ இப்படி எங்கே போயிட்டு வர்றே?'' என்று கேட்டான்.

''ஆர்மீனியன் ஸ்ட்ரீட்லே என் கஸின் சிஸ்டர் ஒருத்தி இருக்கிறள். அவளைப் போய்ப் பார்த்துட்டு வர்றேன்'' என்று சொன்ன ரோஸி சட்டென்று முகத்தைச் சுளித்துக் கொண்டு, ''ஓ.... எனக்கு இப்பத்தான் நினைப்பு வருது. மிஸ்டர் நாச், உன்கிட்டே ஒரு முக்கியமான மேட்டர் பேசணும். அது உன்னுேட ஃபிரண்ட் மிஸ்டர் நட்ஸ சபேசன் பத்தியது...'' என்றாள்.

''அந்த விஷயம்தானே? இப்ப அதுபத்தி ஒண்ணும் வாயைத் திறக்காதே! அப்புறமா கேட்டுக்கிறேன்'' என்று அடித்தொண்டையில் கரகரத்த நச்சி, காரின் சன்னல் வழியே எங்கோ வெறித்து நோக்கினன்.

டாக்ஸி டிரைவருக்குத் திடீரெனத் தும்மல் வந்து விட்டது. அவனுடைய பார்வை எதிரேயிருந்த 'ரியர் மிரர்'ரிலேயே பதித்திருந்தது.

''பார்த்து ஓட்டு வாத்தியாரே! வண்டியைக் கொண்டு போய் எங்கனாச்சும் வுடுக்கப் போறே!'' என்று எச்சரிப்பதுபோல் சொன்னன் நச்சி.

நுங்கம்பாக்கம் வில்லேஜ் ரோட்டில் டாக்ஸி விரைந்துகொண்டிருந்தது.

''மிஸ்டர் நாச்! நீ எங்கே இறங்கணும்? உன் பங்களா எந்தத் தெருவிலே இருக்குது?'' என்று மிகவும் அக்கறையாக வினவினள்.

''இங்கேதான் கண்ணு! அதோ, அந்த டர்னிங்கிலே இறங்கிக்கிறேன்......'' என்று தடுமாற்றத்துடன் பதிலிறுத்தான் நச்சி.

அவனுடைய தோளில் உராய்ந்தபடி சாய்ந்து, ''டியர்! எனக்கு ரொம்ப நாளாவே உன் ஹவுஸையும், உன்னுேட மம்மியையும் பார்க்கணுமின்னு ஆசை; இன்னிக்கு என்னே அழைச்சுக்கிட்டுப் போறயா?'' என்றள் ரோஸி கொஞ்சலும் குழைவுமாக.

நச்சி இதைக் கேட்டுத் திடுக்குற்றவன் போல் விழித்தான். உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''அதுக்கு இன்னு, பார்த்தாப் போவுது!'' என்று அலட்சியமாகச் சொன்னவன், ''ஆனு, இன்னிக்கு வாணும். இன்னொருநாள் அழைச்சுக்கிட்டுப்போறேன்'' என்றன்.

ரோஸியின் முகம் வாடியது. ''வொய்? இப்பவே போனுல் என்னவாம்?''

''போவலாம். என் மம்மி இந்த நேரத்திலே பங்களாவில் இருக்காதே!....''

''பின்னே போன் பண்ணி உன்னே வரச் சொன்னதா முந்தி சொன்னியே?''

''ஓ, அதுவா?.... காலம்பற போன் பண்ணிச்சு; நான் இப்பத்தானே போறேன்!''

''ஐ ஸீ......'' என்று தலையாட்டிக் கொண்ட ரோஸி, ''ஆமாம்; இப்ப ஏன் உன் மதர் வீட்டிலே இருக்கமாட்டான்னு சொல்றே?'' என்று கேட்டாள். (தொடரும்)

**18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாகதயாரிக்கப்பட்ட**



# ஆயுர்வேதிக்

## பேஸ்ட்டும்,பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல்முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரடண்டி' (பேஸ்ட்டும்,பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளினும் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடண்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







**VICCO LABORATORIES** DADAR T.T., BOMBAY 14.

"டாக்டரையா!"

"..............."

"டாக்டரையா!" சுரத்தற்ற பலஹீனமான அச்சம் நிறைந்த அந்த அவசரக் குரல் மறுபடியும், மறுபடியும் கெஞ்சுவதுபோல் வாசல்புறமிருந்து உள்ளே பாய்ந்தது.

"யாரது?" உள்ளிருந்து ஓர் அதிகாரமான பெண் குரல் கொடூரத் தொனியில் வினவியது.

"நான்தானுங்க, சம்பங்கி! என் மகளுக்கு இழுப்பு வந்திடுச்சம்மா. டாக்டரைச் சீக்கிரம் பார்க்கணும்மா!" தன் அவசரம், வேதனை முதலிய உணர்ச்சிகளை அந்தந்த பாவத்தில்கூட வெளியிடாமல் விநயத்தில் தோய்த்து வைத்தான்.

உள்ளே வேகமாகக் கிறீச்சிட்டுக் கொண்டிருந்த ஊஞ்சல் சங்கிலிகள் தட்டென்று நின்றன. டாக்டரின் மனைவி ஜானகி ஆக்ரோஷமாக எழுந்த வேகத்தில் ஊஞ்சல் பலகை குறுக்கும், நெடுக்கும் ஆடி ஓய்ந்தது. கழுத்திலும், காதிலும் வைரங்கள் டாலடிக்கப் பட்டுப் புடவை சரசரக்க வந்தவள் சம்பங்கியை உறுத்துப் பார்த்தாள். அவள் முகத்தில் ஏளனமும், ஆத்திரமும் மாறி மாறித் தோன்றின. சம்பங்கியின் உடல் கூனிக் குறுகியது.

"இங்கே வராதேன்னு சொன்னேனில்லையா? நினைத்த போதெல்லாம் உன் அவசரத்துக்கு டாக்டர் ஓடி வரணுமா? மருந்து மாயம்னு மறுபடியும் வந்து நிற்காதேன்னு போன தரமே சொன்னேனே. பாக்கி தர வேண்டியது நாற்பது ரூபாய் போல் இருக்கு. கொடுக்கிற ஞாபகமே காணோம். உன்னாலேயே எவ்வளவு பணம் நஷ்டம்? வெட்கமில்லாமே டாக்டரைக் கூப்பிட வந்துட்டே. போ, போ. பணத்தைத் தீர்த்தால்தான் டாக்டர் வர முடியும்."

"அம்மா! நீங்க அப்படிச் சொல்லக் கூடாது. தயவு பண்ணுங்கம்மா. இந்த

# உயிர் நஷ்டம்

கோமகள்

ஒருதரம் மன்னிச்சுடுங்கம்மா. ஒரு வாரத்திலே பணத்தை யெல்லாம் கொடுத்துடறேனம்மா. டாக்டரையாவிட்டே தெரியலீக்கம்மா. வேறே சிக்காளுக்கு இங்கேயே கொண்டு வந்திருப்பேன். இழுப்பு வந்து கிடக்கிறான் அம்மா!'' உணர்ச்சித் துடிப்பில் சொற்கள் குழறின.

''ஒரு வாரம் கழித்துத் தரப் போறியா? அப்போ பணம் வந்தாற்போலத்தான். உங்களுக்கெல்லாம் ஓசி வைத்தியம் பண்ண இது தர்ம ஆஸ்பத்திரி இல்லே. போ, போ, இங்கே நிற்காதே.''

''அம்மா! தயவு பண்ணுங்கம்மா. ஒரே பிள்ளையம்மா அவன். எனக்கு வேறே நாதியில்லேம்மா.'' பாசப் போராட்டத்தில் சிக்கித் தவிக்கும் அவன் குரலில் வழிந்த வேதனை ஞானவிக்குப் புரியவில்லை.

அவள் கோபமாகக் கத்தினாள், ''அதெல்லாம் ஒன்றும் நாடகமாடாதே. போ என்றால் போ. ஏமாற்ற நினைக்கிறாயா? இனி உன்னுடைய ஜம்பம் செல்லாது.''

''ஞானவி!'' உள்ளிருந்து வந்த கடுமையான குரல் டாக்டர் சஞ்சீவியுடையதுதான்.

அந்தக் குரல் தேனாகச் சம்பங்கியின் இதயத்துள் பாய்ந்தது. எதிரே நின்ற ஞானவியிடம் கொண்ட பயத்தைக் காட்டிலும் பாசம் பெரிதில்லையா? அந்தத் துடிப்பின் வெற்றிக் குரலாக, ''டாக்டரையா! சீக்கிரமா வந்து எம் மகனைப் பாருங்கய்யா. இம்மா நேரம் என்ன ஆச்சுதோ? நீங்கதானையா தெய்வம் மாதிரி. வந்து பாருங்கய்யா'' என்று தன் சக்தியையெல்லாம் திரட்டி ஓலக் குரல் பரப்பினான்.

''ஒன்றும் பயப்படாதே, சம்பங்கி! இதோ ஒரு நிமிடத்தில் வரேன்'' என்ற அபயக் குரல் கேட்டுச் சம்பங்கி மகிழ்ந்தபோது ஞானவி விருட்டென்று உள்ளே தாவினாள்.

''என்ன இது?'' ஞானவி கோபமாகப் படபடத்தாள். ''நான் அவனிடம் வர முடியாது என்கிறேன். நீங்கள் என்னை மீறிப் புறப்படுவது எந்த நியாயத்தில் சேர்ந்தது?''

''என்னுடைய கடமையைச் செய்ய உன்னைக் கேட்பானேன்? நீ உன் கடமையைச் செய்துகொண்டு பேசாமல் இரு. என் விஷயத்திலெல்லாம் வீணாகத் தலையிடாதே என்று எத்தனை முறை சொல்கிறேன்? உம்! தாமதமாகிறது. உன்னிடம் வந்து பேசிக்கொள்கிறேன். புறப்படு சம்பங்கி!'' வெளுப்பான உடைகள் அணிந்து, ஸ்டெதாஸ்கோப், மருந்துப் பெட்டி சகிதம் டாக்டர் சஞ்சீவி வாசற்படி தாண்டினார்.

சம்பங்கியின் கண்கள் நன்றி உணர்வால் பொங்கித் ததும்பின. கடவுளே டாக்டரின் உருவத்தில் தன்னை நாடி வந்து உதவுவதாக எண்ணி அவர் கையிலிருந்த மருந்துப் பெட்டியை வாங்கிக் கொண்டு வெகு வேகமாக நடந்தான்.

ஆத்திரத்தில் முகவாயைத் தோளில் இடித்துக்கொண்டாள் ஞானவி. அப்போது, ''ஸார்!'' என்றவாறே உள்ளே வந்த நோயாளியை வரவேற்று உபசரித்தாள். ''உட்காருங்கப்பா! டாக்டர் இதோ வந்து விடுவார். காத்தாலே பிடித்து அவருக்கு ஓய்வில்லே. வந்துகொண்டே யிருக்காங்களே தவிர ஒருத்தராவது இந்தா ஒரு பத்து ரூபாய்னு தந்தாங்களா? எல்லாம் ஓசியில்தான். நீங்க பாருங்க, வந்தா அஞ்சோ, பத்தோ தராமல் போவதில்லே. மத்தப்பேருக்கு அது தெரியறதா? எத்தனை ரூபாய் செலவழிச்சு டாக்டருக்குப் படிச்சு வர்றாங்க. பொழைப்புக்குன்னு இல்லேன்னாலும், உழைப்புக்குத் தகுந்த கூலி வேண்டாமா?'' என்று காரிய உருவத்தில் பேசிவிட்டு உள்ளே போனாள்.

ஞானவியைப் பற்றி அந்த ஊரில் தெரியாத பேரில்லை. டாக்டர் சஞ்சீவியின் ஒவ்வொரு துடிப்பும் கருணை, அன்பு, இரக்கம் ஆகியவற்றால் உருவானதென்றால், அவர் மனைவி ஞானவியின் உணர்வோ பணப்பற்றுக் கொண்டது. எந்தத் தொழிலுமே வாய்ப்புக்கு விலை உண்டென்றாலும், அந்தப் பாவையின் குறிக்கோளே பணத்தை அடிப்படையாகக் கொண்டதுதான் என்பது அவள் சித்தாந்தம். டாக்டர் சஞ்சீவியின் அன்பு மிக்க அறிவுரைகளையோ, புத்திமதிகளையோ ஒருபோதும் ஏற்றுக்கொண்டதில்லை.

இன்று சம்பங்கிக்காக அவள் எதிரிலேயே, அவள் மறுக்கும்போதே ஒருசிறிதும் பொருட்படுத்தாமல் டாக்டர் சஞ்சீவி கிளம்பிவிட்டதில் ஞானவிக்கு ஒரே கோபம். 'வரட்டும் அவர், என்னை எப்படித்தான் அவமானப் படுத்திவிட்டார். ஓசி வைத்தியம் பண்ணுகிறாராம். ஒரே ஒரு பிள்ளை கருவேப்பிலைக் கொழுந்து மாதிரி யிருக்கிறான். நாளைக்கு அவன் சுகமாக வாழ நாலு காசு சேர்த்து வைக்க வேண்டாமா?' என்றெல்லாம் குமுறிக் கொண்டிருந்தபோதே, ''அம்மா!'' என்று தயங்கிய குரல் ஒன்று கேட்டது.

''என்னடா ரவி?'' என்று பாசம் மீதுற மகனைத் தன்னிடம் இழுத்து அவன் முகத்தை நோக்கிச் சிரித்தாள் ஞானவி.

''அம்மா! நான் மாந்தோப்புக்கு விளையாடப் போறேனம்மா. பண்ணையார் மகன் பாலன் கூப்பிடுறானம்மா'' என்றான் சிறுவன்.

பண்ணையார் மகன் என்றதுமே ஞானவி மகிழ்ந்து விட்டாள். பணக்கார வீட்டுப் பையன் என்பது மட்டுமல்ல காரணம். வீட்டில் யாருக்காவது தலைவலி என்றாலும் கூட டாக்டர் சஞ்சீவிக்கு அவர் தரும் 'பீஸ்' தான் நினைவில் வந்தது. ''சரிடா கண்ணு! மாமரத்திலே ஏறாமே, ஜோரா விளையாடிட்டுச் சுருக்க வந்துவிடு'' என்று அவள் அனுமதித்ததுமே, விடுபட்ட கன்றாகத் துள்ளி ஓடினான் சிறுவன்.

குடிசைக்குள் அசைவற்றுக் கிடந்தான் சம்பங்கியின் மகன் குப்பன். வாயோரம் நுரை தள்ளி யிருந்தது. கைவிரல்களெல்லாம் இறுகப் பற்றிக் கொண்டும் வாட்டத்தில் விறைத்துக் கிடந்தன. டாக்டரின் கவனமான கண்ணோட்டம் நீண்டது. பரிசோதனைகள் தொடர்ந்தன. ஒப்புநோக்க முடியாத துயரக் கிளர்வில் தவித்தான் சம்பங்கி. குப்பனுக்கு டாக்டர் ஊசி போட்டுவிட்டுக் குடிசைக்கு வெளியே வந்து யோசனையோடு தூரப் பார்த்தார்.

பின்னோடே பையை எடுத்துவந்த சம்பங்கி, ''டாக்டரையா...!'' என்று அச்சக் குரல் அடைக்க நின்றான்.

டாக்டர் மெல்லிய குரலில் கவலையாகக் கூறினார். ''இப்போதெல்லாம் அடிக்கடி இப்படி வர ஆரம்பித்து விட்டதல்லவா?



"ஏன் காதலர்கள் கடற்கரையிலே காதல் புரிகிறார்கள்?"

"கரையிலே காதல்! இல்லாவிடில் கடலிலே சாதல்!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அதிலும் இன்று மிகத் தாமதமாகி விட்டது. சம்பங்கி! பிராப்தப்படி நடக்கட்டும். எதற்கும் நீ மன உறுதி தளராதே...''

''ஐயோ! டாக்டரையா! உங்க வாயாலே நீங்களே இப்படிச் சொல்லிட்டீங்கன்னு, ஏழை நான் என்ன பண்ணுவேன்? எப்படியாவது எம் மகனைக் காப்பாத்திடுங்கன்னு, இந்த தர்மத்தையே உங்களுக்குக் கொடுத்து என் கடனைத் தீர்த்துடறேன் டாக்டரையா. என் கையிலே உங்களுக்குத் தரக் கூடப் பணமில்லே ஐயா...''

''உஸ்! இதென்ன சம்பங்கி? நீ பணம் தரவில்லை என்பதற்காக நான் தனியா ஒரு வைத்தியமா பண்ணறேன்? அதைப் பத்தி நீ கவலைப்படாதே. என் முழு முயற்சியும் பண்ணி உன்னுடைய மகனைக் குணப்படுத்தப் பார்க்கிறேன்.''

''நீங்கதான் டாக்டரையா நான் பார்த்த தெய்வம்! உங்க மனசைப் பத்தி எனக்குத் தெரியுமய்யா. ஆனாலும் இனாம் வைத்தியம் செய்துக்கிட்டா சீக்குப் போகாதுன்னு ஓர் ஐதிகம் உண்டுங்க. எப்படியும் பொன் வைக்கிற இடத்திலே பூ வைக்கிற மாதிரி ஓர் அஞ்சோ, பத்தோ உழைச்சு உங்களுக்குத் தந்துடுவேங்க.''

''உம்! இப்போது நீ எதற்கும் அலட்டிக் காதே. ஓர் ஊசி போட்டிருக்கேனில்லையா? சரியாக இரண்டு மணி நேரம் கழித்து வீட்டுக்கு வந்து ஞாபகப்படுத்து. இன்னோர் ஊசி போடணும். ஞானமி ஏதேனும் சொல்லிட்டுப் போகட்டும். நீ பயப்படாதே. முன் அறையில்தான் இருப்பேன். ஓங்கிக் குரல் கொடு....சரியாக இரண்டு மணி நேரம் கழித்து....''

''சரிங்க ஐயா. இப்போ பையனை வீடுவரையில் கொண்டு கொடுத்துவிட்டு வரேன்.''

''அதெல்லாம் வேண்டாம். நீ பையன் அருகிலேயே இரு. விழிப்பு வந்ததும் கடுமையான தலைவலி வரும்... வீட்டுக்கு மட்டும் வந்துடு. அப்புறம் ஒருவேளை நான் மறந்து போவேனோ என்றுதான் வரச் சொல்றேன்.''

''சரிங்க டாக்டரையா! இந்த ஏழையாலே உங்களுக்கு எத்தனை சிரமம்? உங்க நல்ல மனசுக்குத் தெய்வம் நிறைய அருள் தருங்க.'' கைகூப்பி நின்ற சம்பங்கியின் கண் விளிம்பில் நீர் நிறைந்து மறைந்தது.

சம்பங்கி குடிசைக்குள் வந்தாள். மரமாக விறைத்துக் கிடந்த அன்பு மகனைக் கண்டதும் மனத்துள் பீறிட்ட விம்மல் வெடித்துச் சிதறியது. நிமிடங்கள் கரையக் கரையக் குப்பனின் வாயில் நுரை தள்ளுவது நின்றது. கைகால்களின் விறைப்புக் குறைந்து மிருதுத் தன்மை கூடியது. கண்கள் படபடத்து முகம் சுருங்கி விரிந்தது. மெல்லக் கண்கள் திறந்து அவன் சுற்றுமுற்றும் நோக்கினான். 'தாகம்' என்று ஜாடை காட்டினான். ஓர் அலுமினிய டம்ளரால் கொஞ்சம் தண்ணீரை அவன் வாயில் ஊற்றியவாறே, ''எப்படிடா இருக்கு என் கண்ணு!'' என்றாள் சம்பங்கி.

''உம்'' என்று தலையசைத்தவன் ''தலை வலிக்குதப்பா!'' என்று அசதியோடு கண்களை மூடிக் கொண்டான்.

''டாக்டரையா சொன்னபடியே தலை வலிக்குதாங்களே. அந்த மவராசன் கைராசி எம் மவன் பொழைச்சுக்குவான்'' என்று நம்பிக்கையோடு முணுமுணுத்துக் கொண்டாள் பெற்றவள்.

நேரம் கழிந்தது. குப்பன் தலைவலியால் துடிதுடித்தவாறே மிதித்த நாராய்ப் படுத்துக் கிடந்தான். கைக்கடிகாரம் வைத்திருந்த மூன்றாம் குடிசை வேலனிடம் சம்பங்கி மணியைத் தெரிந்து கொண்டாள். டாக்டர் குப்பனுக்கு ஊசி போட்டபோது மணி ஒன்பதரை. இப்போது மணி பதினொன்றாகிவிட்டிருந்தது. இப்போது கிளம்பினால் டாக்டரை அழைத்து வர நேரம் சரியாக இருக்கும். சம்பங்கி துண்டை உதறித் தோளில் போட்டவாறே டாக்டர் வீடு நோக்கி நடந்தாள்.

சட்டென்று அதுவரையில் இல்லாத திகில் அவள் மனத்தில் மூண்டது. ஏதோ ஒன்று நிகழப் போவதாக உள்ளுணர்வு பலத்த எச்சரிக்கை செய்தது. ஆயினும் என்ன செய்வதென்று புரியாத போராட்டமாக இருந்தது. 'இது என்ன உணர்வு? குப்பனுக்கு ஏதேனும் ஆகிவிடுமோ? பிராப்தப்படி நடக்கட்டும். நீ மனவுறுதி தளராதேன்னாரே. ஐயோ, தெய்வமே! அப்படி ஏதேனும் நடக்கவிட்டுடாதே. அப்படியெல்லாம் இருக்காது. டாக்டரையா வந்து இன்னோர் ஊசி போட்டா எம்மவன் குப்பன் பொழைச்சிக்கிடுவான். அவர் கைராசி பலிக்கும். எம்புட்டு நல்லவர் அவர்! அவர் சம்சாரம்தான் ஒருமாதிரி. இருந்தாலும் பணத்து மேலே யாருக்குத்தான் ஆசையில்லே? எத்தினி நான்தான் பண நஷ்டத்துக்கு வைத்தியம் பண்ண அத்தம்மா ஒப்புவாங்க? அந்த அம்மாவையும் மீறிக்கிட்டு டாக்டரையாவின் தரும குணம் இந்த ஏழைக்கு உபயோகமாகுது. இந்தக் கடனை எப்படியாவது அடைச்சுடுவேன்.' தனக்குத்தானே யோசனைகளும், தீர்ப்புக்

# ஏரோப்ளை காண்க்ரீட் ஷட்டரிங் ப்ளைவுட்



அமைக்கும்
வேலைகளை
எளிதாக்கவும்
சிக்கனப்படுத்தவும்
செய்கிறது

வேண்டிய அளவுகளில் கிடைக்கும்.
F.R.I. டெராடூன், பரீக்ஷணம் செய்தவை

தயாரிப்பவர்கள்
வுட்கிரா:ப்ட்ஸ்
அஸ்ஸாம்
ப்ரொப்: ஜெய் ஸ்ரீ டீ
& இண்டஸ்ட்ரீஸ் லிமிட்.
இந்தியா எக்ஸ்சேஞ்ச்,
கல்கத்தா-1






ஏஜெண்டு: வி. நாதமுனி செட்டி & கோ., 11. காசி செட்டி லேன், சென்னை

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

## பசியைத் தூண்டுகிறது அது




அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

KS-6-7 TAM

---

# ஜாம்-பக்

சரும உபாதைகளுக்கான களிம்பு.




சரும காயங்கள், கொப்புளங்கள், ஒட்டுவாரொட்டிகள் ஆகியவற்றுக்கு இதமான ஜாம்-பக் நிச்சயம் குணமளிக்கிறது. அதி கவனமுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட மருந்து மூலிகைகளாலான சருமக்களிம்புதான் ஜாம்-பக் மிருகக் கொழுப்பு சேராதது.

விரைவாக, பத்திரமாக, நிச்சயமாகச் சரும உபாதைகளைக் களைய... நீங்கள் நம்பக்கூடியது ஜாம்-பக்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் பலசரக்குக் கடைகளிலும் விற்கப்படுகிறது.

ஸி.இ. ஃபுல்ஃபோர்ட் (இந்தியா) லிட்.

SHBI-FZ-4 TAM

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : மெஸர்ஸ் மேரு & கம்பெனி, தபால் பெட்டி 1903, சென்னை

களுமாய்ச் சென்றுகொண்டிருந்த சம்பங்கி நினைவின் துண்டிப்பில் நின்றான்.

தெரு மூலை திரும்பும்போதே டாக்டர் வீட்டில் ஏகக் கூட்டம் நிறைந்து வழிந்தது. அவன் மனம் பகீரென்றது. டாக்டருக்கு ஏதேனும்?... அல்லது அவர் மனைவிக்கு...? அவன் கால்கள் பதறியவாறே முழு வேகத்தில் இயங்கின. வீட்டினுள்ளிருந்து ஜானகியின் கூக்குரல் அழுகை ஓலமாகக் கேட்டது. கூட்டத்தில் முண்டியடித்து முன்னேறிய சம்பங்கி விஷயங்களைக் கிரகித்துக்கொள்ளவும் தவறவில்லை. டாக்டரின்மகன் ரவியைப் பாம்பு கடித்து விட்டது. டாக்டர் வீட்டில் இல்லை!

தொய்ந்துபோன கொடியாகக் கிடந்தான் பையன். அவன் பால் வடியும் முகம் சலனமற்றுக் கிடந்தது. வாயோரம் நுரை தள்ளியிருந்தது. சம்பங்கியின் மேனியெல்லாம் சிலிர்த்துக் கொதித்தது. அந்த நிலையில் அப்பாலகனைக் காண அவன் நெஞ்சு பொருமித் துடித்தது. பாசத் துடிப்பில் நெருப்பாய்த் தவித்துக் கதறிய ஜானகியருகே சென்ற சம்பங்கி, "ஒத்துங்கம்மா!" என்றவாறே ரவியின் கடிபட்ட இடத்தில் இடுப்பிலிருந்த பேனாக் கத்தியின் கூரிய முனையால் மெல்லக் கீறினான்.

காலையில் அவனிடம் வீம்பும் விறைப்புமாகக் கோபித்த ஜானகி திகிலோடும், திகைப்போடும், அவன் செய்யப் போகும் அநுசரணையான எந்த உதவிக்கும் ஆமோதிக்கும் நிலையில் அமர்ந்திருந்தாள். யாருக்கும் தோன்றாத, அல்லது செய்யத் துணியாத காரியத்தை அவன் செய்யத் துணிந்து விட்டான். மணிக் கயிற்றால் கடிவாயருகே கட்டுப்போட்டுவிட்டு, கடிவாயில் உதட்டைக் குவித்து, வாயால் உறிஞ்சி, உறிஞ்சி உமிழ்ந்தான். யாரும் சற்றும் எதிர்பாராத நிலையில் பையனின் உடம்பின் குளிர்ச்சி கொஞ்சம் குறைந்து சூடு பரவி வருவது தெரிந்தது. கொஞ்ச நேரத்திலேயே சம்பங்கி களைத்துச் சளைத்து விட்டான். ரவியின் உடலில் நல்ல சூடு பரவி உடம்பு வியர்த்தது. அவன் கண்களும் மெல்லப் படபடத்துத் திறந்தன.

கண் விளிம்பின் நீரும், கலவரம் தந்த களைப்பும் கொஞ்சம் விலகிய பின் ஜானகியின் இதயத்தில் ஒரு மெதுவான உரசல் ஏற்பட்டது. யாரையும் தனக்குச் சரியாக மதிக்காத பாவமும், தனக்கு நிகராக அங்கீகரிக்காத மமதையும் கொண்டிருந்த அவளது போலிக் கர்வம் ஒடுங்கிவிட்டது. வெளிச்சம் புகா மனத்தில் புறக்கணிக்கப்பட்டவனின் அன்பும் கனிவும் உறைத்துச் சிலிர்த்தன. இதோ எதிரில் அவள் மகன் உயிரை மீட்கச் சற்றும் தயங்காமல் விஷ இரத்தத்தை உறிஞ்சித் துப்பும் சம்பங்கியல்லவா ஒரு மனிதன்? இத்தனை நாட்களும் கொடூரம் படர்ந்த மனம் பாகாக உருகி நின்றது.

கூட்டத்தில் 'கசமுச'வென்ற பேச்சுச் சத்தம் கேட்டது.

"டாக்டர் வரார், டாக்டர் வர்ரார்" என்னும் குரல்கள். அவரிடம் யாரோ போய் விஷயத்தைச் சொல்லி அழைத்து வந்திருக்க வேண்டும். அவர் பரபரப்பாக உள்ளே வந்தவர் பையனின் நாடித் துடிப்பைக் கவனித்து அவசரமாக உள்ளே ஓடிப் போய் ஏதோ ஒரு மருந்தை எடுத்து வாயில் போட்டார்.

"டாக்டரையா பையனுக்கு ஒன்றும் ஆகாதே?" என்று விசாரித்தான் சம்பங்கி.

"சம்பங்கி தெய்வம் போல நீ வந்து உதவியிருக்கேப்பா. இனிமேல் பையனுக்கு ஓர் ஆபத்துமில்லை" என்றார் நன்றியோடு.

"இந்தமட்டும் சம்பங்கி உதவினான். அவன் இல்லாவிட்டால் இந்த நேரம் நம்ப ரவிக்கு என்ன ஆகியிருக்குமோ?" என்றாள் ஜானகி.

"சம்பங்கி, நீ செய்த உதவி கோடி பெறும். உம்! இன்னொன்றாயிற்றே! உன் மகனுக்கு ஊசி போட்டுவிட்டுத்தான் வருகிறேன். இனி பயமில்லை சம்பங்கி..."

"நீங்கள்தான் தெய்வம் ஆச்சுதே ஐயா! உங்களுக்கு என்னால் இந்த மட்டும் உதவ முடிந்ததே அது போதும்!" என்று கைகூப்ப முயன்று கீழே சரிந்து விழுந்தான் சம்பங்கி.

"ஐயோ! அவனுக்கு என்ன வந்துவிட்டது? பாருங்களேன்." அலறினாள் ஜானகி.

டாக்டர் சஞ்சீவி சட்டென அவன் கைகளைப் பற்றி நாடியைப் பார்த்தவாறே, "உன் வாயில் புண் இருக்கிறதா சம்பங்கி?" என்று பதறியவாறு கேட்டார். 'ஆம்' என்பதுபோல் தலையசைத்தபோது அவர் திடுக்கிட்டார்.

"என்னப்பா இப்படிச் செய்யலாமா? வாயில் புண் இருக்கும்போது விஷத்தை உறிஞ்சித் துப்பலாமா?" என்று அவர் கூறியதை அவன் கேட்கும் தூரத்தில் இல்லை.

சம்பங்கியின் கண்கள் நிரந்தரமாக மூடிக் கொண்டன. உடலில் நீலம் பாரித்துவிட்டது.

"என்னங்க இது? ஒன்னுமே பண்ணாமல் இப்படி நிக்கறீங்களே..."

"என்ன பண்றது ஜானகி! நீ உன் வாழ்க்கையிலேயே ஓர் ஏழைக்கு இனாம் வைத்தியம் செய்யச் சொல்லலே. என் துரதிர்ஷ்டம் எதுவும் செய்ய முடியலையே. அவனால் நமக்குப் பண நஷ்டம், நஷ்டம்னு தடுப்பாயே, காலையிலேகூட அவன் பிள்ளைக்கு என்னை வைத்தியம் பார்க்கக் கூடாதின்னே. நீ எதுவும் சொல்லாமலே உன் பிள்ளை உயிரைக் காக்க அவன் தன் உயிரையே தந்திட்டான். அவனாலே உனக்குப் பண நஷ்டம். உன்னாலே அவனுக்கு உயிர் நஷ்டம். அவன் செய்திருக்கிறதுக்குப் பதிலாச் செய்ய வேறே ஜென்மம்தான் எடுக்கணும். ஐயோ சம்பங்கி! நீ எத்தனை பெரிய மனுஷன்டா! உன் மனசு யாருக்கப்பா வரும்? சோற்றுக்காகப் போராடும்போது நீ உயிரை விட விரும்பியதில்லை. அன்பையும், நன்றியையும் காட்டச் சந்தர்ப்பம் ஏற்பட்டபோது உயிரையே விட்டுவிட்டாயே! சொன்னபடி செய்திட்டாயே சம்பங்கி...." சுரம் பொங்கக் குழந்தை போல் கூவினார் டாக்டர் சஞ்சீவி.

"நான் சம்பங்கியை எப்படியெல்லாமோ பேசித் தூஷித்திருக்கிறேன். அவன் அதைப் பாராட்டாமல் தன் உயிரையே நம் ரவிக்காகக் கொடுத்து விட்டான். என்னையும் உணரும்படி செய்து விட்டுப் போய் விட்டான். இனி அவனுக்குச் செய்யக் கூடியதெல்லாம் ஒன்றுதான். குப்பியை அழைத்து வரச் சொல்லுங்கள்..... இனி அவள் நம்முடனேயே இருக்கட்டும்." ஜானகியின் குரலில் முன்பெல்லாம் ஊறிக் கிடக்கும் அகங்கார மமதை அழிந்து இரக்க பாவம் சுடர்விட்டது.

மூச்சந்தியை அடைந்ததும் கடிவாளத்தை வெட்டி இழுத்து, இடக்கே திரும்பினன், இச்சாமி. வண்டி பெரிய சாலையின் மேட்டில் ஏறும்போது ஒரு தடவை குலுங்கியது. குதிரை தலையை உதறி விட்டுக் கொண்டு பின்னும் பதுங்கியது. கடகடவென்ற சத்தத்தோடு ஜட்கா குலுங்கியது.

'உம்......உம்....இடக்கா பண்ணறே? உனக்கும் இன்னைக்கு என்ன கேடு வந்துடுச்சு?' என்று சவுக்கை எடுத்து ஓங்கினன். 'பளார் பளார்' என்று இடுப்புக் குதிரையின் பின்னங் கால்களில் நான்கு முறைகள் வேகமாக இறங்கிற்று சவுக்கு. வலுக் குறைந்த உடலிலும், உயிரையே கண்டி விடும் வலி. குதிரை முன்னே பாய்ந்தது. வண்டிக்காரனைவிட ஏழைக்குத்தானே அதிகக் கோபமும் ஆத்திரமும் வருகின்றன?

இச்சாமியின் உள்ளத்துக்குள் வெறுப்பும் வேதனையும் பொங்கிப் பிரவாகம் எடுத்துக் கொண்டிருந்தன. மணி ஒன்பது. இன்னும் காலை வேளை 'நாஸ்தா'வுக்கு வழியில்லை. வெற்று வண்டியைப் பந்தயம் விட்டுப் பார்க்க இதுவா நேரம்? பாயும் குதிரையை வெட்டியிழுத்து நிறுத்தினன். வேறு வழியின்றிக் குதிரை நின்று தொலைத்தது.

அடுத்த விநாடியே இச்சாமியின் நெஞ்சு குமைந்து, கருண்டு விழுந்து விட்டது. குதிரையின் எலும்பு முட்டிய முதுகைத் தடவித் தேய்த்து விட்டான். எட்டு வருஷங்களுக்கு முன்னே அதன் மீது அவன் ஆசை கொண்டு அதை வாங்கியபோது அதன் தோற்றம் எப்படி யிருந்தது என்று ஒரு தடவை நினைத்துப் பார்த்துக் கொண்டான். அந்தத் துடிப்பும் கம்பீரமும் நிறைந்த குதிரை இன்று எப்படிக் கூடு தட்டிப் போய் விட்டது? அவன் வாழ்வோடு ஒன்றிக் கலந்து அவனோடு அதுவும் உருக்குலைந்து போயிற்று.

''என் ராசா! இதுக்கெல்லாம் நானு காரணம்? உம்....மூணு நாளா உனக்குக்

# பிழைப்பு

கு. வேங்கடரமணி



கொன்னு இல்லே. காஞ்ச புல்லேத் தின்னுறே! என்கிட்டே வஞ்சனே இல்லே. காசும் இல்லே. வீட்டிலே புள்ளேங்களும் அவளும் வயிறு காஞ்சுதான் கெடக்காங்க. எனக்குக் கோவந்தான் வருது. யாரு மேலேயோ வர்ற கோவத்தை உங்க மேலே கொட்டி, அடிச்சுத் தொலைக்கிறேன்—''

தன் பேச்சுப் புரியாத ஜீவனிடம், வாய் விட்டுச் சொல்ல முடியாத வார்த்தைகளை மனசுக்குள் நினைப்பதன் மூலம் ஆறுதலாகச் சொல்லிக் கொண்டான் பிச்சாமி.

உலகம் மோசமாகி விட்டது அவனுக்குப் புரிந்தது. அவன் நெஞ்சில் இரக்கம் பெருகும் போதெல்லாம் அவனுக்கு நினைவு வருகின்றன. உடனே நெஞ்சில் வேதனை புரள்கிறது. வேதனை வெறுப்பாகி, வெறுப்பு ஆத்திரமாகப் பரிணாம வரிசையைப் பின்பற்றி மாறுகிறது. அந்த ஆத்திரத்தை அவனுக்கு வேண்டியவர்கள் — அவனுடைய வாழ்வில் பிரிக்க முடியாமல் பந்தம் கொண்டவர்கள்-ஏற்றுக் கொண்டு அநுபவிக்க வேண்டியிருந்தது.

பாசமும், அதன் மறுபக்கத்தில் வெறுப்பு மண்டிய ஆத்திரமுமாக வாழ்கிறவன் பிச்சாமி.

பின்னாலிருந்து ஒரு கார் ஒலியெழுப்பி விட்டு முன்னால் பாய்ந்தது. புழுதி அடங்கியதும் தொலைவில் பார்வையில் இருந்து நழுவி மறைய முயலும் அந்தக் காரைப் பார்த்தான். அவன் பார்வையை அப்படியே பிடுங்கிக் கொண்டு விட்டது அது.

நீல நிற வண்டி.

''நாசமாப் போகிற உலகம். இது நாசமாத் தான் போகப் போகுது: நான் என் கண்ணாலே பார்க்கத்தான் போகிறேன்.''

சீறிக் கொண்டிருந்தான் பிச்சாமி.

எத்தனை பளபளப்பான புதிய கார் !

''ஏ, ஜட்கா!''

பின்னாலிருந்து அழைப்புக் கேட்டது.

திரும்பிப் பார்த்தான் பிச்சாமி.

போலீஸ் ஏட்டு தொப்பியைக் கையில் பிடித்துக் கொண்டு நின்றார்.

'காலே நேரத்திலே வெறும் வயத்திலே அடிக்கப் புண்ணியவான் வந்து சேர்ந்தாரா?' என்ற நினைப்பு நெஞ்சுக்குள்ளேயே அழுந்திக் கனத்தது. ''என்னையா கூப்பிட்டீங்க ?'' என்று கேட்டான்.

''-ஆமாங்க தொரை! உங்களைத்தான்.''

ஏட்டையா சிரிப்பை அள்ளித் தெளித்தார்.

எத்தனை அலட்சியம்! குதிரை வண்டிக்காரன் காசுக்குப் பறக்கிறவன்தான். ஆனால் அவன் தானும் மனிதனாகப் பிறந்துவிட்ட பெருமையைக் கொண்டாடக் கூடாதா ? சட்டத்தைச் சரிந்து விழாமல் தாங்கி நிற்கும் உருவத்திடம் நியாயத்துக்கு உரிமை கொண்டாட முடியாது என்கிற பிரத்தியட்ச உண்மை பிச்சாமிக்குத் தெரியும். வாயைத் திறக்காமல் அவன் வண்டியைத் திருப்பினான்.

''இந்தக் கூடையைத் தூக்கி வை'' என்ற உத்தரவு வந்தது. பிச்சாமி அடிவாளத்தைப் போட்டுவிட்டு வந்து கூடையை வண்டியில் ஏற்றினான். ஏட்டும் பின்னால் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

''இன்ஸ்பெக்டர் வீட்டுக்குப் போ. சீக்கிரமா விடு. ரொம்ப நேரமாயிடுச்சு. என் மேலே காஞ்சு விழுவாரு'' என்று சொல்லி விட்டு நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டார் ஏட்டு.

பசித்த வயிற்றின் ஆத்திரத்தோடு, தண்ணீரை மட்டும் குடித்து வயிற்றை நிரப்பிக் கொண்டிருந்த குதிரையின் மீது சாட்டையைப் பாய்ச்சினான் பிச்சாமி.

'கட கட'வென்ற வெறி ஓட்டம். 'எனக்கும் உனக்கும் இந்த வெறி மட்டும் இல்லேன்னு, நாம 'ரெண்டு பேரும் எப்பவோ பசியிலே செத்துப் போயி புல்லுக்கூட முளைச்சிருக்கும்டா ராஜா!' என்று மானசீகமாய், தன்னுடைய அன்புக்குப் பாத்திரமான உயிரிடம் — ஆனால் பெரும்பாலும் ஆத்திரத்துடனேயே உறவாட முடிந்த அந்த வாயில்லாப் பிராணியிடம் — பேசினான் பிச்சாமி.

பதினைந்து நிமிட ஓட்டத்துக்குப் பிறகு, ''நிறுத்து, நிறுத்து. நீபாட்டுக்குப் பங்களா வாசல்லியே போய் நிக்காதே. அப்புறம், அதோட என்னைத் தூக்கி எந்த மூலைக்காவது அடிச்சுத் தொலைச்சுப்பிடுவான். டிப்டி வேறே இன்ஸ்பெக்டருக்கு வந்து தொலைஞ்சிருக்கான்'' என்று கத்தினார் ஏட்டு.

பிச்சாமி பத்து கஜத்துக்கு முன்னாலேயே வண்டியை நிறுத்தினான். ஏட்டு இறங்கி, தொப்பியை அணிந்து கொண்டு பெல்ட்டைச் சரிபண்ணிக் கொண்டார். ''உம், வா, போகலாம்'' என்று முன்னால் அவர் நடைபோட்டார்.

'என்ன மரியாதை!' என்று தனக்குள் நினைத்துக் கொண்டான் பிச்சாமி. அதில் அவனுக்குக் கொஞ்சம் மனத் திருப்தியும் ஆறுதலுங்கூட ஏற்பட்டன.

கூடையைப் பங்களாத் தாழ்வாரத்தில் வைத்தாகி விட்டது. பிச்சாமி தயங்கி நின்று ஏட்டையாவின் முகத்தைப் பார்த்தான். 'போகலாம்' என்ற குறிப்புக் காட்டியது அது.

பிச்சாமிக்கு அந்தச் சமயம் அந்த நீல நிறக் காரின் நினைப்பு வந்து தொலைத்தது.

''போகலாங்களா? பொழுது விடிஞ்சு இன்னும் மடக் குடிக்கலீங்க...'' என்று ஆத்திரத்தை முடிந்த அளவு குறைவாக மாற்றி இழுத்தான் அவன்.

''அட சரித்தான் அப்புறமாக் கொடுக்கிறேன். போடா.''

''பெரிசாக் கூலியா கேட்டேன்? இல்லாட்டி நீங்கதான் குடுத்துடப் போறீங்களா? ஏதோ ஒரு மக்கு....''

ஏட்டு ஜாடை காட்டி நகர்வதற்குள், ''என்ன மேன் சத்தம் அங்கே?'' என்று அதட்டும் குரலோடு இன்ஸ்பெக்டர் அங்கு வந்து சேர்ந்தார்.

பிச்சாமியின் மனசில் நீலக்காரின் நினைப்பு.

''ஒண்ணுமில்லீங்க. கடைத் தெருவிலே யிருந்து கூடையை ஏத்திக்கிட்டு வந்தேங்க.''

''இந்தா'' என்று கால்சட்டைப் பைக்குள் கையை விட்டார் இன்ஸ்பெக்டர்.

ஒரு ரூபாய் நோட்டு நீண்டது. கண் எதிரே பிச்சாமிக்கு ஒரே ஆச்சரியம். ஆனால் அவன் தயங்கவில்லை. ரூபாயை வாங்கிக்கொண்டு திரும்பினான்.

ஏட்டின் பார்வையில் தீக்கனைகள்.

"நாசமாய்ப் போகிற உலகம். நியாயத்துக்கு இடமில்லே. இது நாசமாத்தான் போகப் போகுது. நான் பார்க்கத்தான் போறேன்."

இச்சாமியின் குதிரை வண்டி முச்சந்தியை நோக்கித் திரும்பிற்று. கடிவாளத்தைத் தளர்விட்டுச் சாய்ந்துகொண்டான் இச்சாமி.

'நீ பிறரின் வயிற்றில் அடித்து, மற்றவரை மோசம் பண்ணிப் பிழைத்துப் போ. இல்லாவிட்டால் உன்னை ஏமாற்றிப் பிழைக்க எத்தனையோ பேர்கள்.' இந்தப் பாடத்தைத் தான் உலகம் அவனுக்குத் தினமும் சொல்லிக் கொடுக்கிறது. அப்படியும் இப்படியுமாகச் சாமர்த்தியமாகப் பிழைத்துப் பெரிய மனிதர்களாகிவிட்ட பலரை அவனுக்குத் தெரியும். ஏன், அவனுக்கும் அந்த மாதிரியான வழிகள் நன்றாகப்புரியும், அவன் அப்படிப்போகவில்லை. வெறும் வறட்டியான நேர்மை வாதம் அதற்குக் காரணமில்லை. உலகத்தின் மேலே அப்படி ஒரு வெறி நிறைந்த வேகம் இச்சாமிக்கு. பழி வாங்கும் கசப்பு நிறைந்த வெறி.

ஃ ஃ ஃ

பஸ் நிற்கும் முச்சந்திக்கும், ரயில்வே கேட்டுக்கும் நடுவில் மேலண்டைச் சாரியில் நாகமரத்தின் அடியில் வண்டியைக் கொண்டு போய் நிறுத்தினான் இச்சாமி. அது அவனுடைய வாடிக்கையான இடம். அங்கே வண்டியை நிறுத்திவிட்டு உலகத்தை வேடிக்கை பார்த்துத்தான் அவன் எளி நடப்பைப் புரிந்து கொண்டான். பக்கத்து மளிகைக் கடையில் வியாபாரம் ஓய்ந்த நேரங்களில் இள வட்டங்களின் பேச்சு எத்தனை காரத்தோடு நடக்கும்? சாலையின் மேலண்டைத் திடலில் எத்தனை பொதுக்கூட்டங்களைப் பார்த்திருக்கிறான் அவன்?

இச்சாமி மடியில் ஒரு ரூபாயை வைத்துக் கொண்டும் டீக்கடைப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. அவனுடைய வயிற்றுப் பசி நொடிக்கு நொடி பெருகி வளர்ந்து கொண்டே போய்க் கொண்டிருந்தபோதிலும் அவனை நம்பி நான்கு மனித உடல்கள் வீட்டில் சுருண்டு கிடக்கின்றன. இதோ வண்டியின் பிணைப்புண்ட நாற்கால் பிராணி ஒன்று, மூன்று கால்களில் நின்று தவம் செய்கிறது. அவனுடைய சம்பாத்தியத்தில் தனக்கும் பங்கு கேட்டு. பிறரை ஏமாற்றினால்—ஐந்து பசித்த வயிற்றுக்கு எதுவும் இல்லை என்று சொல்லும் மரத்துப்போன மனம் அவனுக்கு இருந்தால்—அவன் தன்னுடைய தற்போதைய பசியைத் துடைத்துக் கொள்ளலாம். மனி விருந்து உணர்ச்சியும் நேர்மையும் ஒழிய வேண்டும்.

நீல நிறக் காரின் நினைவு மீண்டும் அவனுக்குள் அலையடித்தது. 'நாசமாய்ப் போகிற உலகம்! உன்னை அழித்து ஒழிக்க இந்தக் இச்சாமிக்குத் துணிவு கிடையாது. ஆனால் இதோ அந்தத் துணிவைப் பெற்றுக் கொண்டு வருகிறேன், பார்.'



இச்சாமி குதிரையைத் தூண்டிவிட்டான். பனந்தோப்பை நோக்கி மெள்ளக் கடகடத்து நகர்ந்தது வண்டி.

இன்றையக் காலைப் பொழுதில் அவனுடைய உள்ளத்தில் வெறுப்பைத் தூண்டி விட்ட நீலக் காரை அன்று முதன் முதல் சந்தித்தது. மேலே மிதந்து வந்து சுழித்தது.

வீட்டை விட்டுக் கிளம்பி வந்துகொண்டிருந்தான் இச்சாமி. சாலையோடு ஓடிக் கொண்டிருந்த அவன் வண்டியை முந்திக் கொண்டு ஓடி வந்து நின்றது ஒரு நீல நிறக் கார்.

''ஏ ஜட்கா!'' என்று அழைத்தார் காரை ஓட்டிக் கொண்டு வந்தவர்.

வண்டியை நிறுத்தினான் இச்சாமி.

சுற்று முற்றும் பார்த்துவிட்டு அவர் கீழே இறங்கி வந்தார். அவருடைய கையில் ஒரு பை இருந்தது.

''இந்தாப்பா, இந்தப் பையை உன் வண்டியிலே எடுத்துக்கிட்டுப் போ. கடைத் தெருவைத் தாண்டிப் போய் நில்லு. நான் வந்து வாங்கிக்கறேன்'' என்று சொல்லிக் கொண்டே பையை வண்டிக்குள் பதுக்கி வைத்தார்.

ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து நீட்டி, ''இதை வைச்சுக்கோ'' என்று இச்சாமியிடம் கொடுத்துவிட்டு, அவன் பிரமையிலிருந்து மீள்வதற்குள் மறுபடியும் காரில் ஏறிக்கொண்டு போய் விட்டார்.

'என்ன உலகமடா இது!' என்று திகைப்போடு வண்டியின் வேகத்தை முடுக்கிவிட்டான் இச்சாமி.

போலீஸ் ஸ்டேஷனைத் தாண்டும் நேரத்தில் 'ஏ வண்டி நிறுத்து!'' என்று குறுக்கே மறித்தார் ஒரு போலீஸ்காரர்.

இச்சாமி பயப்படவில்லை. 'உலகம் போகிற போக்கை' வேடிக்கை பார்க்கும் ஆவல்தான் அவனிடம் ஓங்கியிருந்தது.

சோதனை நடந்தது. பை நிறைய வெளிநாட்டு மது.

அப்புறம் வாக்குமூலம்; வழக்கு; நீலக் காரின் சொந்தக்காரரான பெரிய மனிதரின் ஆட்கள் அவனை வந்து பார்த்தார்கள். தப்பி வருவதற்கு வழியையும் அவர்களே சொல்லிக் கொடுத்தார்கள். 'எப்படியும் பையை யார் வைத்தது என்று அடையாளம் காட்டி விடாதே. மற்றதை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்' என்று எச்சரிக்கையும் செய்து விட்டுப் போனார்கள்.

ஃ ஃ ஃ

வழக்கு முடிந்தது. அபராதத்தை யாரோ கட்டியிருக்க வேண்டும். இச்சாமி வெளியே வந்தான். அவனுக்கு நூறு ரூபாய் சன்மானம் காத்துக் கொண்டிருந்தது. ஆனால் இச்சாமி திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அதை வாங்கிக் கொள்ள அவனுக்குப் பயம்.

தன்னுடைய ஒரே உரிமை அதனால் பறி போய்விடும் என்றுதான் அவன் நினைத்தான். உலகத்து அநியாயங்களைப் பற்றிப் பேசும் தன்னுடைய உரிமையை விலைக்கு விற்று விடக் இச்சாமி விரும்பவில்லை.

அப்புறம் அந்தப் பெரிய மனிதரை எவ்வளவு இடங்களில் அவன் பார்த்துவிட்டான்? ஊரில் அவருக்கு எத்தனை மரியாதையும் கௌரவமும் கிடைக்கின்றன? அவர் மாலை போடுவதையும், மாலை போட்டுக் கொள்வதையும் பலதடவைகள் இச்சாமி மேடையிலே பார்த்து விட்டான்.

'சே! என்ன உலகம்! இது நாசமாகத்தான் போக வேண்டும்.'

ஃ ஃ ஃ

இச்சாமியின் ஜட்கா மறுபடியும் வாடிக்கையான இடத்துக்கு வந்தது. அலட்சியமாக உட்கார்ந்து ஓட்டிக்கொண்டு வந்த இச்சாமிக்குப் பாதி உணர்வுதான் இருந்தது. நேர்மை வெறியாக மாறிவிட்டது. உணர்ச்சியும் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து தொலைந்தது.

'நான் பழைய இச்சாமி இல்லேடா, ராஜா!' என்று குதிரையின் முதுகில் தட்டினான் அவன். பசி மறந்து, மரத்துப் போய் விட்டது. 'ஏதாவது செய்' என்று அவன் உடல் துடித்துக் கொண்டேயிருந்தது.

அதோ நீல நிறக் கார்!

'...நாசமாய்ப் போகிற உலகம்...' இச்சாமி குமுறினான்.

சாட்டையை எடுத்துச் சுரீரென்று அதன் மீது வீசினான்.

அந்தக் கார் முச்சந்தியில் வேகம் குறைந்து திரும்பி, மறுபடியும் பாய்ந்துகொண்டு எதிரே வந்தது.

இரண்டாவது முறை சாட்டையை ஓங்கி, வண்டியை நடுச் சாலையை நோக்கி வெட்டி இழுத்துத் திருப்பினான் இச்சாமி.

குடல் தெறிக்கக் குதிரை முன்னால் துள்ளிப் பாய்ந்தது. இச்சாமிக்குச் சில விநாடிகள் வரையில்தான் நினைவு இருந்தது.

கண்களைத் திறக்கும்போது ஒரே கூட்டம். முதுகிலும், தோள்பட்டைகளிலும், தலையிலும் ஒரே குடைச்சல், வலி. ஆனால் மயக்கம் நீங்கித் தெளிந்த நிலையில் அவன் நன்றாக உணர்ந்தான். கையை ஊன்றி நிமிர்ந்து எட்டிப் பார்த்தான். நொறுங்கிய வண்டி, குடைசாய்ந்து கவிழ்ந்த கார், உயிருக்குத் துடிக்கும் அவனுடைய ராசா...

எல்லாம் நாசம்.

பனந்தோப்புக்குப் போய்விட்டு வந்தது நினைப்பு வந்தது அவனுக்கு. அந்தப் போதை இப்போது தெளிந்துவிட்டது. வாழ்வில் ஒரே முறை திருட்டுத்தனமாய் ருசி பார்த்த பனங்கள்ளின் மயக்கம் விலகிவிட்டது.

இச்சாமி மட்டும் பிழைத்துக்கொண்டான். இனிமேல் பிழைப்புக்கு என்ன வழி என்ற கவலை வந்ததும் அவன் சுருண்டு விழுந்து விட்டான்.

'நாசமாய்ப் போகிற உலகம். இத்தனையும் போச்சே, அதோடு நானும் நாசமாய்ப் போயிருக்கக் கூடாதா?'

இச்சாமியின் சோர்ந்த மனம் அழுதது.

# வட்ட மேஜை

## கண் துடைப்பு!

தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் அமுலுக்கு வந்ததால் வேலையிழந்த பொன் தொழிலாளர்களுக்கு மாற்றுத் தொழில் செய்யவும், சிறு வகை வியாபாரங்கள் நடத்தவும் அரசாங்கம் கடனுதவி அளித்து வருகிறது. தொழிலாளர்கள் தனிப்பட்ட முறையிலும் கூட்டுறவு அடிப்படையிலும் இந்த உதவி பெற்று வருகிறார்கள். அந்த அளவில் வேலை இழந்த பொன் தொழிலாளிகளால் நிறுவப்பட்ட எங்களது கூட்டுறவுச் சங்கத்துக்கும் 7500 ரூபாய் கடன் கிடைத்தது. ஆனால் கடன் கொடுப்பதிலும் சில உள் கருத்துக்கள் இருப்பதை அறிய முடிந்த நாங்கள் அந்தப் பணத்தில் எவ்விதத் தொழிலும் இந்நாள் வரை ஆரம்பிக்காமல் இருந்துவிட்டோம்.

பொன் தொழிலாளர்களின் கூட்டுறவுச் சங்கங்களில் பங்கு எடுத்துக் கொள்ளும் தொழிலாளர்களின் பொன் வேலை செய்வதற்கான சர்டிபிகேட் பாதுகாப்புச் சட்டப்படி ரத்து செய்யப்படுமாம். (டி. ஐ. ஆர். 126 எச். எச்.)

எங்களுக்குக் கிடைத்த ரூபாய் 7500 ஐக்கொண்டு ஆரம்பிக்கும் எந்தத் தொழிலிலும் எல்லா (65) அங்கத்தினர்களுக்கும் வேலை கொடுப்பது என்பது இயலாததாகும். குறிப்பாக ஐந்து பேருக்குக் கூட நிரந்தரமான வேலை கொடுக்க முடியாது! எஞ்சுகின்ற அறுபது தொழிலாளர்களுடைய கதி என்னவாக இருக்கும்?

ஆரம்பிக்கும் தொழிலில் எடுத்த எடுப்பிலேயே லாபத்தை எதிர்பார்க்க முடியாது. அப்படியே இருந்தாலும் லாபத்தில் ஏழுரை சதவிகிதம் மாத்திரமே பங்குதாரர்களுக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டுமென்பது கூட்டுறவுச் சங்கத்தின் நிபந்தனை. இதன்படி ரூ. 20 பங்கு எடுத்துக் கொண்ட ஒருவருக்கு லாபம் இருக்குமானால் மாத்திரம் ஏழுரை சதவிகிதம் அதாவது ரூ. 1.50 வருடத்தில் 'டிவிடெண்ட்' ஆகக் கிடைக்கும். இதை மாத்திரம் வைத்துக்கொண்டு தொழில் எதுவும் செய்ய முடியாமல் ஒருவர் வருடம் முழுவதும் எப்படிக் குடும்பம் நடத்த முடியும்?

இந்த விவரங்கள் யாவும் தெளிவாக எடுத்துக் காட்டி மாகாண, மத்திய அரசாங்கங்களுக்கு எழுதி யிருந்தோம். கேரள அரசாங்கம் கூட்டுறவுச் சங்கத்தில் பங்குதாரர்கள் ஆகும் பொன் தொழிலாளர்களின் பொன்வேலை செய்வதற்கான சர்டிபிகேட்டுகளை ரத்து செய்ய வேண்டாம் என்று மத்திய சர்க்காரிடம் கேட்டுக் கொண்டது. அக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டு விட்டது. சர்டிபிகேட் விஷயமாகச் சட்டத்தில் எந்த வித மாறுதலும் செய்ய முடியாதாம். சர்டிபிகேட் வேண்டுமேயானால் கடன் தொகை ரூ. 7500 ஐயும் இம் மாதம் 31ந் தேதிக்குள் மாகாண அரசாங்கத்துக்குத் திரும்பக் கொடுக்க வேண்டுமாம். நாங்கள் என்ன செய்வது?

தலைவர், திருவனந்தபுர மாவட்ட பொற்கொல்லர் தொழிற் கூட்டுறவு சங்கம்.

## இது சிக்கனமா?

காங்கிரஸ் மந்திரிகளும், பாரதப் பிரதமரும் மக்களைச் சிக்கனமாக இருங்கள் என்று சொல்லி வருகிறார்கள். ஆனால் பொள்ளாச்சியில் வடபுற நகர எல்லையிலிருந்து தெற்குப்புற நகர எல்லை வரை சுமார் மூன்றரை மைலுக்கு (சர்க்கார் பாலிடெக்னிக் உள்பட) காமராஜர் பிறந்த நாள் விழாவுக்காகத் தீப அலங்காரங்கள் பிரமாதப்பட்டன. இந்த லட்சணத்தில் இந்த விழாவின்போது ஓரளவு மின்வெட்டு இருந்தது. மற்றும் ஐந்து யானைகள், வாணவேடிக்கை முதலிய வையுடன் நடபுடல்பட்டது. பல வியாபாரிகள், பொதுஜனங்கள், அவர் ஊர்வலமாகச் சென்ற தெருவில் அன்றாடக் கூலி வேலை செய்து பிழைத்து வரும் பாமரர்கள் ஆகியோரை காமராஜர் வருவதால் ரோட்டில் செல்லவிடாமல் போலீஸ் தடிகள் உபயோகித்துத் தன் புறுத்த விழா விமரிசையாக நடத்தப்பட்டது. இதுவா சோஷலிஸத்தின் சின்னம்?

'பசி வந்தால், ஏழைகளே அரிசி கிடைக்காவிட்டால் பழத்தையும் பாலையும் சாப்பிடுங்கள்' என்று சொன்னவரே அந்த மந்திரி விழாவை முன்னிட்டுப் பொள்ளாச்சிக்கு வந்திருந்தார்.

சிக்கனமாக இருங்கள் என்று சொல்லும் மந்திரிகளின் வீட்டுக்குச் சர்க்கார் அளித்த மின்விசிறி, அறையைக் குளிர்விக்கும் சாதனங்கள், நவீனநாற்காலிகள் முதலியவைகளுக்குச் செய்த செலவைப் பார்க்கும்பொழுது சிக்கனத்துக்கு இடம் எங்கே என்று தோன்றுகிறது. மக்களைக் காங்கிரஸ்காரர்கள் முட்டாள்களாக்குகிறார்கள். இதற்கு நாம் 1962ல் செய்த தவறே காரணமாகும். இந்த விழாவுக்கு ஏற்பட்ட செலவில் ஒரு பள்ளிக்கூடம் கட்டியிருக்கலாம்.

பொள்ளாச்சி
30—7—65

டைராஜ்





Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

